# குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத் திருக்கோவில்கள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**பா. தியாகராஜன்**

(பதிவு எண்: 1358)

நெறியாளர்

**முனைவர் வெ. திருவேணி**









**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசியத் தர மதிப்பீட்டுக் குழுவின் மறுதர மதிப்பீட்டில் "A" மதிப்புப் பெற்றது)

காரைக்குடி-630 003

தமிழ்நாடு - இந்தியா.


**ஜூலை - 2015**

முனைவர் வெ. திருவேணி M.A., M.Phil., Ph.D.,
உதவிப் பேராசிரியர் - நெறியாளர்,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

# நெறியாளர் சான்றிதழ்

**‘குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத் திருக்கோவில்கள்’** என்னும் தலைப்பில் **பா. தியாகராஜன்** அவர்கள் செய்துள்ள இவ்ஆய்வேடு அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் முனைவர் (Ph.D.) பட்டத்திற்காக இவரின் சொந்த முயற்சியால் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இந்த ஆய்விற்காக வேறு எந்த பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

08/07/2015

(வெ. திருவேணி)

நெறியாளர்

Dr. V. THIRUVENI, M.A., M.Phil., Ph.D
Assistant Professor in Tamil
Directorate of Distance Education
Alagappa University, Karaikudi-630 003
Tamilnadu, India.

நாள்: 08.07.2015.

இடம்: காரைக்குடி

8/7/2015

துறைத்தலைவர்
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003.

பா. தியாகராஜன்
முனைவர் பட்ட ஆய்வாளர்,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

# ஆய்வாளர் உறுதிமொழி

**'குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத் திருக்கோவில்கள்'** என்னும் தலைப்பில் காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத்தில் முனைவர் (Ph.D.) பட்டத்திற்காகச் செய்யப்பட்ட இவ்ஆய்வு என் சொந்த முயற்சியால் உருவானதாகும். இவ்ஆய்வேடு இதற்கு முன் எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்காகவும் அளிக்கப் பெறவில்லை என உறுதி கூறுகிறேன்.

8/7/15.

ஆய்வாளர் கையொப்பம்

(பா. தியாகராஜன்)

நாள்: 08.07.2015.

இடம்: காரைக்குடி

8/7/15

உறுதிக் கையொப்பம்

Dr. V. THIRUVENI M.A., M.Phil., Ph.D
Assistant Professor in Tamil
Directorate of Distance Education
Alagappa University, Karaikudi-630 003
Tamilnadu, India.

# நன்றியுரை

முனைவர்பட்ட ஆய்வாளராக என்னை ஏற்றுக்கொண்டு **‘குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத் திருக்கோவில்கள்’** எனும் தலைப்பில் ஆய்வு செய்ய அனுமதி அளித்த அழகப்பா பல்கலைக்கழகத்திற்கு எனது நன்றியை உரித்தாக்குகிறேன். அழகப்பா பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தர் பேராசிரியர் **முனைவர் S. சுப்பையா** அவர்களுக்கும் என் நன்றியை பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

அழகப்பா பல்கலைக்கழகத்தின் பதிவாளர் பேராசிரியர் முனைவர் **வெ. மாணிக்கவாசகம்** அவர்களுக்கு நன்றி.

கள ஆய்வு மேற்கொள்வதற்கு அனுமதி வழங்கிய குன்றக்குடி திருமடத்தின் தலைவராக அமர்ந்து அருளாட்சி புரியும் குருமகா சந்நிதானம் **தவத்திரு பொன்னம்பல அடிகளாருக்கு** என் வணக்கத்தினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திருமடத்தின் பணியாளர்களுக்கும், கள ஆய்வுக் கோவில் ஊழியர்களுக்கும், ஆதீன அன்பர் **திரு. வி. தியாகராஜன்** அவர்களுக்கும் நன்றி.

ஆய்வுப் பணிக்குத் தேவையான அனைத்துதவிகளும் அளித்து ஆய்வேடு சிறக்கவும், ஆய்வினை நன்கு முடிக்கவும் பல்லாற்றானும் உதவிய அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த் துறைத் தலைவர் பேராசிரியர் முனைவர் **மு. பாண்டி** அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி.

இத்தலைப்பினைத் தேர்வு செய்து என்னைத் தன் மாணவராக சேர்த்து ஆய்வினை மேற்கொள்ள உதவிய காலஞ்சென்ற முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் **முனைவர் இரா. பாலசுப்பிரமணியன்** அவர்களை நினைத்துப் போற்றி வணங்குகிறேன்.

ஆய்வினைத் தொடர தன் மாணவராக என்னைச் சேர்த்தும், செம்மையாக வழிநடத்தியும் ஆய்வினை முடிக்க உதவிய என் ஆய்வு நெறியாளர் **முனைவர் வெ. திருவேணி** அவர்களுக்கு நன்றியினைக் காணிக்கையாக்குகிறேன்.

மேலும் ஆய்வுப் பணி சிறக்க உதவிய அழகப்பா பல்கலைக்கழக பேராசிரியர் **முனைவர் சு. இராசாராம்** அவர்களுக்கு நன்றி.

ஆய்வினைத் தொடங்கும் போது இத்தலைப்பைக் கேட்டு எவ்வாறெல்லாம் இவ்ஆய்வினை கொண்டு செல்லலாம் என அறிவுரைகளையும், ஆய்வுரைகளையும் வழங்கிய அழகப்பா பல்கலைக்கழக இணைப்பேராசிரியர் **முனைவர் சே. செந்தமிழ்ப்பாவை** அவர்களுக்கு நன்றி.

ஆய்வுப் பணி சிறக்க உதவிய அழகப்பா பல்கலைக்கழகத்தின் உதவிப் பேராசிரியர் **முனைவர் மு. சுதா** அவர்களுக்கும் பிற பேராசிரிய பெருமக்களுக்கும் நன்றி.

எனக்கு ஆய்வு செய்ய அனுமதி கொடுத்த என் பள்ளிச் செயலர் **A. இராமநாதன் செட்டியார்** அவர்களுக்கும், நான் தமிழ்க்கடலில் மூழ்கி மூச்சுத் திணறிய போதெல்லாம் எனக்கு முத்தெடுத்துக் கொடுத்த பேராசிரியர் **முனைவர் மு. பழனி இராகுலதாசன்** அவர்களுக்கும் நன்றி.

கள ஆய்வுக்கு பெரும் உதவியாக இருந்த **முனைவர் க. மோகன்**, அழகப்பா அரசு கலைக் கல்லூரி, காரைக்குடி அவர்களுக்கும் என் நன்றியினை உரித்தாக்குகிறேன்.

என் ஆய்வுக்கு உறுதுணையாக இருந்த எனது பெற்றோர் **ஆ. பாலசுப்பிரமணியம்-அங்கயற்கண்ணி** அவர்களுக்கும், என் துணைவியார் **சு. பத்மா**, மகன் **விமலாதித்தன்** ஆகியோருக்கும் எனது நன்றி.

அழகப்பா பல்கலைக்கழக நூலகத்தாருக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**பா. தியாகராஜன்**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | | |
|---|---|---|---|
| 1. | தொ.ஆ. | : | தொகுப்பு ஆசிரியர் |
| 2. | ப.ஆ. | : | பதிப்பு ஆசிரியர் |
| 3. | ப. | : | பக்கம் |
| 4. | பக். | : | பக்கங்கள் |
| 5. | மேலது | : | மேற்குறிப்பிட்ட நூல் |
| 6. | மொ.பெ.ஆ. | : | மொழிபெயர்ப்பு ஆசிரியர் |
| 7. | பா.எண் | : | பாடல் எண் |
| 8. | P. | : | Page |
| 9. | PP. | : | Pages |

# உள்ளடக்கம்

# முன்னுரை

இறைவழிபாடு என்பது மிகப் பழங்காலத்திலேயே தோன்றியது. மனிதன் இறைவனுக்குக் கோவில் அமைத்து வழிபடும் நிலையும் மிகத் தொன்மைக் காலத்திலேயே ஏற்பட்டுள்ளது. பரம்பொருளை உணர்வதற்கான வழியாகப் பக்தி நெறியைப் பரப்புவதற்குக் கோவில்கள் மிக முக்கிய இடங்களாயின. பிரார்த்தனைக் கூடங்களாக மட்டும் இல்லாமல், இறைவன் உறையும் இடமாகவும் கோவில்கள் கருதப்படுகின்றன. ‘சத்தெனும் செம்பொருளை உன்னுதற்கும் போற்றுதற்கும் உரிய இடமாகக் கோவில்கள் கட்டப்பட்டன’ என்பர் திரு.வி.க.

உள்ளத்தில் வைத்து இறைவனைப் பூசை செய்தவர்கள், காலப்போக்கில் உருவ வழிபாட்டை உருவாக்கினார்கள். அதன் பயனாகக் கடவுளைக் காட்டும் கலைத்திறனாகிய சிற்பக்கலை செழித்தது. சிந்தனையில் எழுந்த தியானத் திருவுரு, செய்திறனாகச் செம்பிலும், கல்லிலும், மரத்திலும் உருவாயிற்று. உருவங்கள் அழகுக் கருவூலங்கள் ஆகி, மனத்துக்கண் பதிந்தன. கலைகளின் வழியாகக் கடவுளைக் கண்டு மக்கள் கருணையைப் பெற்றனர். அவ்வகையில் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீன வரலாறு, ஆதீனத்திற்கு உட்பட்ட கோவில்கள், அவற்றின் கலைச் சிறப்புகள், வழிபாட்டு முறைகள், ஆதீன நிர்வாகம் பற்றி ஆராய்வதாக இவ்வாய்வு அமைகிறது.

**ஆய்வுத் தலைப்பு**

**“குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத் திருக்கோவில்கள்”** என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

**ஆய்வு எல்லை**

குன்றக்குடித் திருமடத்திற்கு உட்பட்ட ஐந்து கோவில்களான, திருப்புத்தூர் திருத்தளிநாதர் திருக்கோவில், திருக்கோளக்குடி திருக்கோளநாதர் திருக்கோவில், பிரான்மலை மங்கைபாகர், திருக்கொடுங்குன்றநாதர் திருக்கோவில், குன்றக்குடி சண்முகநாதப் பெருமான் திருக்கோவில், சிறாவயல் தேனாட்சியம்மன் திருக்கோவில், குன்றக்குடி ஆதீனத் திருமடம் ஆகியவை ஆய்வு எல்லைகளாகும்.

**ஆய்வின் நோக்கம்**

கோவில்கள் மக்களின் வாழ்வாதாரத்தோடு இயைந்து காணப்படுவன. கோவில்கள் சமயப் பரப்பலுக்குப் பயன்பட்டதோடு, பக்தி நெறியினை ஊட்டும் இடமாகவும், கலையை வளர்க்கும் இடமாகவும் இருந்தன. மக்களின் சிக்கல்களுக்குத் தீர்வு காணும் பொது மன்றமாகவும் கோவில்கள் விளங்கின. பஞ்சமும், வறட்சியும் நிகழ்ந்த காலங்களில் மக்களுக்கு உணவளிக்கும் இடமாகவும் கோவில்கள் இருந்தன. இவ்வாறு மக்களின் வாழ்க்கையோடு கோவில்கள் இணைந்திருந்தன.

மன்னர்கள் கட்டிக்காத்த திருக்கோவில்களை, மடாதிபதிகள் நிருவகிக்கும் சிறப்புப் பெற்றார்கள். அவ்வகையில் தமிழகத்தின் தென்பகுதியில் திருமடம் அமைத்து, நாட்டின் பண்பாட்டையும், கலாச்சாரத்தையும் தெய்வீக ஈடுபாட்டையும் உலகம் முழுவதற்கும் பறைசாற்றிப் பெருமை சேர்த்தவர்கள் குன்றக்குடி ஆதீன முதல்வர்கள் ஆவர். தமிழ்ப்பணியோடு, சமயப் பணியாற்றிவரும் ஆதீனத்தின் செயல்பாட்டினையும், ஆதீனத்திற்குட்பட்ட கோவில்களின் குடைவரை அமைப்பு, கட்டடக்கலை,

ஓவியக்கலை, சிற்பக்கலை, வழிபாட்டு முறைகள் ஆகியவற்றையும் வெளிக் கொணருவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வுக் கருதுகோள்**

சிந்தனை, செயல் ஆகியவற்றை இறைவனின் வடிவாகவே அமைத்துக் கொண்டவர்கள், கலைகளின் வழியாகக் கடவுளின் அருளைப் பெற்றார்கள். குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்திற்கு உட்பட்ட ஐந்து கோவில்களில் காணலாகும் சிற்பக்கலை, ஓவியக்கலை, கட்டடக்கலை, குடைவரையின் அமைப்பு முறை ஆகியன மக்களின் வாழ்வியலோடு இணைந்துதான் அருள் பெறுதல் நிகழ்ந்தது என்பதே இவ்வாய்வின் கருதுகோளாக அமைகிறது.

**சான்றாதாரங்கள்**

குன்றக்குடி ஆதீனத் திருமடத்தின் தலவரலாற்று நூல், ஆதீனத்திற்குட்பட்ட ஐந்து கோவில்கள் குறித்த களஆய்வு ஆகியவை முதன்மைச் சான்றாதாரங்களாகும். கோவில் தொடர்பான இலக்கிய, வரலாற்று நூல்கள், குடைவரைக் கோவில்கள் பற்றிய நூல்கள், கல்வெட்டு, கோவிற்கலை தொடர்பான நூல்கள், குடமுழுக்கு விழா மலர்கள், நேர்காணல், திறனாய்வு நூல்கள், ஆய்வுக்கட்டுரைகள், அகராதிகள், கலைக்களஞ்சியங்கள் ஆகியவை துணைமைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறைகள்**

விளக்கமுறை என்பது Interpretation என்பதன் தமிழாக்கமாகும். இவ்வகைத் திறனாய்வு ஒரு படைப்பாக்கத்தை விளக்கி உரைப்பதாகும். பகுப்பாய்வு முறை என்பது இலக்கியப் படைப்பொன்றின் ஆக்கக் கூறுகளைப் பகுப்பாய்வு செய்வது நோக்குவதாகும். இந்தவகையில் இவ்வாய்வானது விளக்கமுறை அணுகுமுறையையும், பகுப்பாய்வு அணுகுமுறையையும்,

தொன்மம் படிமம் ஆகியவற்றை விளக்கும் வகையில் தொன்ம-படிமவியல் அணுகுமுறையையும் கொண்டு அமைக்கப் பெற்றுள்ளது.

**இயல் பகுப்பு**

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன. அவை,

1. **ஆதீனத் தோற்ற வரலாறும் திருக்கோவில்கள் அறிமுகமும்**
2. **குடைவரைக் கோவில்களின் அமைப்பு முறையும் கலைச்சிறப்பும்**
3. **கட்டுமானக் கோவில் அமைப்பு முறையும் கலைச்சிறப்பும்**
4. **வழிபாட்டு முறைகளும் விழாக்களும்**
5. **திருமடத்தின் நிருவாகம்**

என்பனவாகும்.

**இயல் விளக்கம்**

**ஆதீனத் தோற்ற வரலாறும் திருக்கோவில்கள் அறிமுகமும்** என்பது முதலாம் இயலாகும். சமயமும் சமுதாயமும் குறுக்கு நெடுக்கு இழைகளாகக் கொண்டு அடித்தட்டு மக்களின் மானம் காக்க சமத்துவ ஆடை நெய்யும் இடமாகக் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத் திருமடம் விளங்குகிறது. திருவண்ணாமலையிலிருந்து பிரான்மலைக்கும், பின் குன்றக்குடிக்கும் ஆதீனம் மாற்றம் பெற்றது. குருமுதல்வர்களின் வரிசை, அவர்கள் சமூகத்திற்கு ஆற்றிய பணிகள், தமிழுக்குச் செய்த தொண்டுகள், 46ஆம் பட்ட குருமுதல்வரின் சீரிய பணி, ஆதீனத்திற்குட்பட்ட ஐந்து கோவில்களின் அறிமுகம் ஆகியவை குறித்து இவ்வியல் விளக்குகிறது.

**குடைவரைக்கோவில்களின் அமைப்பு முறையும் கலைச்சிறப்பும்** என்பது இரண்டாமியலாகும். பெரிய மலைகளைக் குடைந்து அமைக்கப் பெற்ற கோவில்கள் குடைவரைக் கோவில்கள் எனப்பட்டன. பல்லவர்கால, பாண்டியர் கால, முத்தரையர் கால, அதியமான் கால, ஆய் மன்னர் காலக்

குடைவரைகளும், செட்டிநாட்டுக் குடைவரைக் கோவில்களும் குறித்து விளக்கப்பட்டுள்ளன. குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்திற்குட்பட்ட குடைவரைக் கோவில்களான, குன்றக்குடி குடைவரைக்கோவில், பிரான்மலைக் குடைவரைக்கோவில், திருக்கோளக்குடிக் குடைவரைக் கோவில், அவற்றில் காணப்படும் கலைச்சிறப்பு ஆகியவை குறித்து விரிவாக இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

மூன்றாம் இயலான **கட்டுமானக் கோவில்களின் அமைப்பும் திருவுருவ அமைதியும்** என்ற இயலில், தொன்மைக்கால கோவில்களின் அமைப்பு முறை, கோட்டங்களாக இருந்து கோவில்களாக மாறிய நிலைகள், மர வழிபாடு, பள்ளிப்படைகள், கோவில்களின் வகைகள் குறித்து விளக்கப்பட்டுள்ளன. திருமடத்திற்குட்பட்ட கட்டுமானக் கோவில்களான திருப்புத்தூர் திருத்தளிநாதர் திருக்கோவில், சிறாவயல் தேனாட்சியம்மன் திருக்கோவில் ஆகியவைகளின் அமைப்புமுறை, பின்பற்றப்பட்ட ஆகம விதிகள், திருவுருவ அமைதி, அக்கோவில்களில் காணப்படும் கலைச் சிறப்புகள் ஆகியவை குறித்து விளக்கப் பெற்றுள்ளன.

**வழிபாட்டு முறைகளும் விழாக்களும்** என்பது நான்காமியலாகும். இவ்வியலில், வழிபாடு தோன்றியதன் நோக்கம், வழிபாட்டின் வகைகள், வழிபாட்டிற்குரிய பொருட்கள், வழிபாட்டு மொழி, விழாக்களின் தத்துவங்கள், ஆதீனத் திருமடத்திற்குட்பட்ட ஐந்து கோவில்களில் நடைபெறும் வழிபாட்டு முறைகள், தினப்பூசைகள், மாதப்பூசைகள், சிறப்புப்பூசைகள், மாத விழாக்கள், ஆண்டு விழாக்கள் ஆகியவை குறித்து விளக்கப்பட்டுள்ளன.

**திருமடத்தின் நிருவாகம்** என்ற ஐந்தாமியலில் நிருவாகம், மேலாண்மை குறித்து விளக்கப்பட்டுள்ளன. ஆதீனத் திருமடமும், அதற்குட்பட்ட ஐந்து

கோவில்களும் இந்து அறநிலையத்துறையின் கட்டுப்பாட்டின் கீழ் இயங்குகின்றன. ஆதீன குருமுதல்வர்களின் நேர்த்தியான நிருவாக முறை, அவர்கள் கையாளும் திறன்கள், மற்றவர்களோடு கலந்தாலோசித்துச் செய்யும் ஒழுங்குமுறை, ஒளிவு மறைவு இல்லாத வரவு செலவுக் கணக்குகள், கோவில்களில் மேற்கொள்ளப்படும் செலவுகள், கோவில் நிலங்களின் வழியாகக் கிடைக்கும் குத்தகை வரவுகள், கோவில் இடங்களில் கட்டப்பட்டுள்ள கட்டடங்களின் வழியாக கிடைக்கின்ற வருமானங்கள், கோவில் பணியாளர்களுக்கு ஊதியம், குருக்கள் முதலானவர்களுக்கு விடப்பட்ட மானிய நிலங்கள், கோவிலுக்குச் சொந்தமான அசையும் சொத்துக்கள், அசையாச் சொத்துக்கள், அணிகலன்கள், பண்டகப் பொருட்கள் பற்றிய செய்திகள் தொகுக்கப்பட்டுள்ளன.

ஆய்வில் பெறப்பட்ட கருத்துக்கள் தொகுக்கப் பெற்று ஆய்வின் முடிவுகளாக இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளன. ஆய்வுக்குத் துணை செய்த நூல்கள், ஆய்வேடுகள், ஆய்வுக்கோவை, இதழ்கள் போன்றவை துணைநூற்பட்டியலாக இடம் பெற்றுள்ளன.

களஆய்வின் போது தகவலாளிகளிடமிருந்து பெறப்பட்ட பேட்டிகள், நிழற்படங்கள் ஆகியவை பின்னிணைப்பாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

## இயல்-1

## ஆதீனத் தோற்ற வரலாறும் திருக்கோவில்கள் அறிமுகமும்

காட்டாற்று வெள்ளம் போல ஓடியலைந்த மனிதனைப் பக்குவப்படுத்தி, விலங்கு நிலையிலிருந்து மனித நிலைக்கு உயர்த்தியது சமயம். அச்சமயத்தைச் சமுதாயத்திற்காகப் பயன்படுத்தி, தெய்வீகச் சமத்துவம் உருவாக்கிய பெருமை சைவ மடங்களைச் சேரும். மன்னர்களுக்குப் பிறகு, சமயத்தையும், இலக்கியங்களையும் வளர்த்தெடுத்தவர்கள் மடங்களின் தலைவர்கள் ஆவர். "பல்லவ, பாண்டியர் காலத்தில் தென்னாட்டில் நிலவிய சைவசமயம் மக்களுடைய வாழ்க்கையோடு பிரிப்பற ஒன்றுபட்டிருந்தது; நாட்டின் பொருளாதாரத்துக்கும் அரசியல், நீதி முதலிய துறைகட்கும் சைவக் கோவில்களே பெருநிலையங்களாக விளங்கின. கோவில்களில் கல்வியும் ஏனைக் கலைகளும் ஒருசேர வளர்க்கப்பட்டன"(1) என்பர் ஔவை துரைசாமி. தங்களைச் சுற்றியுள்ள கடைகோடி மனிதனின் அன்றாடச் சிக்கல்களைத் தீர்ப்பதிலும், சமுதாயத்தில் புரையோடிப்போய் இருக்கின்ற பிரச்சினைகளுக்கு முற்றுப்புள்ளி வைப்பதற்கான முயற்சிகளிலும் ஈடுபட்டுக் கொண்டுள்ள ஆதீனம் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம் ஆகும். ஆதீனக் கோவில்கள் அனைத்தும் இந்து அறநிலையத் துறையின் கட்டுப்பாட்டில் உள்ளன. இவ்வாதீனத் தோற்ற வரலாற்றினையும், அதன் நிருவாகத்திற்குட்பட்ட திருக்கோவில்களை அறிமுகப்படுத்துதலும் இவ்வியலின் நோக்கமாகும்.

### ஆதீனத் தோற்றம்

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம் திருவண்ணாமலையில் தோன்றியது. அதன்பின், பிரான்மலைக்கு இடப்பெயர்வு பெற்று, குன்றக்குடியில் நிலைபெற்றது. திருவண்ணாமலையில் தோற்றுவிக்கப்பட்டதால், இவ்வாதீனம்

“திருவண்ணாமலை ஆதீனம்” என்றும், பின்னர் குன்றக்குடியில் வந்து நிலைபெற்றுவிட்டதால் “குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம்” என்றும் அழைக்கப்பட்டு வருகிறது. இம்மடம் சிவகங்கை மாவட்டத்தில் திருப்புத்தூர் - காரைக்குடி வழிச்சாலையில் அமைந்துள்ளது.

இவ்வாதீனத்தைத் திருவண்ணாமலை தெய்வசிகாமணி சிவாச்சாரியார் கி.பி.1310ஆம் ஆண்டு நிறுவியுள்ளார். அதன்பின் 45 ஆதீனகர்த்தர்கள் இம்மடத்தை ஆட்சி செய்துள்ளனர். தற்போது 46ஆம் ஆதீனத் தலைவராகத் தவத்திரு பொன்னம்பல அடிகளார் உள்ளார். தமிழகத்துச் சுத்தாத்துவித சைவசித்தாந்தத் திருமடங்கள் பதினெட்டனுள் ஒன்று குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம். அவ்வாதீனத்தை, திருவண்ணாமலையில் குடி கொண்டுள்ள, அருள்மிகு அண்ணாமலை அண்ணலுக்கு நாள் வழிபாடும், சிறப்பு வழிபாடுகளும் செய்துவந்த ஆதி சைவ மரபினராகிய அருள்திரு தெய்வசிகாமணி தேசிகர் அண்ணாமலை நகரில் பதினான்காம் நூற்றாண்டில் நிறுவியருளியுள்ளார். அக்காலம் முதல் ஆதீனத் தலைவர்கள் முறையே திருவண்ணாமலையிலும், திருக்கொடுங்குன்றத்திலும், குன்றக்குடியிலும் எழுந்தருளி இருந்து அருளாட்சி புரிந்து வருகிறார்கள்[(2)] என்ற குறிப்பிலிருந்து ஆதீன வரலாற்றின் தோற்றம் பற்றி அறியமுடிகிறது.

**தமிழ்நாட்டில் ஆதீனங்கள்**

தமிழ்நாட்டில் பதினெட்டுச் சைவ ஆதீனங்கள் உள்ளன. அவை, திருவாவடுதுறை, காஞ்சிபுரம், தருமபுரம், சூரியனார்கோவில் (ஆடுதுறை), ஆகசிலம்பிரகாச ஆதீனம் (சிதம்பரம்), செங்கோல் ஆதீனம் (பெருங்குளம்-திருநெல்வேலி), திருஞானசம்பந்தர் ஆதீனம் (மதுரை), திருவண்ணாமலை ஆதீனம் (குன்றக்குடி), இராமேசுவரர் ஆதீனம், நீலம்பாடி (தஞ்சாவூர்), தாயுமான சுவாமிகள் ஆதீனம், சாரமாமுனி ஆதீனம் (திருச்சிராப்பள்ளி)

சொர்க்கபுரா ஆதீனம் (அம்பர்-திருமாகானம்), வேளாகுறிச்சி ஆதீனம் (திருவாரூர்), வள்ளலார் ஆதீனம் (சீகாழி), வருணை ஆதீனம் (வேதாரண்யம்), நாய்ச்சியார் கோவில் ஆதீனம் (கும்பகோணம்), நிரம்ப அழகிய தேசிகர் ஆதீனம் (மதுரை துழாவூர்) ஆகியவையாகும்.

**வாழையடி வாழையாக வந்த திருவண்ணாமலை ஆதீனத் தலைவர்களின் வரிசை:**

1) தெய்வசிகாமணி தேசிகர்,
2) தாண்டவராய தேசிகர்,
3) வினைதீர்த்த தேசிகர்,
4) கனகசபாபதி தேசிகர்,
5) வேலப்ப தேசிகர்,
6) சுப்ரமண்ய தேசிகர்,
7) உருத்திரகோடி தேசிகர்,
8) சதாசிவ தேசிகர்,
9) கண்ணப்ப தேசிகர்,
10) மாசிலாமணி தேசிகர்,
11) சந்திரசேகர தேசிகர்,
12) குமரகுரு தேசிகர்,
13) அம்பலவாண தேசிகர்,
14) அருணகிரி தேசிகர்,
15) கந்தப்ப தேசிகர்,
16) சுவாமிநாத தேசிகர்,
17) நாகலிங்க தேசிகர்,
18) குமராசாமி தேசிகர்,
19) திருச்சிற்றம்பல தேசிகர்,
20) சிதம்பரநாத தேசிகர்,
21) சிவக்கொழுந்து தேசிகர்,
22) நமச்சிவாய தேசிகர்,
23) அகத்தீசுவர தேசிகர்,
24) பொன்னம்பல தேசிகர்,
25) ஏகாம்பர தேசிகர்,
26) வைத்தியநாத தேசிகர்,
27) அண்ணாமலை தேசிகர்,
28) ஞானப்பிரகாச தேசிகர்,
29) ஆறுமுக தேசிகர்,
30) திருச்சிற்றம்பல தேசிகர்,
31) மருதநாயக தேசிகர்,
32) தாண்டவராய தேசிகர்,

33) சிவசுப்பிரமணிய தேசிகர்,
34) சாம்பசிவ தேசிகர்,
35) ஆறுமுக தேசிகர்,
36) அருணாசல தேசிகர்,
37) பொன்னம்பல தேசிகர்,
38) பெரிய ஆறுமுக தேசிகர்,
39) தாண்டவராய தேசிகர்,
40) நடராச தேசிகர்,
41) அண்ணாமலை தேசிகர்,
42) பொன்னம்பல தேசிகர்,
43) ஆறுமுக தேசிகர்,
44) தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் (தவத்திரு குன்றக்குடி அடிகளார்),
45) தெய்வசிகாமணி பொன்னம்பல தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் (தவத்திரு பொன்னம்பல அடிகளார்).

ஆதீனத் தலைவர்கள் தங்களின் பெயர்களுக்கு முன் குருமுதல்வரின் பெயராகிய தெய்வசிகாமணி என்பதைச் சேர்த்துக் கொள்வது மரபாகக் கொண்டுள்ளனர். ஆதீனத் தலைவர்களில் ஒன்று முதல் 16ஆம் பட்டம் வரை திருவண்ணாமலையிலும், 17 முதல் 30ஆம் பட்டம் வரை பிரான்மலையிலும் ஆதீனத் தலைமை இடத்தை வைத்திருந்தனர். பிரான்மலையிலிருந்து அருளாட்சிபுரிந்த குருமூர்த்திகளில் பலர் மிகக் குறைவான காலமே வாழ்ந்துள்ளனர். 31ஆம் பட்ட ஆதீனத் தலைவரின் காலத்திலிருந்து தற்போது வரை ஆதீனம் குன்றக்குடியில் இயங்கி வருகிறது. சிவலிங்க வடிவாய் அமைந்த காளத்தியப்பர், திருவண்ணாமலையில் அமைந்த ஆதீனத் திருமடத்திலும், பின் பிரான்மலையிலும், அதன்பின் அமைந்த குன்றக்குடித் திருமடத்திலும் பிரதிட்டை செய்யப்பெற்று வழிவழியாக ஆதீனக் குருமூர்த்திகளால் வழிபாடு செய்யப் பெற்று வருகிறார். அவ்வழிபாட்டின் போது ஆதீனத் தலைவர்கள் பூணூல் அணிகின்றனர். ஆதீனத்தைத் தோற்றுவித்த தெய்வசிகாமணி தேசிகர் சிவாச்சாரியார் என்பதால் அவர் பூணூல் அணிந்து வழிபாடு நடத்தியுள்ளார். அதன் நினைவாகத் தொடர்ந்து வந்த ஆதீன

முதல்வர்கள் வழிபாட்டின் போது பூணூல் அணியும் வழக்கத்தினை மரபாகக் கொண்டுள்ளனர்.

காளத்தியப்பருக்கு நாள்வழிபாடு குருமுதல்வரின் முன்னிலையில் நடைபெறுகிறது. அவர் இல்லாத போது, மடத்தின் தம்பிரான் அவ்வழிபாட்டினை நடத்துகின்றார்.

**ஆதீன மரபு**

இத்திருமடத்தில் தொண்டு செய்ய வருகிறவர்கள் முதலில் பூப்பிள்ளை என அழைக்கப் பெறுவர். அவர்கள் ஓரிரண்டு ஆண்டுகள் மடத்தில் பல பணிகள் செய்து தவசிப்பிள்ளை என ஆவர். அவர்களுள் மணவாழ்க்கை வாழ்வோர் ஆதீனத்தின் ஆதரவாளர்களாவும், சீடர்களாகவும் இருந்து பணி செய்வார்கள். துறவு வாழ்க்கை மேற்கொள்பவர்கள் துவராடை வழங்கப் பெற்றுக் குட்டி என்றழைக்கப் பெறுவர். குட்டி அனுபவம் பெற நாடுகள் பல சுற்றி, புனிதப் பயணம் மேற்கொள்வர். அதன்பின் குருமூர்த்திகளின் அருளாசி பெற்று வெளிவட்டாரத் தொடர்பு கொள்வர்.

நாடுகள் பல சுற்றியும், தம்மை உயர்த்திக் கொண்டும் உலக மக்களின் உடற்பிணியும், அறியாமைப் பிணியும் நீக்கும் தொண்டுகளில் ஈடுபட்டும், சைவசித்தாந்தச் செந்நெறி பரப்பியும், ஆதீன குருமூர்த்தியின் அருட் புகழ் பரப்பியும், பாத காணிக்கைகள் பெற்று, பெற்ற பொருளைத் தமக்கென எண்ணாமல், குருமூர்த்திக்குக் காணிக்கையாக்கிப் பரதேசி முத்திரை என்ற மரியாதையைப் பெறுவர்.

அத்தகு மரியாதை பெற்றவர், அந்தப் பெருமையில் மயங்காமல் தம்பிரான் அடியவராய்ச் சிலநாட்கள் திகழ்வர். அதன்பின் தம்பிரானாவர். பிறகு

பெரிய பூசைத் தம்பிரான் என்ற நிலைக்கு உயர்த்தப்படுவர். சைவக் கடவுளாகிய சிவனை வழிபட்டுப் பூசை செய்யும் பேற்றினால் ஆணவம் ஒடுங்கி குருமூர்த்தித் திருவடிகளில் தன்மனம் ஒடுங்கும் நிலை பெற்றவர் ஒடுங்கத் தம்பிரான் ஆவர். குருமூர்த்தி சார்பினால் குருமூர்த்திக்குரிய அடையாளம் யாவும் தன்னளவில் தோன்றும் சிறப்புடையவர் “சின்னப்பட்டம்” என்று அழைக்கப்பெறுவர். அதன்பின் குருமூர்த்தியின் காலத்திற்குப் பின்னால் அப்பட்டத்திற்குரியவராவர்.

மேற்குறித்த நடைமுறையின்படி ஒழுகி, ஒழுக்க சீலராக, 45ஆம் பட்டம் அருணாசல தேசிகரால் (தவத்திரு குன்றக்குடி அடிகளார்) “கந்தசாமித் தம்பிரான்” என்ற தீக்கைப் பெயருடன் மடத்தின் சின்னப்பட்டமாக ஆக்கப்பட்டு, 1995ஆம் ஆண்டு குன்றக்குடி அடிகளாரின் மறைவுக்குப் பின் மடத்தின் தலைவராகவும், ஆதீன கர்த்தவாகவும் (46ஆம் பட்டம் தவத்திரு பொன்னம்பல அடிகளார்) விளங்குகிறார்.

பூர்வாசிரம வாழ்க்கையில் அடிகளாரின் இயற்பெயர் கணேசன் என்பதாகும். அடிகளார் மதுரை யாதவா கல்லூரியில் இளங்கலை வேதியியல் பட்டம் பெற்றார்கள்.

**ஆதீனப் புலவர்களும் சிறப்புகளும்**

இத்திருமடத்தில் ஆதீனப் புலவர்களாக இருந்து அணி செய்தவர்கள் பலர். அவர்களில் வெண்பாப்புலிக் கவிராயர், வீரபத்திரக் கவிராயர், கணேச பண்டிதர் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர்.

மயூரகிரிக்கோவையைப் (கி.பி.1778) பாடிய சாந்துப்புலவர், யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர், வேம்பத்தூர் பிச்சுவையர்

(சிலேடைப்புலி) முதலிய புலவர்கள் பலர் ஆதீனத்தால் பாராட்டுப் பெற்றவர்களாவர்.

சிலேடைப்புலி வேம்பத்தூர் பிச்சுவையர் குன்றக்குடி சண்முகநாதருக்கு உலா இயற்றியுள்ளார். இவ்வுலா நூலில் அக்காலத்து ஆதீனச் சிறப்புகளும், ஐந்து கோவில்களிலும் நிகழ்ந்த நிகழ்ச்சிகளும் பாடப்பட்டுள்ளன. இதனை,

> "நந்தி பரம்பரையில் நல்(கு) அருணை ஆதீனத்(து)
> இந்து அணியோன் வாயால் இனி(து) இயம்ப வந்திலகு
> சைவா கமம்விளங்கத் தாரணியில் ஆலயங்கள்
> மைவார்பைங் கூழ்போல் மன்னிநிற்ப மெய்வயந்த
> சிறாரும் தெய்வ சிகாமணியென்றே உதித்துப்
> பாரான் குருமரபில் பார்க்கரன்போல் ஏராரும்
> தன்மகர்த்தா வாகிஇந்தத் தரணியெல் லாம்புகழும்
> சின்மயனாம் ஆறுமுக தேசிகன்"(3)

என்ற பாடலால், ஆதீனத்தைப் பற்றியும் ஆதீனத் தலைவரைப் பற்றியும் அறிந்து கொள்ள முடிகிறது.

தற்போது ஆதீனப் புலவராக மரு.பரமகுரு விளங்குகிறார்கள். 'குன்றின் மேலிட்ட குன்றா ஒளிவிளக்காய் பிரகாசித்திட்ட நம் குருமணி எனும் ஒளி விளக்கில் கருகும் திரியாகத் தம்மை கருக்கிக் கொண்டவர் ஆதீனப் புலவர் மரு.பரமகுரு' என்று பொன்னம்பல அடிகளாரால் பாராட்டப் பெற்றவர்.

குன்றக்குடி மடத்தின் சமய விழாவானாலும், இலக்கிய விழாவானாலும், பொது நிகழ்ச்சியானாலும் அவை சிறப்புப் பெறுவதற்குப் புலவரின் பங்களிப்பு பெருந்துணை நல்குகிறது. குன்றக்குடித் திருக்கயிலாயப் பரம்பரைத் திருவண்ணாமலை ஆதீன வரலாற்று நூலினை 1990இல் வெளியிட்டார். இந்நூல் ஆதீன அடியார்களின் வரிசையையும், அவர்கள் ஆற்றிய சமய, சமுதாய, தமிழ்ப்பணிகள் பற்றியும், ஆதீனச் சிறப்புகள் பற்றியும், வரலாற்றுச்

சான்றுடன் அறிந்து கொள்வதற்கு உதவியாக அமைந்துள்ளது. பறம்புமலை திருக்கொடுங்குன்றம், அடிகளார் உறவுப்பாலம், குன்றக்குடித் தலவரலாறு, முருகன் தமிழ்மாலை, மனச்சுவடு(கவிதை) போன்ற நூல்களையும் வெளியிட்டுள்ளார்.

**திருமடத்திற்கு வருகை புரிந்த தலைவர்கள்**

கட்சி வேறுபாடற்ற பொதுத்தன்மையுடன் பல கட்சித் தலைவர்களும் குன்றக்குடி ஆதீனத்திற்கு வருகை தந்துள்ளார்கள். அவர்களுள் முன்னாள் தமிழக முதல்வர் அண்ணாதுரை (1956, 1962), மு.கருணாநிதி (பாரி விழாவிற்கு வருகை, 1969) ஆச்சாரிய வினோபாபாவே (1956), இராசாசி (1957), ஈ.வே.ராமசாமி பெரியார், நம்பூதிரிபாட், பி.ராமமூர்த்தி, ப.ஜீவானந்தம், பாரதிதாசன், ப.கக்கன் முதலான பெருமக்கள் குறிப்பிடத்தக்கவர்கள். தற்போதும் பல அரசியல் தலைவர்கள் அவ்வப்போது வந்து செல்கின்றனர்.

கி.பி.1864ஆம் ஆண்டில் யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் இம்மடத்தில் சொற்பொழிவு ஆற்றியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

உ.வே.சாமிநாதையரின் ஆசிரியர் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை இம்மடத்திற்கு வந்தவர்களுள் குறிப்பிடத்தக்கவர் ஆவார். உ.வே.சாமிநாதையர் முதன்முதலில் சென்னைக்குச் சென்று தமிழ் இலக்கிய ஏடுகள் தேட முயன்ற போது இம்மடத்தைச் சேர்ந்த சரவண சுவாமிகள் தமது எழுபதாவது வயதிலும் அவர்களுடன் சென்று ஏடு இருக்கும் இடங்களையெல்லாம் காட்டி, அவைகளைப் பெறும் முறைகளையும் கூறி உதவியதை, தாம் எழுதிய என் சரித்திரம் என்ற நூலில் பாராட்டி உள்ளார். அவர் சிலப்பதிகார ஏடுகள் தேடுவதற்கு மிதிலைப்பட்டி என்னும் சிற்றூர்க்குச்

செல்ல இம்மடத்தின் தலைவரே உதவிபுரிந்துள்ளார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

**பட்டங்கள்**

தமிழ் அறிஞர்களுக்கும், சான்றோர்களுக்கும் இம்மடத்தின் சார்பாகப் பட்டங்கள் வழங்கிச் சிறப்பிக்கும் நிகழ்வு மிகவும் குறிப்பிடத்தக்க நிகழ்வாகும். முதுபெரும்புலவர், கவியரசர், கவிஞர்கோ, அருங்கலைக்கோன், ஏழிசைச்செல்வர், புலவரேறு, நடிகர்கோ, இசைவேள், செந்தமிழ் ஞாயிறு, நற்கதைநம்பி, நூலறி புலவர், சிறுகதை மன்னர், எழுத்து வேந்தன், செந்தமிழ் விறலி, தலைக்கோலாசானியர், தலைக்கோலரிவை, செந்தமிழ்க் காவலர், தமிழ்வேள், செந்தமிழ்த் திலகம், வள்ளல், பெரும்புலவர், எழுத்து வேந்தன், தமிழாகரர், தமிழாளியர், ஏழிசைத் தலைமகன், திருத்தொண்டர், பண்ணிசையரசு, திருமுறைச் செல்வர், சிற்பக் கலையரசர், சிற்பக்கலை வாரிதி, மெய்கண்ட செல்வம், சிவநெறிப் புரவலர், அறமனச்செம்மல், பதிப்புக்கலை அரசு, ஆதீனப்புலவர், ஆதீன வித்துவான், சைவசித்தாந்த வித்தகர், சைவமணி, திருப்பணிச் செல்வர், அறநெறி அண்ணல், ஏழிசை இளவரசு, உழவாரத் தொண்டர், கலைச்செல்வர், மக்கள் கவிஞர், சிவநெறிச் செம்மல், சித்தாந்தச் செம்மல் போன்ற பட்டங்கள் இவ்வாதீனத்தால் தக்கார்க்கு வழங்கப் பெற்றுள்ளன.

2006ஆம் ஆண்டு நடைபெற்ற குருபூசை மற்றும் வைகாசிப் பெருவிழாவில் சுகி.சிவம் அவர்களுக்கு நற்றமிழ் நாவலர் என்னும் பட்டத்தினை வழங்கிச் சிறப்பித்தார்கள். 2013ஆம் ஆண்டு சிங்கப்பூர் பேராசிரியர் திண்ணப்பன் அவர்களுக்குத் தமிழாகரர் என்ற பட்டத்தினை வழங்கிச் சிறப்பித்துள்ளார்கள்.

**ஆதீனத்தின் சமூகப் பணிகள்**

1977ஆம் ஆண்டு 2ஆம் நாள் குன்றக்குடி கிராமத் திட்டக்குழு உருவானது. சிற்றூர் மக்களுக்கு ஏற்றவாறு தொழில் நிறுவனங்கள் அமைக்கப் பெற்றன. அதன்பின் தொழில்நுட்பம் சார்ந்த தொழிலகங்கள் நிறுவப்பெற்றன. வீட்டுக்கு ஒருவருக்கு வேலை எனபதை நோக்கமாகக் கொண்டு வேலை வாய்ப்பு எல்லோருக்கும் வழங்கப் பெற்றது.

1984ஆம் ஆண்டு செப்டம்பரில் ஆங்கில இதழான "The Hindu"இதழ் அன்றைய பிரதமர் இந்திராகாந்தி "This is what I should like for all other villages" என்று குன்றக்குடி கிராமத் திட்டப்பணியினைப் பாராட்டி உள்ளதாகக் குறிப்பிட்டுச் செய்தி வெளியிட்டது.

மத்திய அரசின் திட்டக்குழுவின் வெளியீடான "Towards Improvement local level Planning for Rural Development" என்ற நூலில் குன்றக்குடித் திட்டக்குழுவின் அணுகுமுறைகளையும் செயல்முறைகளையும் விளக்கி, குன்றக்குடி திட்டம் முன்மாதிரியானது என்று குறிப்பிடப்பட்டுள்ளது என்பதை மடத்தின் வரலாறு காட்டுகிறது.

**குன்றக்குடியில் கூட்டுறவு நிறுவனங்கள்**

குன்றக்குடி கிராமத் திட்டக்குழுவின் மூலமாக, குன்றக்குடியில் கூட்டுறவு நிறுவனங்கள் பல செயல்பட்டு வருகின்றன. இவற்றால் ஏராளமான தொழிற்பணிகள் நடைபெற்று வருகின்றன. இத்தொழிற் பணிகளை,

(அ) குன்றக்குடியில் நிறுவப் பெற்றுள்ள கூட்டுறவு நிறுவனங்கள் (1977க்கு முன்பு)

(ஆ) திட்டக்குழுவால் அமைந்துள்ள கூட்டுறவு நிறுவனங்கள் (1977க்குப் பின்பு) என்று வகைப்படுத்திக் கூறுகின்றனர்.

**(அ) குன்றக்குடியில் நிறுவப் பெற்றுள்ள கூட்டுறவு நிறுவனங்கள்**

கூட்டுறவு நாணயச் சங்கம், வைகை அங்காடி, கூட்டுறவு பால் வழங்கும் சங்கம், கூட்டுறவு தொழிலாளர் ஒப்பந்தச் சங்கம், மருதுபாண்டியர் காதிகிராமத் தொழிற் கூட்டுறவுச் சங்கம், கூட்டுறவு கிராம வீடுகட்டும் சங்கம், திருவண்ணாமலை ஆதீனம் தேவாலயம் சிப்பந்திகள் சிக்கன நாணயக் கூட்டுறவு சங்கம், திருவள்ளுவர் மாணவர் கூட்டுறவுப் பண்டகசாலை, நல்வாழ்க்கைக் கூட்டுறவு சங்கம், நேருஜி பாலிதீன் தொழிலாளர் தொழிற் கூட்டுறவுச் சங்கம் என்பன குன்றக்குடியில் நிறுவப் பெற்றுள்ள கூட்டுறவு நிறுவனங்கள் ஆகும்.

**(ஆ) திட்டக்குழுவால் அமைந்துள்ள கூட்டுறவு நிறுவனங்கள்**

குன்றக்குடி பாரதி தொழிற் கூட்டுறவு குளோரேட் தொழிற்சாலை, குன்றக்குடி, பெரியார் முந்திரி தொழிலாளர் தொழிற் கூட்டுறவுச் சங்கம், பெரியார் முந்திரி ரெட்ஆக்சைடு பெயின்ட் தொழிற்சாலை, குன்றக்குடி பசுமைப் பண்ணை, அறிஞர் அண்ணா லெட் ஆசிட் பாட்டரி தொழிற்சாலை, கொரட்டி ஹெனாய் அலுமினிய கட்டடப் பொருள் தொழிற்சாலை, அரண்மனைப்பட்டி காமராசர் பாலிதீன் ஓவன் சாக்ஸ் தொழிற்சாலை போன்றவை திட்டக்குழுவால் அமைந்த கூட்டுறவு நிறுவனங்கள் ஆகும். அரசு மற்றும் தனியார் நிறுவனங்கள் செயல்பட்டு வரவும் இம்மடத்தின் தலைவர்கள் உறுதுணையாக இருந்து வருகின்றனர்.

**அரசு நிறுவனங்கள்**

கால்நடை மருந்தகம், நேமம் திருவளர் சோலை பழத்தோட்டம், அன்னை இந்திரா நேபாளித் தறிக்கூடம், பட்டுப்புழு வளர்ப்பு மாதிரிப்

பண்ணை, பனைநார் பிரஷ் தொழிற்சாலை, தேசிய ஆராய்ச்சி வளர்ச்சிக் கழகம் (ஹியூம்ளீ) போன்றவை அரசு நிறுவனங்களாகும்.

**தனியார் நிறுவனங்கள்**

சண்முகநாதன் அச்சகம், பாலமுருகன் மெட்டல் ஒர்க்ஸ், குன்றக்குடி எலக்ட்ரானிக்ஸ் ஆகியவை தனியார் நிறுவனங்களாகும்.

**கிராம ஏற்புத்திட்டப் பணிகள் இயக்கம்**

காரைக்குடி மைய மின்வேதியியல் ஆராய்ச்சி நிறுவன விஞ்ஞானிகளின் தொழிற்நுட்ப வழிகாட்டுதல் மற்றும் வங்கிகளின் ஒத்துழைப்புடன் பொதுமக்களே முன்னின்று நடத்தும் கிராம ஏற்புப்பணி இயக்கம் குறிப்பிடத்தக்கப் பணியாகும்.

1. குன்றக்குடி கிராம ஒருங்கிணைப்புத் திட்டக்குழு சிற்றூர்கள் 22.
2. திருக்கோளக்குடி கிராம ஒருங்கிணைப்புத் திட்டக்குழு சிற்றூர்கள் 8.
3. பிரான்மலை கிராம ஒருங்கிணைப்புத் திட்டக்குழு சிற்றூர்கள் 10.
4. கன்னிராசபுரம் கிராம ஒருங்கிணைப்புத் திட்டக்குழு சிற்றூர்கள் 5.
5. சிவகங்கை ஒன்றிய சிற்றூர்கள் 3.

குன்றக்குடி ஆதீன ஆதரவு பெற்று இயங்கிவரும் பொது நிறுவனங்கள் பின்வருமாறு:

அரிசன சேவா சங்கம், இசைஞானியார் மாதர் சங்கம், திருவள்ளுவர் தேசிய வாலிபர் சங்கம், திருக்குறள் பேரவை (கிளை), அருள்நெறித் திருக்கூட்டம் (கிளை), திருமுறை வகுப்பு, நேருமாமா சிறுவர் சங்கம், காமராசர் அருள்நெறிச் சிறுவர் பூங்கா, இளைஞர் அருள்நெறி மன்றம், அருள்நெறி திருக்கூட்டம் (மாதர் பகுதி), கிராம நலச்சங்கம் ஆகியவையாகும்.

**ஆதீனம் ஆற்றிவரும் கல்விப் பணிகள்**

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம் மற்ற ஆதீனங்களிலிருந்து மாறுபட்டுச் சமுதாயத்திற்குத் தேவையான பணிகளைத் தேவைப்படும் காலங்களில் எல்லாம் இடையறாது ஆற்றிவரும் ஆதீனமாகும். இம்மடத்தின் வழியாக அருள்நெறித் திருப்பணி மன்றம் ஏற்படுத்தப்பட்டுள்ளது. இந்த மன்றம் கல்விப் பணியை முதன்மை நோக்கமாகக் கொண்ட அமைப்பாகும். இந்தப் பணிகள் நன்கு வளர்ந்து, ஒரு முதல்தரக் கல்லூரியையும், இரண்டு மேல்நிலைப் பள்ளிகளையும், நான்கு உயர்நிலைப் பள்ளிகளையும், நான்கு நடுநிலைப் பள்ளிகளையும், மூன்று தொடக்கப் பள்ளிகளையும், இரண்டு பாலர் பள்ளிகளையும் உருவாக்கி 16 கல்வி நிறுவனங்களை நடத்தி வருகின்றது. பெரும்பாலான நிறுவனங்கள் சிற்றூர் பகுதி மக்களின் கல்வி வளர்ச்சியை நோக்கமாகக் கொண்டு அமைக்கப்பட்டுள்ளன என்பது இன்றியமையாச் செய்தியாகும்.

**கல்வி நிறுவனங்களின் பெயர்கள், ஊர்கள்**

1.தெய்வசிகாமணி அருள்நெறித் தொடக்கப்பள்ளி, குன்றக்குடி,
2.தருமைக் கயிலைக் குருமணி மேல்நிலைப்பள்ளி, குன்றக்குடி,
3. அறிஞர் அண்ணா சிறுவர் பள்ளி, குன்றக்குடி,
4. திருவள்ளுவர் அருள்நெறி நடுநிலைப்பள்ளி, தேவகோட்டை,
5. வள்ளல் பாரி மேல்நிலைப்பள்ளி, பிரான்மலை,
6. திருவள்ளுவர் அருள்நெறி நடுநிலைப்பள்ளி, கொறுக்கை,
7. சரசுவதி தொடக்கப்பள்ளி, மலையான் குத்தகை,
8. அருள்நெறி திருப்பணி மன்றம் உயர்நிலைப்பள்ளி, ஈரோடு,
9. அருள்நெறி உயர்நிலைப்பள்ளி, அம்மன்பேட்டை,
10. திருப்பதி அருள்நெறி மேல்நிலைப்பள்ளி, கள்ளிமந்தயம்,
11.கோமதி அருள்நெறி மகளிர் உயர்நிலைப்பள்ளி, களக்காடு,
12. பாலர் பள்ளி, களக்காடு,
13.அம்பேத்கர் தொடக்கப்பள்ளி, நாங்குநேரி,

14. அருள்நெறி இந்து நடுநிலைப்பள்ளி, திருமலையப்பபுரம்,

15. இந்து அருள்நெறி நடுநிலைப்பள்ளி, விசய அச்சம்பாடு,

16. திருவள்ளுவர் கல்லூரி, பொதிகையடி பாபநாசம்,

இவற்றோடு குன்றக்குடியில், திருவாதவூரர், திரு.வி.க புண்ணிய விடுதியும் (சிறுவர், சிறுமியர் விடுதி) நடைபெற்று வருகிறது.

**இனக்கலவரங்களின் போது ஆதீனம் ஆற்றிய பணி**

1982ஆம் ஆண்டு மண்டைக்காட்டில் நடந்த மதக் கலவரத்தை அறிந்து உடன் அங்கே சென்று குன்றக்குடி அடிகளார் அமைதிப் பணியில் ஈடுபட்டமை போற்றுதலுக்குரிய வரலாற்று நிகழ்வாகும். இந்துமதப் பெரியோர்கள், கிறித்துவப் பாதிரியார்கள், இசுலாமியப் பெரியோர்களைச் சேர்த்துக் கொண்டு ஊர்கள் தோறும் சென்று அமைதிப் பணியில் ஈடுபட்டார். எல்லாச் சமூகத்தினரின் ஒத்துழைப்பையும் வேண்டிப் பெற்றுத் தன்னை வருத்தி இறுதியில் அமைதியை ஏற்படுத்தி வெற்றிகண்டார். இத்தகைய கலவரங்களுக்கெல்லாம் தீர்வு மதநல்லிணக்கமே என்பதை நாகர்கோவிலிலிருந்த பொழுது எண்ணிப் பார்த்து அப்பொழுதே (1982 மார்ச்) இவர்கள் அமைத்ததுதான் திருவருட் பேரவை. அனைத்துச் சமயத்துத் தலைவர்களும் திருவருட் பேரவையில் உறுப்பினர்கள் ஆயினர். மதத்தின் பெயரால் இனிமேல் கலவரங்கள் நிகழாமல் தடுக்க ஒரே வழி அமைதி ஏற்படச் செய்தல் என்ற நிலைமை ஏற்பட்டது. தமிழகத்திலுள்ள பெருநகரங்கள் தோறும் இதன் கிளைகள் அமைத்துப் பணி செய்து வருகின்றன[(4)] என்பர்.

1990இல் திண்டுக்கல்லில் நடைபெற்ற சாதிக் கலவரத்தினை அடக்க அனைத்துக் கட்சியினரையும் ஒருங்கிணைத்துத் தாமும் உண்ணாநோன்பு இருந்து அமைதி ஏற்பட வழிவகை செய்தார். மிகவும் மாறுபட்ட நிலையில்

வாழ்ந்து திருமடத்தின் வழியே பாடுபட்ட தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் ஒரு கருத்து இவண் எடுத்துக்காட்டப்படுவது மிகவும் இன்றியமையாதது ஆகும். அவரின் கூற்று பின்வருமாறு: 'நமது பழைமை மனிதம் தழுவியது; செறிவானது; செழிப்பானது; நீதி சார்ந்தது; பழைமை வாய்ந்த மரபுகளைப் புதுப்பித்தாலே போதும்; இதுவே நமது குறிக்கோள்; நமது சமுதாயம் வேற்றுமைகள் அனைத்தையும் கடந்து ஒன்றுபட வேண்டும்; ஒருமைப்பாட்டு உணர்வில் கலந்து ஒரு குலமாகி, கூடி வாழ்தல் வேண்டும். நமது திருக்கோவில்கள் விளக்க முறுதல் வேண்டும் திருக்கோவில்களைத் தழுவி குடிகள் வாழ்தல் வேண்டும்; திருக்கோவில்கள் குடிமக்களைத் தழுவி நிற்க வேண்டும்; நாட்டு மக்களில் கடைக்கோடி மனிதனுக்கும் தேற்றம் வேண்டும்; தமிழ், துறைதோறும் வளரவேண்டும்; நாட்டு மக்கள் வறுமை, ஏழ்மையிலிருந்து மீட்கப்படுதல் வேண்டும்; இந்தக் குறிக்கோளுடன் தொடங்கப்பட்ட வாழ்க்கை நடந்து கொண்டிருக்கிறது' என்பர் அடிகளார்.

தமிழ்நாடு அரசு 1985ஆம் ஆண்டு, திருவள்ளுவர் விருது வழங்குவதைத் தொடங்கியபோது முதன்முதலாகத் திருவள்ளுவர் விருது குன்றக்குடி அடிகளார்க்கே வழங்கப்பெற்றது. சட்ட மேலவை உறுப்பினராகவும், குன்றக்குடி சிற்றூராட்சித் தலைவராகவும் அடிகளார் இருந்துள்ளார். 1989ஆம் ஆண்டு டிசம்பர் 14, அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் அடிகளாருக்குக் கௌரவ முனைவர் பட்டம் வழங்கப் பெற்றது. "குன்றக்குடி அடிகளார் மக்களுடன் கலந்து ஒன்றிவிட்ட பெரியார் ஆவார்... இத்தமிழ் முனிவரைப் புதுமைச் சிந்தனை மிக்க திருமூலர் என்று பாராட்டலாம்"[(5)] என்பர் தமிழண்ணல்.

சமுதாயத்தை நோக்கும் மாறுபட்ட சிந்தனையாளராக விளங்கும் பொன்னம்பல அடிகளார், "ஆன்மீகவாதிகள் சாதியைக் காட்டவில்லை. நிலப்பிரபுத்துவ சமூகம் சாதியைப் பெற்றெடுத்ததாய்! வளர்த்தெடுத்தத் தாய் புரோகிதச் சமயம். சமயம் இயக்கமாகப் பண்பட்ட நிலையில் இருந்தவரை, மனிதத்தை நேசித்தது. சமயம் நிறுவனமாக மாறிய பிறகு வேறுபாடுகளைப் பெரிதுபடுத்தி முரண்பாடுகளை உருவாக்கி மனிதத்தைப் பேதப்படுத்தியது. இன்றோ பண மதீப்பீட்டுச் சமூகம் முற்றிலுமாக மனிதத்தை மறந்துவிட்டது. எங்கும் எதிலும் பணமும், அதிகார ஆட்சி நடத்துகின்றன"(6) என்கிறார்.

**தமிழில் வழிபாடு**

தென்னாடுடைய சிவனுக்கு வடமொழியில் வழிபாடு நடத்துகிறார்கள். தமிழிலே வழிபாடு நடத்தினால் புரிந்து கொள்ள முடியாதா? என்ற வினாவை எழுப்பும் அடிகளார், "ஆகம, சாத்திரங்களின் பெயரால் மனிதர்கள் ஆலயங்களில் நுழைய மறுக்கப்பட்டார்கள். ஆலயம் பாழ்பட்டுவிடும் என்று ஆகம சாத்திரங்களின் பெயரால் தடுக்கப்பட்டார்கள். ஆனாலும் இன்று சட்டமும், சமூகநீதியும் அந்த உரிமையைப் பெற்றுத் தந்திருக்கின்றன. நுழையக் கூடாத மனிதர்கள் நுழைந்து விட்டார்கள் என்று ஆண்டவன் ஆலயத்தை விட்டு வெளியேறிவிடவில்லை. மனிதர்களைக் கோவிலக்குள் நுழைய விடாததைப் போல ஒரு மொழியைக் கோவிலக்குள் நுழைய விடாமல் செய்வதும் ஒருவகைத் தீண்டாமையே"(7) என்கிறார்.

திருக்கோவில்களில் சாதி வேறுபாடின்றி அனைவரும் அர்ச்சகராகலாம். இறைவனைத் தொட்டு வழிபாடு நடத்த சாதி ஒரு தடையாக இருக்கக் கூடாது. தகுதியும், சீலமும் உடையவர் யாராக இருந்தாலும் அர்ச்சகராகலாம் என்ற கருத்தினை உடையவராகப் பொன்னம்பல அடிகளார் திகழ்கிறார்.

## இலக்கியப் பணிகள்

மொழியின் வளர்ச்சியையும், உயர்வையும், உலகுக்குக் காட்டும் சாதனமாகவும், சமயத்தைப் பரப்பவும், மனிதர்களின் ஒழுக்கங்களையும், வாழ்வியல் உண்மைகளையும் அறிய உதவும் கருவிகளாகவும் இலங்குவன அந்தந்தக் கால இலக்கியங்களாகும். மடங்கள் சமயத்தைப் பரப்பிய போதிலும், பக்தியை ஊட்டிய போதிலும் தமிழ் இலக்கியங்களைக் காப்பதிலும், பரப்புவதிலும் முனைப்பாய் இருந்து வருகின்றன.

தமிழைத் தழைத்தோங்கச் செய்வதில் சைவ மடங்களின் பங்கு இன்றியமையாதது. காலத்தினாலும், கரையான்களாலும் அழிந்து போகாமல் தமிழைக் காப்பாற்றிய பெருமை சைவ மடங்களைச் சாரும்.

தமிழ்நாட்டில் திருமடங்கள் பல சைவத்தோடு தமிழையும் வளர்த்து வருகின்றன. “சமயங்களால் வளர்க்கப்பட்ட தமிழ் இரண்டு வகை. ஒன்று சமயத் தொண்டர்கள், பெரியார்கள், வளர்த்தமை. இரண்டு தொண்டு நிறுவனங்கள், மடங்கள் போன்ற நிலையங்கள் வளர்த்தமை. மடங்கள் வளர்த்த தமிழ் எனத் தனியொரு நூலே எழுதும் அளவிற்குச் சைவ, வைணவ மடங்கள் மாத்தமிழ் வளர்த்த மாண்பே மாண்பு”(8) என்பர்.

புறச்சமயங்களும், பிறமொழி மன்னர்களின் படையெடுப்பும் தமிழ் இலக்கியங்களை மட்டுமல்லாது பண்பாட்டையும் சிதைத்தன. இந்நிலையில் தமிழ்க் காப்பகங்களாக எழுந்த மடங்கள் தமிழ்ப் பணியைத் தொடங்கின. தமிழ் வளர்ச்சியில் முன்னோர் பங்கும், முடியுடை வேந்தர் பங்கும் நாடு நன்கறிந்தவையே. அதற்குப் பின்னர் செந்தமிழ் வளர்ப்பதையும் தங்களுடைய தலையாய கடமையென்று எண்ணித் தமிழ் வளர்ச்சியில் ஆதீனங்கள்

ஈடுபட்டன[9] என்பர் சோமலெ. அந்தவகையில் ஆதீனத்தின் வழிவந்த நூல்கள் பின்வருமாறு:

| | | |
|---|---|---|
| ஞானப்பிரகாச முனிவர் | - | சிவஞான சித்தியார் சுபக்க உரை |
| ஆறுமுகத் தம்பிரான் | - | பெரியபுராண உரை |
| குமாரசுவாமி முனிவர் | - | ஞானவந்தாதி, தெய்வசிகாமணி நான்மணிமாலை, சிற்குமாலை. |
| சிலேடைப்புலி வேம்பத்தூர் பிச்சுவையர் | - | சண்முகநாதர் உலா |
| வீரபத்திரக் கவிராயர் | - | குன்றக்குடிக் குறவஞ்சி |
| மரு.பரமகுரு | - | ஆதீன வரலாறு (உட்பட எட்டு நூல்கள்) |

போன்ற படைப்புகள் மடத்தின் வழி வந்துள்ளன. "சென்னையில் ஆதீனத்துக் கட்டளை மடத்தில் தம்பிரானாக இருந்த அருட்திரு ஆறுமுகத் தம்பிரான், பெரியபுராணத்துக்குத் திட்பமும் நுட்பமும் வாய்ந்த உரை வகுத்துள்ளார்கள். காசியாத்திரை மேற்கொண்டவர்கள் ஆதலால் காசி யாத்திரை மான்மியம் என்ற நூலும் இவரால் எழுதப்பெற்றது.

இரு மொழிப் புலமையும் இலக்கணத்திட்பமும், கற்பனை ஆற்றலும், கவித்திறனும், சாத்திரத் தோய்வும், சிவஞானச் செறிவும், கைவந்த நிட்டையும் கனவிலும் குருமுதல்வரையன்றிக் கருதாத் தகைமையும் வாய்ந்த இவ்வாதீனத்து அருட்திரு குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள், ஸ்ரீதெய்வசிகாமணி நான்மணிமாலை, ஸ்ரீதெய்வசிகாமணி சிற்குருமாலை, ஸ்ரீதெய்வசிகாமணி ஞான அந்தாதி என்ற அரிய மூன்று நூல்களை இயற்றியுள்ளார்கள்"[10] என்பர்.

ஆதீன அடியார்களில் 45ஆம் பட்டம் அடிகளாரின் பங்கு சிறப்புக்குரியதாகக் காணப்படுகிறது. அவர்கள் எழுதிய கலங்கரை விளக்கு,

பாரதத்தாய், புரட்சி பூத்தது, வள்ளல் பாரி, புதுவாழ்வு ஆகிய நாடகங்கள் குறிப்பிடத்தக்கனவாகும்.

அடிகளாரின் இலக்கியப் பணிகளை அறியும் பொருட்டுத் தமிழறிஞர் பெருமக்களின் முயற்சியால் அடிகளாரின் நூல்களை 15 தொகுதிகளாகத் தொகுத்து ஒவ்வொரு தொகுதியும் 400 பக்கங்களைக் கொண்டு மொத்தம் 6000 பக்கங்களை உடையதாக 'குன்றக்குடி அடிகளார் நூல் வரிசை' என்ற தலைப்பில் மணிவாசகர் பதிப்பகம் வெளியிட்டுப் பெருமை சேர்த்துள்ளது.

இம்மடத்தின் தற்போதைய தலைவர் பொன்னம்பல அடிகளார், ஆதீனப் புலவரின் துணையோடு மக்கள் சிந்தனை, அறிக அறிவியல் போன்ற மாத இதழ்களின் சிறப்பாசிரியராக விளங்குகிறார். ஒரு சமயத்தைச் சார்ந்தவராக இருந்தாலும், சமயம் என்பதைத் தாண்டி ஆன்மீகம், அறிவியல், மனிதநேயம் மிக்கவராகவும் அடிகளார் விளங்குகிறார்.

பொன்னம்பல அடிகளார் இதுவரை நான்கு நூல்களைப் படைத்துள்ளார். அவை, **'காற்றில் வந்த கருத்து மழை', 'உயிர்நாரில் தொடுத்த மாலை', 'நாள் ஒரு நயம்', 'தமிழ்ப் பண்பாடு'** ஆகியவையாகும். தம் கருத்துக்களுக்குச் சங்கப் பாடல்கள், பாரதி, பாரதிதாசன், பட்டுக்கோட்டையார் பாடல்களைச் சான்றுகளாக எடுத்துக்காட்டிச் சமுதாயத்தில் காணப்படும் சீர்கேடுகளைக் களைவதற்கான தீர்வுகளைக் கூறியிருக்கிறார்.

உலக வாழ்க்கைக்குத் தேவையானவற்றை இலக்கியங்கள் தரவேண்டும் என்பதில் ஓர் உறுதிப்பாட்டுடன் அடிகளார் இருக்கின்றார் என்பதை எடுத்துக்காட்டின் வழி உணரலாம்.

புராணங்களைப் பிறர் அறிந்ததற்கும், அடிகளாரின் அறிதிறனுக்கும் வேறுபாடு காணப்படுகிறது. சிவபெருமான், நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய மாணிக்கவாசகருக்காகக் கூலி ஆளாய் மதுரையில் மண் சுமந்து புண்பட்டார் என்பது எல்லோராலும் அறியபட்ட செய்தியாகும். இன்றைய நாட்களில் மனிதன் சோம்பேறிகளாகவும், குறுக்கு வழியில் குறுகிய காலத்தில் செல்வந்தர்களாகவும், உழைக்காமல் வாழவேண்டும் என்ற குறுகிய எண்ணம் கொண்டவர்களாகவும் இருப்பதைக் காண்கின்றோம்.

இதனைத் திருவிளையாடல் புராணத்தின் வழியே, கூலி வாங்கிக் கொண்டு வேலை செய்யாமல் இருந்தால் ஆண்டவனாகக்கூட இருந்தாலும் தண்டனை கிடைத்தே தீரும் என்ற உண்மையை இலக்கியத்தின் வழியே அடிகளார் காட்டுகிறார். உழைப்பு, உழைப்புக்கேற்ற கூலி, உணவு, இது வாழ்வின் அரிய தத்துவம். பிட்டைக் கூலியாகக் பெறுகிறான். வேலையைச் சரியாகச் செய்யாமல் மன்னனிடம் பிரம்படிபடுகிறான். இந்த நிகழ்வு நமக்கு எதை உணர்த்துகின்றது. அனைவரும் உழைக்க வேண்டும். ஆண்டி முதல் அரசன் வரை உழைக்க வேண்டும். பெற்ற கூலிக்கு ஏற்ற நியாயமான உழைப்பைத் தர வேண்டும். தர மறுத்தால் ஆண்டவனாய் இருந்தாலும் தண்டிக்கப்படுவான் என்ற அற்புத நீதியை,

"மண்சுமந்து கூலிகொண்டு அக்கோலால் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி

என்று திருவாசகம் பேசும்"[11] என்கிறார்.

ஆதீனத் தலைவர்களில் பொன்னம்பல அடிகளார் பகுத்தறிவுப் பாதையில் பயணிக்கின்றவராகக் காணப்படுகிறார். அன்றைய சமயம் அரசர்களின் சமயமாய் இருந்தது. இன்றைய சமயங்களை மக்களுக்கு விரும்பியதைத் தரும் அலாவுதீன் அற்புதவிளக்காக மக்கள் பார்க்கின்றனர்.

கேட்டதைத் தந்தால்தான் இறைவன்கூட நல்லவனாக ஆராதிக்கப்படுகிறான். இல்லையேல் அவனும் சாதாரண மனிதனின் கோபத்திற்கு ஆட்படுகிறான் என்கிறார்.

ஆண்டவன்கூட பணக்காரன், ஏழை என்கிற பாகுபாடுடையவனாகக் கருதப்படுகிறான். ஒரு சில கடவுளர்கள் பணங்கொழிக்கும் நிலையிலும், ஒரு சில கடவுளர்கள் அன்றாட பூசைக்கே தடுமாறுகின்ற நிலையில் இருப்பதையும் எடுத்துக்காட்டி அடிகளார் வருந்துகிறார்.

ஆன்மீகத் துறவியாக இருந்து கொண்டு கடவுளரை மட்டும் தரிசித்துக் கொண்டிருக்காமல், சமூகத்தின்மீது அக்கறை கொண்டு உழைக்கும் மக்களை, அவர்களின் வாழ்க்கையைக் கவனித்து உயர்த்தும் வழியில் அடிகளார் உழைத்து வருவதைக் காணலாம்.

**ஆதீனக் கிளைகள்**

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்தின் கிளைகள் கீழ்வருமாறு:

மதுரை, திருநெல்வேலி, சீர்காழி, சிதம்பரம், விருத்தாசலம், சென்னை, கும்பகோணம், நாகப்பட்டினம் ஆகிய நகரங்களில் இதன் கிளைகள் உள்ளன. இங்கே ஓரிருவர் பணியாற்றுகின்றனர். நிருவாகத்திற்குச் சொந்தமான நிலங்களிலிருந்து வருகின்ற வரி வருவாய்களைப் பெறுவது போன்ற பணிகளைச் செய்கின்றனர்.

**திருக்கோவில்கள் அறிமுகம்**

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீன நிருவாகத்திற்கு உரியதாக அமைந்த கோவில்கள் ஐந்தாகும். அவை,

1. பிரான்மலை - கொடுங்குன்றநாதர் கோவில்
2. திருப்புத்தூர் - திருத்தளிநாதர் கோவில்

3. திருக்கோளக்குடி - ககோளபுரீசுவரர் கோவில்

4. சிறாவயல் - தேனாட்சியம்மன் கோவில்

5. குன்றக்குடி - சண்முகநாதர் கோவில்

என்பனவாகும். இவை அனைத்தும் இந்து அறநிலையத்துறையின் தணிக்கைக்கு உட்படுத்தப்படுபவைகளாகும்.

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்திற்கு உட்பட்ட ஐந்து கோவில்களையும் இராமநாதபுரம் மன்னர் இரகுநாத சேதுபதி வழங்கியதாக அறியப் பெறுகிறது. "திருவண்ணாமலை ஆதீன மகாசந்நிதானம், தமது ஆளுகைக்கு உட்பட்ட திருச்சுழியலில் தங்கியிருப்பதை அறிந்த இராமநாதபுரம் மன்னர் இரகுநாத சேதுபதி (1675-1710) சந்நிதானம் பற்றிய அருட்செய்திகளை முன்னரே தெளிவாக அறிந்திருந்ததால், சந்நிதானத்தைத் தரிசித்து அருளாசி பெற திருச்சுழியல் வருகை புரிந்தார்.

குருமூர்த்தி தவத்திரு நாகலிங்க சுவாமிகளின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கிய சேதுபதி, சுவாமிகள் அருளாசி பெற்று, இராமேசுவரம் யாத்திரையைச் சுவாமிகள் மேற்கொள்ள உரிய ஏற்பாடுகளைச் செய்தார். தீர்த்தமாடி, வழிபாடு செய்து திரும்பிய தவத்திரு நாகலிங்க சுவாமிகளிடம், தம் இராமநாதபுரம் மறவர் சீமையிலே சுவாமிகள் தங்கியிருந்து அருள்நெறி பரப்ப வேண்டுமெனப் பணிவோடு வேண்டினார் சேதுபதி மன்னர். மன்னரின் வேண்டுதலைக் கனிவோடு ஏற்ற சுவாமிகள், திருக்கொடுங்குன்றம் என்னும் பிரான்மலையில் காளத்திநாதரை எழுந்தருளவித்து, அருளாட்சி புரியத் தொடங்கினார்கள். திருவண்ணாமலையில் இருந்து பிரான்மலைக்கு 1690இல் வந்தமைந்த ஆதீனத் திருமடத்தில், அன்றுமுதல் வழிவழி எழுந்தருளிய

மகாசந்நிதானங்கள், சேதுபதி வழங்கிய ஐந்து கோவில்களின் பரம்பரை அறங்காவலர் பொறுப்பேற்றார்கள்”(12) என்பர்.

**திருக்கொடுங்குன்றம்**

திருக்கொடுங்குன்றம் என்னும் பிரான்மலைத் திருத்தலம் சிவகங்கை மாவட்டம், திருப்புத்தூர் வட்டத்தில், திருப்புத்தூர் திண்டுக்கல் பெருவழிச் சாலையில் உள்ள சிங்கம்புணரிக்கு வடக்கே 12 கல் தொலைவில் உள்ளது. காரைக்குடியிலிருந்து 42 கல் தொலைவில் உள்ளது. இக்கோவிலின் பின்புறத்தில் 2450 அடி உயரமுள்ள மலை உள்ளது.

இத்திருக்கோவில், பாதாளம், பூமி, கயிலாயம் என்ற முப்பெரும் பகுதிகளாக அமைக்கப் பெற்றுள்ளது. மலையின் அடிவாரத்தைப் பாதாளமாகவும், அதற்கு மேல் உயரப் பகுதியைப் பூமியாகவும், அதன்மேல் உச்சிப் பகுதியைக் கயிலாயமாகவும் கொண்டுள்ளது.

பாண்டிய நாட்டில் பாடல் பெற்ற திருத்தலங்களில் இரண்டு குன்றங்கள் உள்ளன. அவை, கொடுங்குன்றம், பரங்குன்றம் என அழைக்கப்படுகின்றன. ‘கொடு’ என்றால் ‘வளைவு’ எனப் பொருளாகும். இயல்பாகவே வளைந்த முகடுடையது பறம்புமலை. எனவே, வளைந்த முகடுடைய குன்றம் என்னும் பொருளில் திருக்கொடுங்குன்றம் என அழைகப்பப் பெறுகிறது.

வள்ளல் பாரியின் அருமை அறியா உள்ளப் பொறாமை கொண்ட பகைவர், செய்த கொடுமைக் களமாக இக்குன்றம் அமைந்துவிட்டதால் கொடுங்குன்றம் எனக் கூறப் பெற்றிருக்கலாம் என்ற தவத்திரு அடிகளாரின் கருத்தும் ஒப்பு நோக்கத்தக்கது.

பாரி ஆண்ட பறம்பு நாடு முந்நூறு ஊர்களைத் தன்னகத்தே கொண்டது.

"முந்நூறு ஊர்த்தே தண்பரம்பு நல்நாடு
முந்நூறு ஊரும் பரிசிலர் பெற்றனர்
யாமும் பாரியும் உளமே"(13)

என்ற பாடல் மூலம் முந்நூறு ஊரும் பாரியும் கபிலரும் பறம்பு நாட்டின் அணிகலன்களாக விளங்கினர். புறநானூற்றுப் பாடல்கள் 105 முதல் 120 வரை பாரியின் பண்புகளைப் பற்றியும் பறம்பு மலையின் சிறப்பைப் பற்றியும் பேசுகின்றன.

பறம்புமலை, இரண்டாம் நூற்றாண்டில் முல்லைக்குத் தேர் தந்த வேள்பாரி ஆண்டதினால் பெரும் பெயர் கொண்டது. பாரி நாட்டை பறம்பு நாடு எனவும், பறம்புமலைச் சுனை, பனிச்சுனை எனவும் சங்க இலக்கியங்கள் இயம்புகின்றன. சங்கப் புலவர்களான கபிலர், ஔவை, மிளைக்கந்தனார், நக்கீரர், புறத்திணை நன்னாகனார், பெருஞ்சித்திரனார், நல்லூர் நத்தத்தனார் முதலியோர் வள்ளல் பாரியையும், பறம்புமலையையும் பாடியுள்ளனர்.

தற்போது பிரான்மலை என்றழைக்கப்படுகின்ற பறம்பு மலை சங்க இலக்கியத்தில் கடையேழு வள்ளல்களில் ஒருவனான பாரி வாழ்ந்த இடமில்லை என்பாரும் உளர். "பறம்புமலை ஒரு குளிர்ந்த மலை. அத்தோடு மட்டுமல்லாமல், பறம்பு நாட்டைச் சேர்ந்த முந்நூறு ஊர்களும் குளிர்ந்த ஊர்கள். எனவே தான் கபிலர் பாடும் போது 'முந்நூறு ஊர்த்தே தண் பறம்பு நன்நாடு' என்று பாடுகிறார். இந்த குளிர்ந்த பறம்புமலை தமிழ்நாட்டுக்கு அப்பால் கேரள-கர்நாடகத்தில் அமைந்திருப்பதைப் பல தமிழ் அறிஞர்கள் ஆய்வு செய்யாதது வருந்தத்தக்கது"(12) என்று தஞ்சை சுந்தரராசன் குறிப்பிடுகிறார்.

குன்றக்குடி ஆதீனப் புலவர் மரு.பரமகுரு தனது பறம்புமலை திருக்கொடுங்குன்றம் என்ற நூலில் தற்போதுள்ள பிரான்மலைதான் பாரியின் பறம்பு மலை என்று அறுதியிட்டுக் கூறியுள்ளார். "பிறம்பு நாடு என்பது பிரம்பூர் எனவும் மருவி வழங்கி வருகிறது. நகரத்தார்கள் ஒரு பிரிவாகிய மாற்றூர்க் கோவிலைச் சேர்ந்தவர்கள் தங்கள் திருமணங்களில் எழுதும் இசைவுப் பிடிமானத்தில் கேரள சிங்க வள நாடாகிய பிரம்பூர் நாட்டில் என்று இன்றளவும் எழுதி வருகிறார்கள்"[15] என்று சோமலெ குறிப்பிடுகிறார். சோமலெயின் கூற்றுப்படியும் தஞ்சை சுந்தரராசன் கூற்றுப்படியும் நோக்கும் போது, பிரான்மலை பாரியின் பறம்புமலை தானா? என்ற ஐயப்பாடு ஆய்விற்குரியதாகிறது. பாண்டி நாட்டிலுள்ள பறம்பு மலையையும், அதை அடுத்த முந்நூறு ஊர்களையும் ஆண்டு வந்தான் பாரி"[16] என்ற ரா.பி.சேதுபிள்ளையின் கூற்றும் நோக்கத்தக்கது.

மலையின் அடிவாரத்தில் தென்மேற்கு மூலையில் கிழக்கு நோக்கித் தொடங்கிச் செல்லும் வழியில் துரைராசா மண்டபம் உள்ளது. வடபால் பெரு மதிலுக்கிடையில் பிரதான திருவாயில் உள்ளது.

திருக்கோவிலின் தெற்கு மதிலுக்கும் வடபால் மலையின் அடிவாரப் பாறைக்கும் இடையே, கிழக்குக் கோடியில் 'தேனாடித் தீர்த்தம்' உள்ளது.

திருக்கோவில் கல்வெட்டில் (கி.பி.1264) 'திருக்கொடுங்குன்றமுடைய நாயனார் திருக்கோவிலில் திருநாவுக்கரசு மண்டபத்து..' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அதனால், அக்காலத்தில் திருநாவுக்கரசு மண்டபம் என அழைக்கப் பெற்றிருக்கலாம்.

திருக்கொடுங்குன்றநாதர் கோவிலின் திருச்சுற்றில் வடமேற்கு மூலையில் அம்பிகையின் சந்நிதிக்குச் செல்லும் வழியில், சுப்பிரமணியசுவாமி திருக்கோவில், அன்னை குயிலமுத நாயகி திருக்கோவிலில் திருச்சுற்றுடன் இணைந்துள்ள தனிக்கோவிலாக உள்ளது.

இத்திருக்கோவில் திருப்பணிகள் பாண்டிய மன்னர்கள், பிற்காலச் சோழ மன்னர்கள், விசயநகர மன்னர்கள், சிவகங்கை மன்னர்கள் போன்றோரால் செய்விக்கப் பெற்றுள்ளன. இரண்டாம் பராந்தகன், சுந்தர சோழன், துவராபதி வேளாண் முதற் குலோத்துங்கசோழன், மாறவர்மன் சுந்தரபாண்டியன் ஆகியோர் திருப்பணிகள் பற்றிய கல்வெட்டுகள் குறிப்பிடத்தக்கவை.

இக்கோவிலில் ஆகம முறைப்படி பூசைகள் நடைபெறுகின்றன. விளாப்பூசை, காலசந்தி, உச்சிக்காலம், சாயரட்சை (மாலை), அர்த்தசாமம் ஆகிய காலப் பூசைகள் நடைபெறுகின்றன. தேனும் தினைமாவும், பொறி, தோசை ஆகியவையும் பிரசாதங்களாக வழங்கப் பெறுகின்றன.

மங்கைபாகர் இறைவியுடன் திருமணக்கோலத்தில் காட்சியளிக்கிறார். இக்குடைவரைக்கோவில் ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்த பாண்டியர்களின் குடைவரைக் கோவில்களைப் போன்று அமைக்கப் பெற்றுள்ளது. திருக்கொடுங்குன்றக் கோவிலுக்கு உட்கிடையாக மங்கைபாகர் திருக்கோவிலும், மங்கைபாகர் திருக்கோவிலுக்கு உட்கிடையாக சதுர்வேதமங்கலம் ஆத்மநாயகி உடனாய ருத்ரகோடீசுவரர் திருக்கோவிலும் உள்ளது. அதன் உட்கிடையாக அரளிப்பாறை தண்டபாணிசுவாமி திருக்கோவிலும் உள்ளது.

**ஆத்மநாயகி உடனாய ருத்ரகோடீசுவரர் திருக்கோவில்**

திருக்கொடுங்குன்றம் கோவிலுக்கு உட்பட்ட அன்னை ஆத்மநாயகி உடனாய ருத்ரகோடீசுவரர் திருக்கோவில் மட்டியூர் என்று அழைக்கப் பெறும் சதுர்வேத மங்கலத்தில் அமைந்துள்ளது. பிரான்மலையிலிருந்து தெற்கே ஐந்து கல் தொலைவில் திருப்புத்தூர் சிங்கம்புணரி சாலையில் அமைந்துள்ளது.

இவ்வூர் மட்டியூர் என்ற சதுர்வேதமங்கலம் என்றே அழைக்கப் பெறுகிறது. மன்னர்கள் வேதம் செய்யும் பிராமணர்களுக்கு ஊர்களையும், நிலங்களையும் தானமாக வழங்கினர். அவ்வாறு வழங்கப் பெற்ற தானங்கள் பிரமதேயங்கள் என அழைக்கப் பெற்றன. அவைகளுக்கு வரிவிலக்குச் செய்தும் உதவினர். வேதம் செய்யும் பிராமணர்களுக்குக் குடியிருப்புகளை ஏற்படுத்திக் கொடுத்தனர். அக்குடியிருப்புகள் சதுர்வேதமங்கலம் என அழைக்கப் பெற்றன.

இத்திருக்கோவிலின் முதல் திருச்சுற்றின் தென்புறச் சுவரில், தட்சிணாமூர்த்தியின் எதிர்நிலையில் உள்ள கல்வெட்டில் மட்டியூர் என்று உள்ளது.

இத்திருக்கோவில் பாண்டியர் வரலாற்றோடு நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. கல்வெட்டுக்களில் உருத்திர கோடீசுவரமுடைய நாயனார் கோவில் என்கிற பெயரே பரவலாகக் காணப்படுகிறது. இக்கோவிலிலுள்ள இறைவி நாச்சியார் என்று குறிக்கப்பட்டுள்ளது. ஆத்மநாயகி என்ற பெயர் குறிக்கப் பெறவில்லை.

ஊரின் வடபுறத்தில் அமைந்துள்ள இத்திருக்கோவில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம், நந்தி, பலிபீடம்,

கொடிமரம் ஆகியவை உள்ளன. இராசகோபுரங்கள் இல்லா நிலையில் கருவறையின் மேல் விமானங்கள் உள்ளன. பன்னிரு திருமுறை மண்டபம், அளிஒட்டிக்கால் மண்டபம், யாகசாலை போன்ற பகுதிகளும் திருக்கோயிலைச் சார்ந்துள்ளன.

சூரியன், விநாயகர், சுப்பிரமணியர், சண்டேசுவரர், பைரவர் ஆகிய பரிவாரத் தெய்வங்கள் காணப்படுகின்றன. முன்மண்டபத்தின் தென்புறத்தில் கிழக்கு நோக்கியதாக இடம்புரி விநாயகர் கோவிலொன்று உள்ளது. கல்லூரணித் தீர்த்தமும், தலவிருட்சமாக வில்வமரமும் உள்ளன.

**திருத்தளிநாதர் கோவில்**

திருத்தளிநாதர் திருக்கோவில், காரைக்குடியிலிருந்து 20 கல் தொலைவில் காரைக்குடி-மதுரை பெருவழியில் அமைந்துள்ளது. கருங்கற்களை ஒன்றின் மேல் ஒன்றாக அடுக்கிக் கட்டப்பட்ட கோவில்கள் கற்றளி என அழைக்கப்பட்டன. தளி என்றால் கோவில். கல்தளி = கற்றளி ஆயிற்று என்பர். திருத்தளி என்றால் திருக்கோவில் என்று பெயர். இக்கோவிலிலுள்ள இறைவன் திருத்தளிநாதர் என்று அழைக்கப்பெறுகிறார்.

சம்பந்தர் தேவாரம், அப்பர் தேவாரம், அருணகிரிநாதர் திருப்புகழ், சிவகங்கைக் கும்மி, சிவகங்கை அம்மானை, திருப்புத்தூர்ப் புராணம், சேதுபுராணம், சூரைக்குடி புராணம், மயூரகிரி புராணம், திருப்புத்தூர் பதிற்றுப்பத்தந்தாதி, பாடுவார் முத்தப்பரின் வாழ்க்கை வரலாறு ஆகிய இலக்கியங்கள் திருப்புத்தூரைப் பற்றிக் குறிப்பிடுகின்றன.

புராணச் சிறப்பும், இலக்கியப் பெருமையும், வரலாற்று அருமையும் கொண்ட பாடல் பெற்ற பழமையான கோவிலாக அறியப்பெறுகிறது.

‘ஓங்குகோவில் உறைவார்’ என ஞானசம்பந்தரும், ‘திருத்தளியான்’ என நாவுக்கரசரும் சிறப்பித்துப் பாடியுள்ளனர். மூல மூர்த்தியாக விளங்கும் இறைவன் தோற்றுவிக்கப்பட்டவரல்லர். சுயம்புவாக உருவானவர் என்ற கருத்தும் நிலவுகிறது. “அப்பர் சுவாமிகள் திருப்புத்தூர்த் திருப்பதிகத்தில் மூன்றாம் திருப்பாடலில் “நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி நற் கனகக் கிழி தருமிக்கு அருளினோன் காண் எனும் அரிய செய்தியை அருளியுள்ளார்”[15] என்பர்.

இக்கோவில் பாண்டியர் கால கட்டட அமைப்பைச் சார்ந்தாகக் காணப்படுகிறது. கருவறையின் நிலை மகர தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளது. அர்த்த மண்டபத்தின் வாயிலில் துவார பாலகர் சிற்பங்கள் உள்ளன. மூன்று தள விமானம் முழுவதும் கற்களால் உருவாக்கம் செய்யப்பட்டுள்ளது. விமானத்தின் கலசமும், சிகரமும் சதுர வடிவமான நாகர அமைப்புப் பெற்றுள்ளன.

திருத்தளிநாதர் திருக்கோவிலுக்கு இடதுபுறத்தில் அம்பாளின் தனிக்கோட்டம் அமைந்துள்ளது. இந்த இறைவி சிவகாமசுந்தரி, சிவகாமியம்மை என்று அழைக்கப்பெறுகிறார். இச்சந்நிதி கி.பி.12ஆம் நூற்றாண்டில் அமைக்கப் பெற்றதைக் கல்வெட்டுச் செய்தியின் வாயிலாக அறியமுடிகிறது. அக்கல்வெட்டுகளில் அம்மை திருக்காம கோட்டமுடைய நாச்சியார், திருப்பள்ளியறை நாச்சியார் என உள்ளது. விசயநகர மன்னன் அச்சுத தேவராயரின் கி.பி.1530ஐச் சேர்ந்த கல்வெட்டு ஒன்று (112-1908) இக்கோவிலில் உள்ளது.

"சீதளி நதியும்பல சிங்காரத் தோப்பும்
தேரோடும் வீதிகளும் பட்டணமும் கடையும்
ஆதவன்மண் டலமடுத்த கோட்டை கொத் தளமும்
அகிலநிறை வாவிகளும் கோவில்சிக ரமுமாம்
சாதிநிறை நான்குபல; குன்றைவன மான
தனித்திருப்புத் தூர்க்கருப்பர் தாள்போற்றி மேவும்
மாதுசிவ காமிதிருத் தளிநாத ருடனே
வடுகேச ரும்புகழு மருதம்பிள்ளை யாரே!"

என்ற பாடுவார் முத்தப்பரின் பாடலின் வழியே திருப்புத்தூரின் வளமையும் செழுமையும் அறியப் பெறுகிறது.

**ககோளபுரீசுவரர் கோவில்**

ககோளபுரீசுவரர் திருக்கோவில் பூமி, அந்தரம், சுவர்க்கம் என்ற மூன்று அடுக்குகளில் அமைந்த மலைக்கோவிலாகும். புதுக்கோட்டை மாவட்டம் இராங்கியத்திலிருந்து ஐந்து கல் தொலைவிலும், பொன்னமராவதியிலிருந்து பதின்மூன்று கல் தொலைவிலும் இத்திருக்கோவில் அமைந்துள்ளது.

திருக்கோளபுரம், ககோளபுரம், ககோளகிரி, சிவதருமபுரம் என்றும் இவ்வூர் அழைக்கப்பெறுகிறது. வட்ட வடிவக் குன்றுகள் (உருண்டை வடிவ பாறைகள்) ஒன்றோடு ஒன்று ஒட்டிக் கொண்டிருப்பது போல் அமைந்துள்ளன.

குடைவரைக்கோவிலாக அமைக்கப் பெற்றுள்ள இக் கோவிலில், பொய்யாமொழீசர், சிவதருமபுரீசர், ககேளபுரீசர் ஆகிய இறைவனது சந்நிதிகளும், மரகதவல்லி, சிவகாமவல்லி, ஆத்மநாயகி ஆகிய இறைவியின் சந்நிதிகளும் உள்ளன. மலையின் உச்சியில் வடபுறத்தே வள்ளி, தெய்வானையுடன் கூடிய சுப்பிரமணிய சுவாமி நின்ற கோலத்தில் அமைந்த கோவில் தற்காலத்தில் கட்டப்பெற்றுள்ளது.

**தேனாட்சியம்மன் கோவில்**

இக்கோவில், உய்யக்கொண்டான் சிறாவயலில் உள்ளது. இது, சிவகங்கை மாவட்டம் காரைக்குடி குன்றக்குடி திருப்புத்தூர் பெருவழிச் சாலையில் பிள்ளையார்பட்டியிலிருந்து தெற்கே சிறாவயல் சாலையில் ஐந்து கல் தொலைவில் உள்ளது.

சிறுதெய்வ வழிபாட்டில் அமைந்த இக்கோவில் பெருந்தெய்வ மரபிற்குரிய கோவில் உறுப்புகளைக் கொண்டுள்ளது. இக்கோவிலில் ஆண்டுதோறும் ஆடி மாதம் இரண்டாவது வெள்ளிக்கிழமையில் அம்மனுக்குச் சிறப்புப் பூசை நடைபெறுகிறது. நகரத்தார்களின் குலதெய்வமாக இவ்விறைவி வணங்கப்படுகிறாள். தேனாட்சியம்மனுக்கு எதிரே கூப்பிய கரத்துடன் இடைச்சியம்மன் நின்ற கோலத்தில் இருக்கிறாள்.

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்தின் குருமுதல்வர்களின் மேற்பார்வையில் பராமரிப்புப் பணிகள் நடந்துவருகின்றன. 1972, 1988ஆம் ஆண்டுகளில் குடமுழுக்கு நடைபெற்றுள்ளது. நான்கு காலப் பூசைகள் நடைபெற்று வருகின்றன.

திருக்கோவிலுக்கு வடமேற்கே இரு குதிரைகளோடு அமைந்த கருப்பர் கோவில் உள்ளது. மண்டபத்தின் தூண் ஒன்றில் நின்ற அழகுடன் செதுக்கப்பட்டிருந்த மின்னஞ் செட்டியார் சிலை உடைக்கப்பட்ட நிலையில் இரண்டு பாதங்கள் மட்டுமே இப்போது எஞ்சியுள்ளது. இதனை 'மின்னஞ் செட்டியார் காளி' என அழைக்கின்றனர்.

**குன்றக்குடி சண்முகநாதர் திருக்கோவில்**

குன்றினை இடமாகக் கொண்டு குடி அமைந்திருப்பதால் குன்றக்குடி எனப் பெயர் வழங்கலாயிற்று. குலகிரி, துங்கக்கரி உயர் குன்றக்குடி என்று

அருணகிரிநாதரால் போற்றப்பெற்ற இத்திருத்தலம் ஒரு மலைக்கோவிலாகும். இது திருக்கயிலாயப் பரம்பரைத் திருவண்ணாமலை ஆதீனத்தைத் தன்னகத்தே கொண்டு விளங்குகிறது. சிவகங்கை மாவட்டம் காரைக்குடி திருப்புத்தூர் வழிச்சாலையில் இவ்வூர் அமைந்துள்ளது. "மயூரநகரம், அரசவனம், கண்ணபுரம் மயில்மலை (மயூரகிரி, சிகண்டிமலை, சிகிமலை, தோகைமலை, குன்றக்குடி (குன்றைநகர், குன்றை) எனப் பல பெயர்கள் இத்தலத்துக்கு வழங்கப்பெறுகின்றன."(18)

இத்திருக்கோவிலின் மூலவர் சண்முகநாதப் பெருமான். ஆறுதிருமுகங்களோடும், பன்னிரு திருக்கரங்களோடும் காட்சியளிக்கிறார். மலையடிவாரத்தில் விநாயகர் கோவில் உள்ளது. கோவிலின் நேர்கிழக்கே ஒற்றைக்கால் மண்டபத்துடன் கூடிய சண்முகநதி என்ற திருக்குளம் உள்ளது. இக்கோவிலுக்கு வடக்கே பாறையின் மீது அமர்ந்த கோலத்தில் சிற்றூர்த் தேவதையாக வீரமாகாளியம்மன் கோவில் உள்ளது.

இராமநாதபுரம் சேதுபதிகள் இக்கோவிலுக்குத் திருப்பணிகள் செய்துள்ளனர். இக்கோவிலுக்குத் திருப்பணிகள் செய்தவர்களில் சிவகங்கை அரமணமனையில் அமைச்சராக இருந்த தாண்டவராய பிள்ளையும் ஒருவராவர். இது குறித்து மிதிலைப்பட்டி குழந்தைக் கவிராயர் மான்விடுதூது (கண்ணி145-149) என்ற கவிதையில் பாராட்டியுள்ளார்.(19) சிவகங்கையை ஆண்ட குறுநில மன்னர்களான மருதுபாண்டியர்கள் இக்கோவிலக்கு வழங்கிய கொடைச் சிறப்பும் அறியப்பெறுகிறது.

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்தின் குருமுதல்வர்கள் பரம்பரை அறங்காவலர்களாக உள்ளனர். பல குடநீராட்டுகளைச் செய்துள்ளனர். 45ஆம் பட்டம் குன்றக்குடி அடிகளார் 1979ஆம் ஆண்டு குடமுழுக்கு நிகழ்த்தியுள்ளார்.

தற்போது 46ஆம் பட்டமான பொன்னம்பல அடிகளார் 19.3.2014 அன்று இக்கோவிலக்குத் திருக்குடநீராட்டு நடத்திச் சிறப்பித்துள்ளார். கோவிலின் தெற்கு ரத வீதியில் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம் அமைந்துள்ளது.

பிரான்மலை மங்கைபாகர் திருக்கோவிலின் உட்கிடைக் கோவிலாக சதுர்வேதமங்கலம் திருக்கோவிலும், அதன் உட்கிடைக் கோவிலாக அரளிப்பாறை தண்டாயுதபாணிசுவாமி திருக்கோவிலும் இருக்கின்றன.

**திருக்குட நீராட்டு நிகழ்ச்சிகள்**

ஆதீனத் திருக்கோவில்களில் மட்டுமல்லாது பிற கோவில்களிலும் இவ்வாதீன குருமுதல்வர்கள் திருக்குட நீராட்டினைச் செய்வித்துள்ளனர். அவை வருமாறு:

1. 3.5.1979, 19.3.2014 சண்முகநாதப் பெருமான் திருக்கோவில், குன்றக்குடி.
2. 07.2.1988, 10.3.2003 தேனாட்சியம்மன் திருக்கோவில் உ.சிறாவயல்.
3. 02.9.1990 ஆதி குருமுதல்வர் திருக்கோவில், திருவண்ணாமலை.
4. 20.4.1992 மங்கைபாகர் திருக்கோவில், பிரான்மலை.
5. 24.8.1992 திருத்தளிநாதர் திருக்கோவில், திருப்புத்தூர்.
6. 10.7.1994 திருக்கோளநாதர் திருக்கோவில், திருக்கோளக்குடி.
7. 5.4.1996 தெண்டாயுதபாணி திருக்கோவில், அரளிப்பாறை.
8. 15.9.1998 பிரசன்ன ஆஞ்சநேயர் திருக்கோவில், குன்றக்குடி.
9. 19.3.1998 அண்ணாமலையார் திருக்கோவில், மயிலை, சென்னை.
10. 5.4.1999 கலியுக மெய் அய்யனார் திருக்கோவில், குன்றக்குடி
11. 07.6.2001 வீரமாகாளி அம்மன் திருக்கோவில், குன்றக்குடி.
12. 04.5.2003 பிடாரி அம்மன் திருக்கோவில், பிரான்மலை.
13. 14.9.2005 ஆத்மநாயகி உடனுறை உருத்திரகோடீசுவரர் திருக்கோவில், சதுர்வேதமங்கலம்.

## தொகுப்புரை

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம் தெய்வசிகாமணி சிவாச்சாரியாரால் கி.பி. 1310ஆம் ஆண்டு திருவண்ணாமலையில் தோற்றுவிக்கப்பட்டது. ஆதீனத் தலைவர்களில் ஒன்று முதல் 16ஆம் பட்டம் வரை திருவண்ணாமலையிலும், 17 முதல் 30ஆம் பட்டம் வரை பிரான்மலையிலும், ஆதீனத் தலைமை இடத்தை வைத்திருந்தனர். 31ஆம் பட்ட ஆதீனத் தலைவரின் காலத்திலிருந்து தற்போது வரை ஆதீனம் குன்றக்குடியில் இயங்கி வருகிறது. 45 ஆதீன கர்த்தாக்கள் இம்மடத்தை ஆட்சி செய்துள்ளனர். தற்போது 46ஆம் ஆதீனத் தலைவராகப் பொன்னம்பல அடிகளார் இருக்கிறார். திருமடத்தின் வழிபாட்டுத் தெய்வம் காளத்தியப்பர் ஆவார்.

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்திற்கு உட்பட்ட ஐந்து கோவில்களையும் இராமநாதபுரம் மன்னர் இரகுநாத சேதுபதி வழங்கியதாக அறியப் பெறுகிறது. சிவகங்கையை ஆட்சி செய்த மருதுபாண்டியர்கள் இம்மடத்தைச் சார்ந்த கோவில்களுக்குத் திருப்பணி செய்துள்ளமையும் அறிய முடிகிறது.

இம்மடத்திற்கு புகழ்பெற்ற அரசியல், சமய, சமுதாயத் தலைவர்கள் வருகை புரிந்துள்ளார்கள். அவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் மீனாட்சிசுந்தரம் பிள்ளையும், உ.வே.சாமிநாதையரும் ஆவர். இம்மடத்தில் ஆதீனப் புலவர்கள் வழிவழியாக இருந்துவந்துள்ளனர். தற்போது மரு.பரமகுரு ஆதீனப் புலவராக இருக்கிறார். முப்பதுக்கும் மேற்பட்ட பணியாளர்கள் பணியாற்றுகின்றனர்.

யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலரைத் திருமடத்திற்கு அழைத்து, அவர்களுக்குத் தனிச் சிவிகை (பல்லக்கு) செய்வித்து அதில்

அவர்களை அமரச் செய்து திருவீதி உலா வரச் செய்து, பல்வேறு சிறப்புக்களும் செய்து பாராட்டிய பெருமை இவ்வாதீனத்திற்கு உண்டு.

சங்கத்தமிழ் விழாவாகப் பிரான்மலையில் பாரி விழா, திருமுறைத் தமிழ் விழாவாகத் திருப்புத்தூரில் திருமுறை விழா மற்றும் திருப்புத்தூர்த் தமிழ்ச் சங்கம், முருகன் தமிழ் விழாவாகக் குன்றக்குடியில் விசாக விழா, சாத்திரத் தமிழ் விழாவாகக் குன்றக்குடியில் ஆதீன குருமுதல்வர் குருபூசை விழா ஆகி விழாக்களில் ஆண்டுதோறும் தமிழகத்துப் பெரும் புலவர் பெருமக்கள், இசைத்துறை வல்லுநர்கள், நாடக, நாட்டியக் கலைஞர்கள், உயர் பண்பாளர்கள் ஆகியோர்களுக்குப் பட்டமளித்துப் பாராட்டுச் செய்து வருகிறது இவ்வாதீனம் என்பது பெறப்படுகிறது.

அருள்நெறிக் திருக்கூட்டம், திருக்குறட் பேரவை, தெய்வீகப் பேரவை, திருவருட் பேரவை, அருள்நெறித் திருப்பணி மன்றம் ஆகியவற்றை அமைத்துச் சமயத் தொண்டும், இலக்கியத் தொண்டும் ஆற்றி வருகிறது இத்திருமடம். இம்மடத்தின் வழியாகக் கல்விப்பணி, இலக்கியப்பணி, சமுதாயப்பணி போன்றவை நடந்தேறி வருகின்றன. இம்மடத்தின் தலைவர்கள் இலக்கியங்களில் நுண்மாண் நுழைபுலம் கொண்டவர்களாகக் காணப்படுகின்றனர். இம்மடத்தின் தலைவர்கள் பல நூல்களை எழுதியுள்ளனர். இவர்களைப் பற்றியும் பலர் நூல்களை எழுதி வெளியிட்டுள்ளனர். இம்மடத்தின் தலைவர்கள் சைவத்தில் ஊறிய நெறியினராயினும் மூடப்பழக்கவழக்கங்களைக் களைந்து ஒவ்வாதனவற்றை ஒதுக்கி, அறிவியல் நெறியில் சமுதாய நோக்கு உடையவராகக் காணப்படுகின்றனர் என்பது ஆய்வில் பெறப்படுகிறது.

மத்திய அரசால் பாராட்டப்பட்ட குன்றக்குடித் திட்டம் அனைவராலும் போற்றப்படுகிறது. நேரடியாக மடத்தின் மூலம் எந்தவித் தொழில் நிறுவனமும் நடைபெறவில்லை. அனைத்தும் கூட்டுறவு முறையில் நடைபெறகிறது. கல்வி நிறுவனங்களும், அருள்நெறித் திருப்பணி மன்றத்தின் மூலமாக நடைபெற்றுவருகின்றன.

ஆதீனத் திருமடம் தமிழக அரசின் இந்து சமய அறநிலையத் துறையின் தணிக்கைக்கு உட்படுத்தபட்டு நடத்தப் பெறும் திருமடமாகும். இதன் நிருவாகத்தில் ஐந்து கோவில்கள் உள்ளன. பிரான்மலை-கொடுங்குன்றநாதர் கோவில், திருப்புத்தூர்-திருத்தளிநாதர் கோவில், திருக்கோளக்குடி-ககோளபுரீசுவரர் கோவில், சிறாவயல்-தேனாட்சியம்மன் கோவில், குன்றக்குடி-சண்முகநாதர் கோவில் என்பனவாகும்.

## சான்றெண் விளக்கம்

1. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, சைவ இலக்கிய வரலாறு, ப.
2. க.கதிரேசன், அருள்திரு குமாரசுவாமி தம்பிரான், ஸ்ரீதெய்வசிகாமணி நான்மணிமாலை, புதிப்புரை.
3. சிலேடைப்புலி வேம்பத்தூர் பிச்சுவையர், சண்முகநாத உலா, கண்ணி,பக்.172-175.
4. மி.நோயல், மரு.பரமகுரு, அடிகளார் உறவுப்பாலம், ப.9.
5. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப.417.
6. பொன்னம்பல அடிகளார், சமய வாழ்வு. ப.51.
7. மேலது, பக்.94-95.
8. மது.ச.விமலானந்தம், தமிழ் இலக்கிய வரலாறு, ப.203.
9. சோமலெ, வளரும் தமிழ், ப.286.
10. க.கதிரேசன், ஆதீனப்புலவர், திருக்கோவில் கருத்தரங்கம், ப.8.
11. பொன்னம்பல அடிகளார், சமய வாழ்வு. பக். 104-105.
12. குன்றக்குடி பெரிய பெருமாள், குன்றக்குடி ஆதீன ஐந்து கோவில்கள், முகவுரை.
13. புறம்.2.
14. தஞ்சை சுந்தரராசன், தரணி ஆண்ட தமிழ் வள்ளல்கள், (முதல்பாகம்-பறம்பு நாட்டுப் பாரி), ப.9.
15. சோமலெ, செட்டிநாடும் செந்தமிழும், ப.34.
16. ரா.பி.சேதுபிள்ளை, தமிழின்பம், ப.14.
17. குன்றக்குடி பெரிய பெருமாள், குன்றக்குடி ஆதீன ஐந்து கோவில்கள், ப.39.
18. மரு.பரமகுரு, குன்றக்குடித் தலவரலாறு, ப.2.
19. மேலது, ப.35.

# இயல் - 2

## குடைவரைக்கோவில்களின் அமைப்பு முறையும் கலைச்சிறப்பும்

வரலாற்றுக்கு முற்பட்ட கால மனிதன், மலைகளில் இயற்கையாக அமைந்த குகைகளில் தனது வசிப்பிடத்தை அமைத்துக் கொண்டான். நாளடைவில் இக்குகைகளை வழிபடும் இடமாகவும் மாற்றிக் கொண்டான். நாகரிக வளர்ச்சியின் காரணமாக இயற்கையான குகைகளை விடுத்துப் பாறைகளையும், குன்றுகளையும் குடைவரைகளாக மாற்றி இறைவனின் உறைவிடமாகவும் மாற்றம் செய்தான். இந்த வளர்ச்சி பொதுவானது. 'கலை' என்பது உலகப் பொதுவான செய்தியாகும். அது காலந்தோறும் படிப்படியாக வளர்ந்து வந்துள்ளது என்பது அறிஞர் தம் கருத்து. குறிப்பாகச் சிற்பக் கலையின் பரிணாம வளர்ச்சி குறித்த ஆராய்ச்சி அறிஞர் நா.வானமாமலை கூறும் கருத்து இங்கு குறிப்பிடத்தகுந்தது. "சிற்பக்கலை வரலாற்றில் விலங்கு உருவப் படைப்புக்காலம், மனித விலங்கு உருவப் படைப்புக்காலம், மனித உருவப் படைப்புக்காலம், தெய்வ உருவப் படைப்புக்காலம் என நான்கு காலங்கள் இருந்து வளர்ந்தன"(1) என்பர். ஆனால் தமிழகத்தில் இந்த மாற்றம் பக்தி பூர்வமாக வளர்ந்தது என்பதை செ.வைத்தியலிங்கம் மிகச் சிறப்பாக எடுத்துக்காட்டுகிறார்.(2)

மலைகளைக் குடைந்து அமைக்கப்பெற்ற கோவில்கள் குடைவரைக் கோவில்கள் என அழைக்கப் பெறுகின்றன. மலை என்பதற்கு வரை, கோடு, உச்சி, குன்று எனப் பொருளுரைக்கப் பெறுகிறது. மலை என்பது ஒரு குறித்த நிலப்பகுதியில் அதன் சுற்றாடலுக்கு மேலே உயர்ந்து காணப்படும் ஒரு பெரிய நில வடிவமாகும். இதற்கு ஓர் உச்சி இருக்கும். மலை, குன்று ஆகிய சொற்களால் அழைக்கப் பெற்றாலும் மலை, குன்றைவிட உயரம்

உள்ளதாகவும், சரிவு உடையதாகவும் காணப்படும். திணை அடிப்படையில் மலையும் மலை சார்ந்த பகுதியும் குறிஞ்சி என அழைக்கப்பெறுகிறது.

தமிழகத்தில் பல்லவர்கள் காலத்தில்தான் கருங்கல் கோவில்களும், குடைவரைக் கோவில்கள் அமைக்கப் பெற்றன என்று பலரும் உறுதி செய்கின்றனர். "பல்லவர்காலச் சமய மறுமலர்ச்சி பக்தி இயக்கமாகப் பரிணமித்தது"(3) என்று ஆ.வேலுபிள்ளை கணக்கிடுகிறார். மன்னர்களின் காலத்திற்குப் பின் ஆதீனங்களின் பொறுப்புகளில் இக்கோவில்கள் வளர்ச்சி கண்டுள்ளன. அந்தவகையில் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்திற்குட்பட்ட குடைவரைக் கோவில்களின் அமைப்பு முறையும் அதன் கலைச்சிறப்பும் பற்றிக் காண்பது இவ்வியலின் நோக்கமாகும்.

**கோவில்களும் கவின்கலைகளும்**

குடைவரைக்கலை மிகப் பழமையான கலையாகும். தமிழகத்தைப் பொறுத்தவரை குடைவரைக் கோவில்களை அமைத்தவர்கள் பல்லவர்கள், பாண்டியர்கள், முத்தரையர் மற்றும் அதியர் மரபுகளைச் சேர்ந்த மன்னர்கள் ஆவர். இவர்கள் குடைவரைக் கோவில்கள் மட்டுமன்றி கட்டுமானக் கோவில்களும் பலவற்றை நிறுவி அங்குச் சிற்பம், ஓவியம், நாட்டியம், இசை போன்ற வாழ்வியல் கவின்கலைகளை வளர்த்துள்ளனர்.

**முதல் குடைவரைக் கோவில்கள்**

பல்லவப் பேரரசு தமிழ்நாட்டில் தோன்றியபின் குடைவரைக்கலை பெரிதும் வளர்ச்சியடைந்தது. இக்கலையைச் தமிழகத்தில் முதன்முதலில் தோற்றுவித்தவர்கள் பல்லவர்களே என்ற கருத்து இன்றளவும் நிலவி வருகிறது. "மன்னர்களில் மகேந்திர பல்லவனே குடைவரைக் கோவில்களைத் தோற்றுவித்தவன். இம்மன்னன் செஞ்சிக்கருகில் தான் குடைவித்த

மண்டகப்பட்டு குடைவரையில் பொறித்துள்ள கல்வெட்டு. இக்கல்வெட்டு செங்கல், மரம், உலோகம் மற்றும் சுதை ஆகிய அழியக்கூடிய பொருட்களைத் தவிர்த்து மும்மூர்த்திகளான நான்முகன், திருமால், சிவபெருமான் ஆகியோருக்கு **'இலக்சிதாயுதம்'** என்ற குடைவரைக் கோயிலை நிர்மானித்தான் எனக் குறிப்பிடுகிறது. இவனே மாமண்டூர், திருக்கழுக்குன்றம், திருச்சிராப்பள்ளி போன்ற இடங்களில் குடைவரைக் கோவில்களை அமைத்துக் கட்டடக் கலைக்குப் புத்துயிர் அளித்ததோடு, அழகான சிற்பங்களையும் உருவாக்கியுள்ளான். இவனுக்குப் பின் வந்த நரசிம்மவர்மன் திருக்கழுக்குன்றத்திலுள்ள ஒரு குடைவரைக் கோயிலை அமைத்துள்ளான். காஞ்சிபுரத்துக் கயிலாசநாதர் கோவில், மாமல்லபுரத்துக் குடைவரைப் படைப்புகளான ஐந்து ரதங்கள், குன்றில் குடையப்பட்ட கோவில்கள், புலிக்குகை போன்ற படைப்புகள் அனைத்தும் பல்லவர்களின் கைவண்ணமாகும்."(4)

தமிழகத்தின் முதல் குடைவரைக் கோவில்கள் எது என்பதில் பல்வேறுபட்ட கருத்துக்கள் நிலவுகின்றன. பாண்டியன் செழியன் சேந்தன் கட்டிய பிள்ளையார்பட்டி குடைவரையும், மலையடிக்குறிச்சி குடைவரைக் கோவிலும் முதல் தமிழகக் குடைவரைக் கோவில்கள் என்று கூறுவாரும் உளர். மகேந்திர பல்லவன் செஞ்சிக்கருகில் உள்ள மண்டகப்பட்டு எனும் ஊரில் உருவாக்கிய குடைவரைக் கோவில்களே தமிழகத்தின் முதல் குடைவரைக்கோவில்கள் என மறுப்பாரும் உளர். "7ஆம் நூற்றாண்டில் அழகாய கச்சியில் கோலோச்சியவன் பல்லவப் பேரரசனான மகேந்திரவர்மன். அவனுக்கு விசித்திர சித்தன் என்ற ஒரு பட்டப் பெயர் உண்டு. அதாவது வினோதமான மனதை உடையவன் என்பது பொருள். அதனால்தானோ என்னவோ அவன் ஆதியும் அந்தமும் அற்ற ஆண்டவனுக்குக் காலத்தால்

அழிக்க இயலா ஆலயத்தை அமைக்க எண்ணம் கொண்டான். அவ்வமயம் அண்டைய நாட்டை ஆண்ட மேலச் சாளுக்கியர்கள் பாதாமி என்ற இடத்தில் குடைவரைக் கோவில்களை உருவாக்கி இருந்தனர். இவனும் அவர்களைப் பின்பற்றித் தமிழகத்தில் குடைவரைக் கோவில்களைத் தோற்றுவித்தான். இவன் அடிச்சுவட்டில் அதிகமான்கள், முத்தரையர்கள், பாண்டியர்கள் ஆகியோரும் தங்கள் தங்கள் பகுதிகளில் குடைவரைகளை உருவாக்கினர்"(5) என்பர் தி.இராசமாணிக்கம்.

குடைவரைகள் இயற்கையாக அமைந்துள்ள மலைச்சரிவுகளில் அமைக்கப் பெற்றன. ஒன்றிரண்டு அறைகளுடன் கூடிய மண்டபங்களை அவை கொண்டிருந்தன. குடைவரையின் முகப்பில உள்ள தூண்கள் பருமனாக இருந்தன. தூண்களின் மேற்பகுதியும் கீழ்ப்பகுதியும் சதுரமாகவும் நடுவில் எட்டுப்பட்டை கொண்டதாகவும் செதுக்கப்பட்டன. நடுவில் பட்டையுடன் கூடிய தரங்கப் போதிகைகள் அமைக்கப்பட்டன. தூண்களில் தாமரை இதழ்கள் செதுக்கப்பட்டன. கருவறையில் மேல் தளத்தில் கந்தர்வர்கள் தலைகளுடன் கூடிய கபோதம் உருவாக்கப்பட்டது. கருவறையில் இருபுறமும் வாயில் காப்போர் அமைக்கப்பட்டனர்.

குடைவரைக் கோவில்கள் கட்டிடக்கலையைச் சார்ந்தவைகள் அல்ல. ஏனெனில் தனித்தனியாகக் கற்களைக் கொண்டு கட்டிடமாக அமைக்கப்படவில்லை. அதற்கு மாறாக, பாறைகள் குடையப்பட்டு மண்டபங்களாக உருவாக்கப் பெற்றன. பாறையிலேயே சிற்பங்கள் செதுக்கப் பெற்றன. எனவே குடைவரைக் கோவில் சிற்பக்கலையின் பாற்பட்டதாகக் கொள்ளப்படுகிறது. குடைவரையின் முழு வளர்ச்சி மலைதளி எனப்படுவது.

**தமிழகத்தில் உள்ள குடைவரைக் கோவில்கள்**

தமிழகத்தில் உள்ள குடைவரைகளும், மலைதளிகளும் கீழ்வருமாறு:

1.மகேந்திரவாடி, 2.பல்லாவரம், 3.சிங்கப்பெருமாள் கோவில், 4.சாளுவன் குப்பம், 5.மாமல்லபுரம், 6.திருக்கழுக்குன்றம், 7.வல்லம், 8.குரங்கணில் முட்டம், 9.மாமண்டூர், 10.விளாப்பாக்கம், 11.புதூர், 12.சீயமங்கலம், 13.திரைக்கோவில், 14.மேலச்சேரி, 15.சிங்கவரம், 16.தளவானூர், 17.கீழ்மாவிலங்கை, 18.மண்டகப்பட்டு, 19.ஆரூர், 20.அரகண்டநல்லூர், 21.திருவெள்ளறை, 22.திருப்பைஞ்ஞலி, 23.திருச்சிராப்பள்ளி, 24.குடுமியான்மலை, 25.நார்த்தாமலை, 26.சித்தன்னவாசல், 27.தேவர்மலை, 28.மலையடிப்பட்டி, 29.திருக்கோகர்ணம், 30.மலையக்கோவில், 31.திருக்கோளக்குடி, 32.திருமயம், 33.பிரான்மலை, 34.பூவாலைக்குடி, 35.மகிபாலன்பட்டி, 36.பிள்ளையார்பட்டி, 37.திருமலை, 38.அரிட்டாபட்டி, 39.ஆனைமலை, 40.குன்றக்குடி, 41.வரிச்சியூர் (குன்னத்தூர்), 42.திருச்சுழி, 43.திருப்பரங்குன்றம், 44.ஐவர்மலை, 45.புதுப்பட்டி, 46.திருத்தங்கல், 47.மூவரைவென்றான், 48.மலையடிக்குறிச்சி, 49.செவிலிப்பட்டி, 50.வாடிக்கோட்டை, 51.கழுகுமலை, 52.திருமலைப்புரம், 53.சொக்கம்பட்டி (பேச்சிப்பாறை) 54.வீரசிகாமணி, 55.திருநந்திக்கரை, 56.ஆண்டிச்சிப் பாறை, 57.திருச்செந்தூர், 58.பூதப்பாண்டி, 59.தான்தோன்றிமலை, 60.நாமக்கல், 61.குண்ணாண்டார் கோவில், 62.அரளிப்பட்டி, 63.குறத்தியறை, 64.சிவகிரி, 65.ஆனையூர், 66.கங்கை கொண்டான் போன்றவை தமிழ்நாட்டுக் குடைவரைக் கோவில்களின் அமைவிடமாகும்.

**பல்லவர் குடைவரைக் கோவில்கள்**

1.மண்டகப்பட்டு இலக்சிதன் கோவில், 2.பல்லாவரம் குடைவரைக் கோவில், 3.மாமண்டூர் உருத்திரவாலீசுவரம், 4.மாமண்டூர் திருமால் குடைவரை, 5.குரங்கணில் முட்டம் குடைவரை, 6.வல்லம் வசந்தீசுவரம், 7.மகேந்திரவாடி

குடைவரை, 8.தளவானூர் சத்துருமல்லேசுவரர் கோவில், 9.திருச்சிராப்பள்ளி குடைவரை, 10.நாமக்கல் நரசிம்மர் கோவில், 11.நார்த்தாமலை குடைவரை, 12.குடுமியான்மலை குடைவரை, 13.திருமெய்யம் குடைவரை, 14.சீயமங்கலம் திருத்தூணாண்டவர் கோவில், 15.விளாப்பாக்கம் குடைவரை, 16.மாமல்லபுரம் தர்மராசா மண்டபம், கோடிக்கல் மண்டபம், கோனேரி மண்டபம், வராக மண்டபம், மகிசாசுரமர்த்தினி மண்டபம், மகிசாசுரமர்த்தினி சிறிய மண்டபம், மும்மூர்த்தி குடைவரை, பஞ்சபாண்டவர் மண்டபம், புலிப்புதர் மண்டபம், பரமேசுவரவராக விசுணுகிருகம், இராமனுச மண்டபம், சிறிய யாளி மண்டபம், 17.சாளுவன்குப்பம் அதிரணசண்ட பல்லவேசுவரம், 18.சாளுவன்குப்பம் புலிக்குடைவரை போன்றவை பல்லவர்களால் அமைக்கப் பெற்றவையாகும்.

**பாண்டியர் குடைவரைக் கோவில்கள்**

1.பிள்ளையார்பட்டி, 2.மலையடிக்குறிச்சி, 3.கழுகுமலை. 4.திருமலைப்புரம், 5.திருப்பரங்குன்றம், 6.ஆனைமலை, 7.குன்றக்குடி, 8.திருக்கோளக்குடி, 9.புதுப்பட்டி, 10.சொக்கம்பட்டி (பேச்சிப்பாறை). 11.திருச்சிராப்பள்ளி, 12.திருவெள்ளறை, 13.செவிலிப்பட்டி, 14.தேவர்மலை, 15.மலையக்கோவில், 16.சித்தன்னவாசல், 17.அரளிப்பட்டி, 18.அரிட்டாபட்டி, 19.மாங்குளம், 20.வரிச்சியூர் (குன்னத்தூர்), 21.திருச்சுழி (பாறைக்குளம்), 22.மூவரைவென்றான், 23.திருத்தங்கல், 24.குறத்தியறை, 25.சிவகிரி, 26.வீரசிகாமணி, 27. திருச்செந்தூர், 28.மகிபாலன்பட்டி, 29.ஆனையூர், 30.திருமலை, 31.பிரான்மலை, 32.குடுமியான்மலை, 33.கங்கை கொண்டான், 34.வாடிக்கோட்டை, 35.திருக்கோகர்ணம், 36.ஆண்டிச்சிப்பாறை போன்றவை பாண்டியர் குடைவரைகள் அமைந்த இடங்களாகும்.

**முத்தரையர் குடைவரைகள்**

1.மலையடிப்பட்டி, 2.நார்த்தாமலை, 3.பூவாலைக்குடி, 4.திருமயம், 5.குண்ணாண்டார் கோவில், 6.திருப்பைஞ்ஞலி ஆகும்.

**அதியமான் குடைவரைகள்**

1. நாமக்கல், 2. தான்தோன்றிமலை

**ஆய்மன்னர்கள் குடைவரை**

1. திருநந்திக்கரை

**செட்டிநாட்டுக் குடைவரைக் கோவில்கள்**

செட்டிநாட்டுப் பகுதி முழுமையும் சேர, சோழ, பாண்டிய நாடு என்ற மூன்றில் பாண்டிய நாட்டில்தான் அடங்கும். இப்பகுதியை ஆண்ட பாண்டியர்களும், முத்தரையர்களும் குடைவரைக் கோவில்களை அமைத்தனர்.

"வென்றெழு கொடியொடு வேழம் சென்று புக
குன்று குயின்றன்ன ஓங்குநிலை வாயில்"

என்று நெடுநல்வாடையும்(15-16), 'குன்று குயின்றன்ன அந்தணர் பள்ளியும' என்று மதுரைக்காஞ்சியும் குன்றைக் குடைந்து இருப்பிடம் அமைக்கும் திறன் இருந்ததை வெளிப்படுத்துகின்றன. இதன்வழி, குன்றைக் குடைந்து கோவில் அமைக்கும் வழக்கம் பாண்டிய நாட்டில் இருந்து வந்தது என்பது புலனாகும்.

குடைவரைக் கோவில்களில் சிவபெருமானுக்கும், திருமாலுக்கும் ஒத்த தன்மை கொடுத்திருக்கின்றனர். பாண்டியர்கள் குடைவரைக் கோவில்களை அதிகமாகவே தோற்றுவித்துள்ளனர். பாண்டியர் குகைக் கோவில்களில் சிற்பங்கள் அதிகம் காணப்படுகின்றன. சிவபெருமானுக்கும், திருமாலுக்கும் எடுத்த கோவில்கள் அதிகம் உள்ளன. பாண்டியர் குடைவரைக் கோவில்களில் வலம்புரி விநாயகர் பெரிதும் இடம்பெற்றுள்ளார்.

1.பிள்ளையார்பட்டி குடைவரைக்கோவில், 2.குன்றக்குடி குடைவரைக்கோவில் (மூன்று), 3.பிரான்மலைக் குடைவரைக் கோவில்,

4.திருமெய்யம் குடைவரைக் கோவில், 5.மலையக்கோவில் குடைவரைக் கோவில் (நச்சாந்துபட்டி அருகில்), 6.தேவர்மலைக் குடைவரைக் கோவில் (பேரையூர் அருகில்), 7.மகிபாலன்பட்டிக் குடைவரைக் கோவில், 8.திருக்கோளக்குடி குடைவரைக் கோவில், 9.ஆய்ங்குடி மலைக்கொழுந்தீசர் குடைவரைக் கோவில் போன்றவையாகும்.

இதில் குன்றக்குடி குடைவரைக்கோவில், பிரான்மலைக் குடைவரைக்கோவில், திருக்கோளக்குடி குடைவரைக் கோவில் ஆகியவை, குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்திற்கு உட்பட்ட குடைவரைக் கோவில்களாகும்.

**பிரான்மலைக் குடைவரைக்கோவில்**

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்திற்கு உட்பட்ட கோவில்களில் இத்திருத்தலத்தைப் பற்றிச் சமயகுரவர் நால்வரும் நெகிழ்ந்து, மகிழ்ந்து போற்றிய திருத்தலம் திருக்கொடுங்குன்றம் ஆகும். இக்கோவில் பாடல்பெற்ற பாண்டி நாட்டுத் திருத்தலங்களில் ஒன்றாகும். இதனை,

"கூடல் புனவாயில், குற்றாலம் ஆப்பனூர்
ஏடகம் நெல்வேலி இராமேசம் ஆடானை
தென்பறங்குன் றம்சுழியல்தென் திருப்புத்தூர்
காசி வன்கொடுங்குன் றம்பூவணம்"

என்ற காளமேகப்புலவரின் பாடலின் வழி அறியலாம். பாண்டி நாட்டுத் திருத்தலங்களாக, ஆலவாய் (மதுரை), ஆப்பனூர் (திருவாய்புடையார்), திருப்பரங்குன்றம், திருஏடகம், திருக்கொடுங்குன்றம் (பிரான்மலை), திருப்புத்தூர், புனவாயில் (திருப்புனவாசல்), இராமேசுவரம், திருவாடானை, கானப்பேர் (காளையார்கோவில்) திருப்பூவணம், திருச்சுழியல், குற்றாலம், திருநெல்வேலி ஆகியவை உள்ளன.

புனவாயில்-பழம்பதிநாதர், குற்றாலம்-திருக்குற்றாலநாதர், ஆப்பனூர் அர்த்தநாரீசுவர், ஏடகம்-ஏலவார் குழலியோடு ஏடகநாதர், நெல்வேலி-நெல்வேலியப்பன், இராமேசம்- ராமலிங்கம், ஆடானை-பிருகு முனி சாபம் போக்கி தலம், தென்பரங்குன்றம்-நக்கீரர் முருகாற்றுப்படை மொழிந்த தலம், காசி-தென்காசி அகத்தியர் வழிபட்ட தலம், வன்கொடுங்குன்றம்-திருக்கொடுங்குன்றம் தாரகாசுரன் மயில் வாகனமான இடம், பூவணம்-மூவேந்தர்களும் பூசித்த தலம்.

பிரான்மலை கோவில் பூமி, அந்தரம், சுவர்க்கம் என்று மூன்று பகுதிகளைக் கொண்டுள்ளது. மலையின் அடிவாரத்தைப் பாதாளமாகவும், அதன் மேல் உச்சிப் பகுதியைக் கயிலாயமாகவும் கொண்டுள்ள ஆலய அமைப்பு வித்தியாசமாக உள்ளது. இம்மூன்று பகுதித் திருக்கோவில்களையும் உள்ளடக்கிக் கொண்டு மிகப் பெரிய திருச்சுற்று மதில் எடுக்கப் பெற்றுள்ளது. அது 'சுந்தரபாண்டியன் திருமதில்' என அழைக்கப்படுகிறது. பூமியில் கொடுங்குன்றீசரும், குயிலமுதநாயகியும் இருக்கின்றனர். அருணகிரிநாதர் பாடிய முருகன், வள்ளி, தெய்வானையும் இங்கு உள்ளனர். அந்தரத்தில் நிர்வாண பைரவர், காசி விசுவநாதர்-விசாலாட்சி உள்ளனர். சுவர்க்கத்தில் மங்கைபாகர், தேனம்மையுடன் திருமணக்கோலத்தில் காட்சியளிக்கிறார்.

"மயில்புல்குதண் பெடையோடுடன் ஆடும் வளர் சாரல்
குயிலின் இசைபாடுங்குளிர் சோலைக் கொடுங்குன்றம்"

என்றெல்லாம் இங்குள்ள இயற்கைக் காட்சிகளை ஆளுடையபிள்ளையார் தமது பதிகத்தில் தீட்டியுள்ளார்.

இங்கு பாறை கிழக்கு நோக்கிக் குடையப்பட்டுள்ளது. மற்றை குடைவரைக் கோவில்களைப் போலத் தூண்கள், அரைத்தூண்கள், எவையும் முகப்பில் கிடையாது. விமானம் வட்டமாக உள்ளது. கருவறையை அடுத்து

அந்தராளம், அர்த்த மண்டபம், முக மண்டபம், தெய்வசபை ஆகியன விளங்குகின்றன. அந்தராளத்தின் முன் பெண் துவார பாலகர் உள்ளனர். ஆண் துவார பாலகர் பைரவர் சந்நிதியில் காணப்பெறுகின்றனர். தெய்வச்சபையில் விதானத்தில் தேவர்கள் புடைப்புச் சிற்பங்களாக உருவாக்கப்பட்டிருக்கின்றனர். பாரி வள்ளலின் செப்புத் திருமேனியும் இங்கிருப்பது குறிக்கத்தக்கது.

**அந்தரம் அல்லது பூமி**

திருக்கொடுங்குன்றநாதர் சந்நிதிக்கு நேர் கிழக்கே பதினாறு கால் மண்டபம் ஒன்றுள்ளது. அந்த மண்டபத்திற்கு வடக்கே பதினெட்டுப் படிக்கட்டுகளையும் கடந்து அதன் பிறகு அமைக்கப்பட்டுள்ள படிக்கட்டுகளையும் கடந்து சென்றவுடன் மலைச்சரிவில் பூமிப் பகுதி உள்ளது.

பூமிப்பகுதியில் அண்மைக்காலத்தில் அமைக்கப் பெற்ற வள்ளல் பாரியின் சுதைச்சிற்பம் காணப்படுகிறது. சனகாதி முனிவர்கள் நால்வர் வீற்றிருக்க, ஆலமர் செல்வர் சந்நிதி தெற்கு முகமாக உள்ளது. அதற்கு மேற்கே பைரவர் திருக்கோவில் உருவாக்கம் கொண்டுள்ளது. பைரவர் நின்ற கோலத்தில், நான்கு திருக்கரங்களுடன் எழுந்தருளியுள்ளார். வலது கையில் சூலமும், உடுக்கையும், இடது கையில் நாகபாசமும் கபாலமும் கொண்டுள்ளார். சீர்காழியில் ஆபத்தோதாரணர் என்ற பெயரில் மலையில் பைரவர் அருள்புரிவது இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

தெற்கு முகமாக உள்ள பைரவர் சந்நிதியின் முன் மண்டபத்தில், மேற்குத் தூணில் கிழக்கு முகமாகக் கருப்பர் சாமியும், கிழக்குத் தூணில் மேற்கு முகமாகச் சன்னாசிக்கருப்பர் சாமியும் காணப்படுகின்றனர். பைரவர் திருக்கோவிலடன் இணைந்து மேற்கே தனி விமானச் சிறப்புடன் விளங்குவது

விசுவநாதர் திருக்கோவிலாகும். அதன் தெற்கே விசாலாட்சி அம்மனும் காட்சியளிக்கின்றார்.

**சுவர்க்கம் அல்லது கயிலாயம்**

வடக்கு முகமாக பூமித் தளத்திலிருந்து மேல்நோக்கி அமைக்கப் பெற்ற படிக்கட்டுகளில் ஏறிச் சென்றால், மேற்கே லெட்சுமி மண்டபமும், கிழக்கே மங்கைபாகர் ஆறுகால் மண்டபமும் உள்ளன. ஆறுகால் மண்டபத்தை 'ஏகாந்த மண்டபம்' என்று கூறுகின்றனர். ஏகாந்த மண்டபத்தின் சுவரில் மேற்கு முகமாகச் சந்நிதியை நோக்கி திருஞானசம்பந்தர் அருளிய 'நட்டபாடை' என்ற திருக்கொடுங்குன்றத் திருப்பதிகக் கல்வெட்டுப் பதிக்கப்பட்டுள்ளது.

ஏகாந்த மண்டபத்திற்கு வடக்கே மூலவர் சந்நிதிக்கு நேரே விசாலமான பெரியதொரு மண்டபத்தை மாறவர்மன் சுந்தரபாண்டியன் உருவாக்கம் செய்துள்ளதால், இம்மண்டபம் 'சுந்தர பாண்டியன் மண்டபம்' எனப் பெயரிடப்பட்டுள்ளது. சுந்தர பாண்டிய மண்டபத்தின் தென்பகுதி வாத்திய மண்டபமாகவும், சந்நிதிக்கு நேரில் உள்ள நடுப்பகுதி நர்த்தன மண்டபமாகவும் அமைக்கப் பெற்றுள்ளன.

சுந்தரபாண்டியன் மண்டபத்திலிருந்து சந்நிதிக்குச் செல்வதற்கு தேவசபா மண்டபத்துள் நுழைந்தே செல்ல வேண்டும். தேவசபா மண்டபத்தின் வடபுறம் உள்ள மேடையில் பஞ்சலோக உற்சவ மூர்த்தியாகத் திருஞானசம்பந்தர் உள்ளார். பக்கத்தில் தெற்குநோக்கி வள்ளல் பாரியின் சிலை உள்ளது.

தேவசபா மண்டபத்திலிருந்து மேற்கே அர்த்த மண்டபத்திற்கும் கருவறைக்கும் இடையே மேடையமைந்த சந்நிதியின் முகமண்டபம் உள்ளது.

முக மண்டபத்தின் தென்மேற்கே கற்பலகையில் செதுக்கப் பெற்ற மங்கை பாகர் சிலை உள்ளது. முக மண்டபத்திற்கு மேற்கே உள்ளது குடைவரைக் கருவறை, பாறையைக் குடைந்து நீண்ட சதுர வடிவில், தூண்களே இல்லாது அமைக்கப் பெற்றுள்ளது. கருவறைக்குள் பாறையில் செதுக்கிய நிலையில் மங்கைபாகரும், தேனம்மையும் உள்ளனர். இருவருக்கும் இரண்டு கைகள் உள்ளன. கல்யாணக் கோலத்தில் சிவனும் பார்வதியும் நின்ற கோலத்தில் இருக்க வேண்டும் என்று ஆகமங்கள் கூறுகின்றன. ஆனால் இங்குச் சிவனும் பார்வதியும் அமர்ந்த கோலத்தில் இருக்கின்றமையால் இது உமாசகித மூர்த்தி என்பது தெளிவு.

இக்குடைவரையின் காலம் கி.பி.ஏழாம் நூற்றாண்டு என்பாரும் உள். "கயிலாய பகுதியில் மங்கைபாகர் எழுந்தருளியுள்ள குடைவரைக் கோவில் ஆறாம் நூற்றாண்டளவில் பாண்டிய நாட்டுக் குடைவரைக் கோவில்களுக்கு மூலமாகக் குடைவிக்கப் பெற்றுள்ளதாகக் கருதுகின்றனர்."(6)

இவர் மணக்கோலத்தில் காட்சியளிக்கிறார். அகத்தியருக்குக் காட்சி கொடுத்ததும், சம்பந்தர் பசித்தழுத பொழுதும், நந்திக்குக் காட்சி கொடுத்ததும் இறைவன் மணக்கோலத்தில்தான் என்பது குறிப்பிடத்தக்கது.

மங்கைபாகரும், தேனம்மையும் இரண்டு கைகளுடன் கிழக்கு நோக்கிக் காணப்படுகின்றனர். தேனம்மையின் வலக்கையில் நீலோத்பல மலரும், இடக்கை அத்தமாகவும் உள்ளன. மங்கைபாகர் இடக்கையில் தாமரையும், வலது கை அத்தமாகவும் இருக்கின்றன. இறைவனின் வலக்கால் அவரின் இடக்காலுடன் பொருந்தியும், இடக்கால் தொங்கவிடப்பட்ட நிலையிலும் காணப்படுகின்றன. இருவரும் சுகாசனமாக வீற்றிருக்கின்றனர்.

**வெறிமங்கை பாகர்**

மங்கைபாகருக்குள்ள மகுடம் கிரீட மகுடமாகும். அவர் மார்பில் முப்புரிநூலும், கிரேயவேக அறம், வாகுமாலை, தோள்மாலை அணிந்துள்ளார். காலில் பாடகம், வீரக்கழல், முழங்காலுக்குக் கீழே ஒரு அணியும் அணிந்து காணப்படுகிறார்.

தேனம்மை கரண்ட மகுடத்துடன் காணப்படுகிறாள். அம்மனின் கழுத்தில் சங்கிலியும், தோளில் வளையலும், விரல் அணிகலன்களும், கண்டிகை, சரப்பள்ளி, சவலி போன்ற அணிகளும் காணப்படுகின்றன. காலில் ஏழுவிதமான அணிகலன்களும், கால் விரல்களில் மோதிரமும் அணிந்து, மார்பு மூடப்படாத நிலையில் உள்ளார்.

இவர்களுக்குக் கீழே இலிங்கம் உள்ளது. இப்படிமத்திற்கே அபிடேகம் நடைபெறுகிறது. மங்கைபாகருக்கும் தேனம்மைக்கும் நீரால் அபிடேகம் நடைபெறுவதில்லை. சாம்பிராணி தைலம், புனுகு தைலம் போன்ற தைல அபிடேகம் மட்டுமே நடைபெறுகின்றது.

**திருவுருவ அமைதி**
**கொடுங்குன்றநாதர்**

பூமிப்பகுதியில் உள்ள மூலவர் கொடுங்குன்றநாதர். சுயம்பு லிங்கமாக விளங்குகிறார்.

**அமிர்தேசுவரி என்ற குயிலமுதநாயகி**

திருக்கொடுங்குன்றநாதர் திருக்கோயிலோடு இணைந்து வடபால், குயிலமுத நாயகி திருக்கோவில் அமைக்கப் பெற்றுள்ளது. இத்திருக்கோவிலும் திருச்சுற்றுடன் அமைந்துள்ளது.

கீழ்த்தளத்தில் உள்ள இறைவிக்குக் குயிலமுதநாயகி, அமிர்தேசுவரி என்ற இரண்டு பெயர்கள் உள்ளன. குயில் போன்று இனிமையான மொழியினைப் பேசக்கூடியவள் என்பதினால் 'குயிலமுதநாயகி' என்று அழைக்கப்பெறுகிறாள். சிவபெருமானின் அருளால் அமுதத்தினைப் பெற்று அடியவர்களுக்கு வழங்கியதால் இவ்வம்பிகைக்கு 'அமிர்தேசுவரி' என்று பெயர் வந்தது. ஒரு கல்வெட்டில் கூட அம்மையின் பெயர் சொல்லப்படவில்லை புராணத்தில் மட்டுமே கூறப்பட்டுள்ளது.

இவ்வம்மன் கிழக்கு நோக்கி நின்ற கோலத்தில், இரண்டு கரங்களுடன் காணப்படுகிறார். தலையில் கரண்ட மகுடத்துடன், வலக்கையில் தாமரையும், இடக்கை கடியவலம்பிதமாகவும் இருக்கின்றன.

**ஜுரகரேசுவரர்**

மூன்று திருமுகங்களும், மூன்று திருக்கரங்களும், மூன்று திருப்பாதங்களும் கொண்ட அபூர்வச் சிலை ஒன்று காணப்படுகிறது. இது மகா மண்டபத்தில் மேற்கே, சந்நிதிக்குத் தெற்கே கிழக்கு முகமாக எழுந்தருளியுள்ளது. இத்தகைய அமைப்புக் கொண்ட சிலைகள் சில திருத்தலங்களில் மட்டுமே காணப்படும். இதனை 'ஜுரகரேசுவரர்' எனக் கூறுகின்றனர்.

சிவபெருமானின் பல்வேறு வடிவங்களில் ஒன்று 'ஜுரகரேசுவரர்'. மாடம்பாக்கம், சிதம்பரம், திருவாரூர், வேலூர் சலகண்டேசுவரர் கோவில் தென்கரை, திரிபுவனம், பிரான்மலை, மதுரைக்கருகிலுள்ள பேவானி போன்ற இடங்களில் ஜுரகரேசுவருக்குப் படிமங்கள் அமைக்கப்பட்டுள்ளன. திருக்கோகர்ணத்தில் ஜுரகரேசுவருக்குத் தனி சந்நிதி உண்டு.

மூன்று கால்களையும், மூன்று முகங்களையும், மூன்று கைகளையும் மூன்று கண்களையும் கொண்டு 'ஜுரகரேசுவரர்' விளங்குகின்றார். இவரை 'சுவரசேசுவரர்' அல்லது 'சுவரபகனமூர்த்தி' என்றும் குறிப்பிடுகிறார்கள். இவரை வணங்கினால் காய்ச்சல் குணமாகும் எனறு மக்கள் நம்புகின்றனர். ஜுரம் என்ற சொல் காய்ச்சலைக் குறிக்கின்றது.

**சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை**

சுப்பிரமணிய சுவாமி திருக்கோவில், குயிலமுத நாயகி திருக்கோவிலின் திருச்சுற்றுடன் இணைந்துள்ள தனிக்கோவிலாகும். மேற்கு முகமாக எழுந்தருளியுள்ள சுப்பிரமணியன், வள்ளி தெய்வானையுடன் காட்சியளிக்கிறார். மயில் காணப் பெறவில்லை. பெருமானின் வாகனமாகிய யானை கோவில் திருமுன் காணப்படுகிறது. யானை சிலை அமைக்கப்பட்ட பின்னர் சந்நிதியின் சுவர் எழுப்பப் பெற்றிருக்கலாம். பலிபீடம், கொடிமரம் உள்ளன.

**பைரவர்**

கொடுங்குன்றத்தில் இடைத்தளத்தில் உள்ளவர் பைரவர். இங்குள்ள பைரவர் திருமேனி கல்திருமேனியாகும். இங்கு இடைத்தளத்தில் பைரவர் இருப்பது போலச் சீர்காழியில் உள்ள சட்டைநாதர் (பைரவர்) இடைத்தளத்தில் காட்சியளிக்கிறார். "சிவ வடிவங்களில் உக்கிரமான வடிவம் வைரவமூர்த்தி. அறுபத்து நான்கு வைரவ வடிவங்களைப் பற்றிச் சிற்ப நூல்கள் குறிப்பிடுகின்றன. இவரைச் 'சேத்திரபாலகர்' என்றும் அழைப்பர்."(7)

தெற்கு நோக்கியுள்ள பைரவர் சற்று உயரமானவராகக் காணப்படுகிறார். அதற்கேற்ப நாயும் பெரியதாக உள்ளது. நாயின் தலை இடப்புறம் பார்க்கிறது. இவருக்கு நான்கு கைகள். அவற்றின் முன் வலக்கையில் சூலமும், முன் இடக்கையில் தமருகமும், பின் வலக்கையில் பாம்பு சுற்றிய உடுக்கையும்,

பின் இடக்கையில் பாம்பும் காணப்படுகின்றன. இப்பைரவர் கால பைரவர் என்பர். நிர்வாண நிலையில், தலையில் அக்கினி மகுடம் கொண்டு விளங்குகிறார்.

**முக்குறுணி விநாயகர்**

முக்குறுணி விநாயகர் கீழ்த்தளத்தில் கிழக்கு நோக்கி இருக்கிறார். இவருக்கு நான்கு கரங்கள் உள்ளன. முன் வலக்கையில் மோதகமும், முன் இடக்கையில் உள்ள பழத்தினைத் தொட்டவாறு தும்பிக்கையும், பின் வலக்கையில் ஒடிந்த கொம்பினைப் பிடித்தவாறும், பின் இடக்கையில் அங்குசமும் கொண்டு காணப்படுகிறார். மதுரை மீனாட்சியம்மன் கோவிலில் உள்ள முக்குறுணி விநாயகரை இவர் நினைவூட்டுகிறார்.

**இலிங்கோத்பவர்**

திருக்கொடுங்குன்றநாதர் சந்நிதிக்குப் பின்புறத்தில் இலிங்கோத்பவர் நான்கு கைகளுடன் காணப்படுகிறார். இவர் தலையில் கீரிட மகுடமும், காதில் மரகத குண்டலத்துடனும் காணப்படுகிறார்.

**துர்க்கை**

இக்கோவிலிலுள்ள துர்க்கை சிவதுர்க்கை. இவள் வடக்குப் பார்த்தவாறு நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் காணப்படுகிறாள். தலையில் கரண்ட மகுடத்துடன், கையில் சிவ ஆயுதங்களான உடுக்கை, கபாலம், சூலம் ஆகியவை இருப்பதால் இவள் சிவதுர்க்கை என்கிறனர் கோவில் பணியாளர்கள்.

**ஆலமர் செல்வன்**

பைரவர் சந்நிதிக்கு இடப்புறம் ஆலமர் செல்வன். தனிக்கருவறையில் முனிவர் நால்வருடன் தெற்கு நோக்கி கற்றளத்தில் உள்ளார். இவருக்கு மேல் தளத்தில் சுதையாலான வள்ளல் பாரியின் சிலை தேருடன் காணப்படுகிறது. இச்சிலை 45ஆம் பட்டம் தவத்திரு குன்றக்குடி அடிகளாரால் உருவாக்கப்பட்டதாகும்.

**தட்சிணாமூர்த்தி**

தெற்கு நோக்கிக் காட்சியளிப்பதால் இவர் தட்சிணாமூர்த்தி என அழைக்கப்படுகிறார். திருவாரூர், ஆலங்குடி போன்ற தலங்களில் இருப்பதைப் போன்று இங்கும் இவருக்குத் தனிச் சந்நிதி உண்டு. தட்சிணாமூர்த்தி நான்கு முனிவர்களுடன் வீற்றிருக்கிறார். அவர் அமர்ந்துள்ள பீடத்திலேயே சிறிய அளவில் முனிவர்கள் நால்வரும் செதுக்கப்பட்டிருப்பர். ஆனால் இங்கு தட்சிணாமூர்த்தியின் வலப்புறமும், இடப்புறமும் முனிவர்கள் உள்ளனர். வேறு எங்கும் காணா இச்சிறப்பு இக்கோவிலக்கு மட்டுமே பொருந்தும். ஆலமர் செல்வனின் அருகிலும் நான்கு முனிவர்கள் உள்ளனர். உருவ ஒற்றுமையிலும் ஒன்றாகவே இருக்கின்ற காரணத்தினால் இருவரும் ஒருவரா என்ற ஐயப்பாடு தோன்றுமாறு உள்ளது. தெட்சிணாமூர்த்தியின் அருகிலுள்ள முனிவர் சிலைகள் பிற்காலத்தில் கொண்டுவந்து வைத்ததாகவும் தெரியவருகிறது.

நவக்கிரகங்களில் உள்ள குருவை (வியாழன்) வணங்குவதற்குப் பதிலாக ஞான குருவான தட்சிணாமூர்த்திக்கு இக்கோவிலிலும் வியாழக்கிழமை சிறப்புப்பூசை நிகழ்த்தப் பெறுகிறது. வியாழக்கிழமைக்கும் தட்சிணாமூர்த்திக்கும் எவ்வித சம்பந்தமும் கிடையாது. இது குறித்து திருக்கோவிலூர் ஹரிபிரசாத் சர்மா, குரு பெயர்ச்சி காலத்தில் யாரைப்

பணிவது? நவகிரக குருவையா? ஞான குருவையா? என்ற கட்டுரையில் விரிவாக விளக்கியுள்ளது குறிப்பிடத்தக்கது.[8]

### துவாரபாலகர்

இடைத்தளத்தில் பைரவர் சந்நிதியின் வாயிலில் இரண்டு ஆண் துவார பாலகர் சிலைகள் உள்ளன. இரண்டும் வேறு வேறாக உள்ளன. இரண்டும் கற்களால் நேர்த்தியாகச் செதுக்கப்பட்டுள்ளன. மங்கைபாகர் சந்நிதியின் முன் பெண் துவார பாலகிகள் நிற்கின்றனர். இவை பாறையில் செதுக்கப்பட்டுள்ளன. "வாயிற்காப்போர் என்று ஐத்திரேய பிராமணத்தில் குறிக்கப் பெற்றுள்ளது. இறைவனின் இரு புறங்களிலும் உள் மண்டபத்தே இருந்து காவல் புரிபவர் என்று அந்நூல் மேலும் குறிப்பிடும்."[9]

### பிற தெய்வங்கள்

இவை தவிர்த்து, சண்டிகேசுவரர், விசுவநாதர், விசாலாட்சி, சொக்கநாதர், மீனாட்சி, பாலமுருகன், போன்ற தெய்வங்களுக்கென தனிச் சந்நிதிகள் சிறியளவில் காணப்படுகின்றன. தனியாக நவக்கிரகங்கள் உள்ளன. கொடுங்குன்றநாதர் சந்நிதியின் வலப்புறம் விநாயகரும், இடப்புறம் முருகனும் உள்ளனர். அறுபத்திமூன்று நாயன்மார்களும் வரிசையாக நின்ற கோலத்தில் காணப்படுகின்றனர். அவர்களுக்கு அடுத்ததாகச் சப்தகன்னிகளும் உள்ளனர்.

### சதாசேவை

எப்பொழுதும் இறைவனை வணங்கிக் கொண்டே இருக்க வேண்டும் என்பதைக் காட்டுவதே சதாசேவையாகும். இதனை மக்கள் 'உருக்கால்' என்று குறிப்பிடுவர். சதா சேவைச் சிற்பங்களைத் திருக்கோயிலைக் கட்டியவர்களும், நிருவாகம் செய்பவர்களும் அமைக்கின்றனர்.

சதா சேவைச் சிற்பங்கள் குடைவரைக் கோவிலில் காணப்பெறவில்லை. சுந்தரபாண்டியன் மண்டபத் தூண்களில் காணப்படுகின்றன. கீழ்த்தளத்தில் கொடுங்குன்றநாதர் சந்நிதியின் திருச்சுற்றிலுள்ள தூண்களில் சதா சேவைச் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. விசுவநாதர், விசாலாட்சி ஆகியோரின் சந்நிதிகளின் வரிசையில் வாகனங்கள் வைத்திருக்கும் அறையில் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீன அடிகளாரின் சதாசேவை காணப்படுகிறது.

பிற்காலத்தில், திருக்கோளக்குடியில் உள்ளது போன்று இங்கும் குடைவரை இறைவனின் சந்நிதிக்கு மேல் விமானம் இல்லா நிலையில், ஒரு கலசத்துடன் கூடிய விமானத்தை நிறுவியுள்ளனர்.

தமிழகத்தில் குடைவரைக்கோவிலின தோற்றம் ஏழாம் நூற்றாண்டாகக் கொள்ளப்படுகிறது. “இக்கோவிலிலுள்ள 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டினின்றும் எட்டுவெட்டை இடைவெட்டைகளில் திசை விளங்குதிசை ஆயரத்து ஐந்நூற்றுவர், ஏறுசாத்து இறங்கு சாத்து திசை ஆயிரத்து ஐந்நூற்றுவர் ஆகிய வணிகக் குழுக்கள் இருந்தமை தெரிகிறது. அவை திருப்பணி, திருமேற்பூச்சு ஆகிய கோவிலின் பல்வேறு பணிகளுக்குச் சில சுங்க வரிகளை வழங்க இந்தக் கோவிலில் ‘நிறைவறநிறைந்து குறைவறக்கூடி அமையப்பேசி’, இசையச் செய்தமையும் தெரிகிறது. அதில் உப்பு, நெல், இரும்பு, குதிரை, யானை போன்றவற்றிற்குச் சுங்கவரி விழுக்காடுகள் குறிக்கப் பெற்றுள்ளன. இதினின்றும் இவர்கள் தமிழ் மூதாட்டியான ஔவையார் வாக்கிற்கிணங்க திரைகடலோடி யானை, குதிரை, முத்து, வைரம் போன்ற பொருட்களை வியாபாரம் செய்து பொருள் ஈட்டியமை தெரிகிறது. தற்காப்பிற்காகப் படை நிறுவியதுடன், அளவற்ற தான தருமங்களையும்

செய்துள்ளனர். அக்கால வணிகக் குழு அமைப்பினை அறிய இந்தக் கல்வெட்டுப் பேருதவியாக உள்ளது.

இங்குள்ள இறையின் திருவுருவங்கள் சுதையால் செய்யப்பட்டனவாம். பூசனைக்குரிய இறையின் உரு ஆதியில் மரம் அல்லது சுதையால் செய்யப்பட்டது. பல்லவப் பேரரசர்களான பரமேசுவரவர்மன் மற்றும் இராசசிம்மன் காலத்தில்தான் கருவறையின் பின்சுவரில் இறையின் திருவுரு புதைச் சிற்பமாக உருவாக்கப்பட்டது. எனவே, இந்தக் குடைவரையின் காலத்தை ஏழாம் நூற்றாண்டாகக் கருதலாம்"(10) என்பர் தி.இராசமாணிக்கம்.

**குன்றக்குடிக் குடைவரைக்கோவில்கள்**

குன்றக்குடி மலையடிவாரத்தில் மிகப் பழமையான மூன்று சிவன் கோவில்கள் உள்ளன. இவை மூன்றும் குடைவரைக் கோவில்கள். மூன்றும் தெற்கு நோக்கியவையாகும். இத்திருக்கோவில் ஆதீனத்திற்கு உட்பட்டதை,

"பிறர்புகழின்சொல் பயிலுமி ளந்தைப்
பருவம்தன்கைச் சிலையாலே
பிறவித ருஞ்சிக் கதுபெரு கும்பொய்ப்
பெருவழி சென்றக் குணமேவிச்
சிறுமை பொருந்தி பெருமை முடங்கிச்
செயலும் மழிந்தற் பமதான
தெரிவையர் தங்கட் கயலை விரும்பிச்
சிலசில பங்கப் படலாமோ
செறுவித வஞ்சக் கபடமோ டெண்டிக்
கிலுமெதிர் சண்டைக் கெழுசூரன்
கிளையுடன் மங்கத் தலைமுடி சிந்தக்
கிழிபட ஒன்றிப் பொருதோனே
குறுமுனி இன்பப் பொருள்பெற அன்றுற்
மன மனுவுஞ்சொற் குருநாதா
குலகிரி துங்கக் கிரியுயர் குன்றக்
குடி வளர்கந்தப் பெருமாளே!"

என்று அருணகிரிநாதரால் பாடப்பெற்ற திருவண்ணாமலை ஆதீனம் குன்றக்குடித் திருப்புகழ் விளக்குகிறது.

## முதல் குடைவரைக்கோவில்

முதல் குடைவரைக் கோவில் 'மலைக்கொழுந்து நாதர்' என்ற சிவபெருமானுக்குரியது. இக்குடைவரையின் முகப்பில் இரண்டு தூண்களும், இரண்டு அரைத்தூண்களும் உள்ளன. இத்தூண்கள் மேலும் கீழும் சதுரமானவை நடுவில் எட்டுப்பட்டை கொண்டவை. குடைவரையின் இருபுறமும் வாயிற் காப்போர் தலையில் கொம்புடனும், இரண்டு கைகளுடனும் காணப்படுகின்றனர். வலக்கையில் கதை இருக்க இடக்கை கடிய வலம்பிதம்மாகும். கதையைச் சுற்றிப் பாம்பு உள்ளது. மார்பில் முப்புரிநூல் கிடக்கிறது. வாயிற் காப்போரான துவார பாலகர் நேராக நின்ற நிலையில் காணப்படுகின்றனர். பல்லவர் காலத்தில் துவார பாலகர்கள் இவ்வாறு அமைக்கப்படுவது மரபாகும்.

கருவறையில் சிவபெருமான் இலிங்க வடிவில் பாறையிலேயே செதுக்கப்பட்டிருத்தல் குறிக்கத்தக்கது. கருவறைக்கு இருபுறமும் துவார பாலகர் திரிபங்க நிலையில் இரண்டு கைகளுடன் நிற்கின்றனர். ஒரு கையை இடுப்பில் ஊன்றிக் கொண்டு மற்றொரு கையில் கதையை வைத்துக் கொண்டிருக்கின்றனர். இத்துவார பாலகர் தலையில் கொம்பில்லை. பாம்பு கதையைச் சுற்றியுள்ளது. நேரான பார்வையோடு அமைந்துள்ளது.

குடைவரையின் கீழ்ப்புறம் வலம்புரி விநாயகர் இரண்டு கைகளுடன் யோக நிலையில் திகழ்கிறார். வலக்கையில் மோதகம் இருக்க, இடக்கையை இடுப்பில் ஊன்றிய வண்ணம் காணப்படுகிறார்.

இங்கு எட்டுக் கைகளுடன் கூடிய ஆடவல்லான் விளங்குகிறார். இடப்புறக் கரங்களில் கட்டங்கம், அனல், பாம்பு ஆகியவை காணப்படுகின்றன. ஒரு கை கஜ அஸ்தத்திலும் அமைந்துள்ளது. வலப்புறக் கைகளில்

உடுக்கை, மழு ஆகியவை காணப்படுகின்றன. ஒரு கை சூசி அஸ்தத்தில் உள்ளது. கால்கள் சுவசுதிக (ஸ்வதிக் - பாதஸ்வஸ்திகா) வடிவத்தில் உள்ளன. வலப்புறக் காதில் குண்டலம் இருக்க, இடப்புறக் காதில் அணிகள் ஏதும் இல்லை. இரு புறங்களிலுள்ள பூதங்களில் வலப்பக்கம் மத்தளம் வாசிக்கும் பூதமும், இடப்பக்கம் தாளம் ஒலிப்பது போன்ற பூதமும் இருக்கின்றன.

தமிழகத்தில் பொதுவாக நடராச வடிவம் நான்கு கைகளுடனும், காலடியில் முயலகனுடனும் காணப்படுகிறது. வடநாட்டில் இத்தகைய அமைப்பு கிடையாது. இங்கு இவ்வடிவம் எட்டுக் கைகளுடன் அமைந்துள்ளதும், முயலகன் இன்றிக் காணப்படுவதும் குறிப்பிடத்தக்கது.

கருவறைக்கு வலப்புறம் சங்கர நாராயணன் உள்ளார். வலப்பக்கம் சடையும், புலி ஆடையும், மழுவும் சிவன் என்று காட்டுகின்றன. இடப்பக்கம் பட்டாடை, சங்கு, கிரீட மகுடம் ஆகியன திருமால் என உணர்த்துகின்றன. முற்கால சங்கர நாராயண வடிவங்களில் இது ஒன்று. அக்காலத்தில் சைவ, வைணவ வேறுபாடு இல்லை என்பதை இது சுட்டிக்காட்டுகிறது.

அடுத்து, எட்டுக் கைகளுடன் கொற்றவை புடைப்புச் சிற்பமாகக் காணப்படுகிறாள். வலக்கை ஒன்றில் சக்கரமும், மற்றொரு கை வரத முத்திரையுடன் காணப்படுகிறது. இவருக்கு வலப்பக்கம் ஒருவர் தம் தலையை வாளால் அரிந்து கொள்வதாகவும், இடப்பக்கம் உள்ளவர் கையில் உடுக்கை வைத்துக் கொண்டிருப்பது போலவும் காணப்படுகிறது. வெற்றிக் கடவுளாம் கொற்றவைக்கு பலி கொடுக்கும் வழக்கம் பாண்டிய நாட்டிலும் இருந்தமைக்கு இது சான்றாக அமைகிறது.

கருவறைக்கு இடப்புறம் இலிங்கோத்பவர் இருக்கிறார். சிவபெருமான் இடுப்பு வரை உருவாக்கப்பட்டு அதற்குக் கீழே தூணாக உள்ளார். இத்தகைய இலிங்கோத்பவரைத் திருமெய்யம், பிள்ளையார்பட்டி குடைவரைகளில் காணலாம். இலிங்கோத்பவர் வலப்பக்கம் பிரம்மாவும், இடப்பக்கம் திருமாலும் கூப்பிய கரங்களுடன் உள்ளனர் ஆடையின் மடிப்பு விசிறி போன்று எழிலாக உள்ளது.

அடுத்து, நான்கு கைகளுடன் திருமால் உருவாக்கப் பட்டுள்ளார். திருமாலுக்கு நான்கு கைகள், பின் வலக்கையில் சங்கும், பின் இடக்கையில் சக்கரமும் உள்ளன. முன் வலக்கை இடுப்பில் ஊன்றியும், முன் இடக்கை கடிய வலம்பிதமாகவும் திகழ்கின்றன. திருமாலுக்கு அருகில் கருடன் மனித வடிவில் விளங்குகின்றான். அதனை அடுத்து, நான்கு கைகளுடன் முருகன் காட்சி தருகிறான்.

குன்றக்குடியிலுள்ள முதல் குடைவரை சிவபெருமான், வலம்புரி விநாயகர், சங்கர நாராயணன், ஆடல் வல்லான், கொற்றவை, இலிங்கோத்பவர், திருமால், முருகன் என்று பல கடவுளர் உருவங்களையும் பெற்றுள்ளது. இக்குடைவரை பாண்டியர்க்குரியது.

**இரண்டாவது குடைவரை**

இரண்டாவது குடைவரைக் கோவிலில் உள்ள சிவபெருமான் ‘அண்ணாமலையார்’. இவர் மலைப் பாறையிலேயே வடிக்கப்பட்டிருக்கிறார். இக்கருவறையின் இருபுறமும் துவார பாலகர் நேரான பார்வையுடன் காணப்படுகிறார். கீழ்ப்புறமுள்ளவர் திரிபங்கமாகத் தலையில் கொம்பும், கரண்ட மகுடமும் விளங்க, இடக்கை கதையின் மீதிருக்க, வலக்கை கடிய வலம்பிதமாகவ விளங்குகிறார். மேற்புறமுள்ளவர் சமபங்க நிலையில்

உள்ளார். அவரின் வலக்கை கதையின் மீதிருக்க, இடக்கை இடுப்பில் ஊன்றியிருக்க அமைக்கப்பட்டிருக்கிறார். கதையைச் சுற்றிப் பாம்பு காணப்படுகிறது. இவர் தலையில் கொம்பு இல்லை. பின் வலக்கையில் ஒன்றுமில்லை. பின் இடக்கையில் சங்கு உள்ளது. முன் இடக்கை கடிய வலம்பிதமாக உள்ளது. இவருக்கு அருகில் கருடன் மனித வடிவில் உள்ளார்.

**மூன்றாவது குடைவரைக் கோவில்**

மூன்றாவது குடைவரைக் கோவில் சிவபெருமான் 'சுந்தரேசுவரர்'. இக்கோவில் 'மாசிலீசுவரம்' என்ற பெயரில் அழைக்கப்படுகிறது. மலையின் தென்மேற்கு அடிவாரத்தில் உள்ள குடைவரைக் கோவில்கள் பழமையானவை. நடுவிலுள்ள அண்ணாமலையார் குடைவரைக் கோவில் மாசிலீசுவரம் என்னும் வட்டெழுத்துக் கல்வெட்டால், இந்தக் குடைவரைக் கோவில் எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை என்பது புலனாகின்றது. இந்தக் குடைவரைக் கோவில்களில் முதல் இராசராச சோழன் (கி.பி. 985 - 1014), முதற் குலோத்துங்க சோழன் (கி.பி.1070 - 1120), பாண்டியன் சடையவர்மன் ஸ்ரீவல்லபதேவன் (கி.பி.1115-1137), மூன்றாம் குலோத்துங்கன் (கி.பி.1178-1218), மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி.1216-1237) ஆகிய மன்னர்கள் காலக் கல்வெட்டுக்கள் உள்ளன.

இங்கு மாசிலீச்சுரம் என்னும் வட்டெழுத்துக் கல்வெட்டு உள்ளது. இஃது எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தது. அதனால் இங்கு எழுந்தருளியுள்ளவர் மாசிலீசுவர் என்பதும், இக்கோவிலின் பெயர் மாசிலீச்சுரம் என்பதும் புலனாகும்.

மலைக்கொழுந்துநாதர் கோவில் முகமண்டப இடப்புறச்சுவர்த் தூண் முகப்பில் உள்ளது. இதில் பாண்டிய நாட்டு இராஜராஜ வளநாட்டுத் தேனாற்றுப் போக்கில் உள்ள ஊர்களைத தனக்குரிய ஜீவிதமாகப்

பெற்றவனாகிய இராஜராஜ தேவர் பெருந்தரத்து முகுந்தனூர் உடையான் காடன் ஸ்ரீஆரூர்த்தேவன் என்பவன், திருக்குன்றக்குடி பரமஸ்வாமிக்குத் தேனாற்றுப் போக்கில் நிவந்தம் செய்துள்ளான். இக்கல்வெட்டு இராசராச சோழனின் மெய்க்கீர்த்தியாக விளங்குகிறது.

சுந்தரேசுவரர் கோவில் முகமண்டபம் வலப்புறச் சுவர்த்தூண் முகப்பில் உள்ள கல்வெட்டில், குன்றக்குடியான தென்புகலூர் ஊரார், குன்றக்குடி மகாதேவருக்கு, திருவிழாப்புறமாகக் கூனன்குளத்துப் புறக்கரையில் பத்துமாநில எல்லைக்கல் நாட்டி நிவந்தமாகத் தந்துள்ளார்.

இந்தக் கல்வெட்டுகளால் அறியப்பெறும் குறிப்பிடத்தக்க செய்திகள் பின்வருமாறு:

1. கீழ்க்கோவில் மாசிலீச்சுரம் என்று வழங்கப்பெற்றது.
2. இத்திருத்தலம் கி.பி.1008 முதல் திருக்குன்றக்குடி, குன்றக்குடி என்று வழங்கப்பெற்று வருகிறது. அக்காலத்தில் தென்புகலூர் என்றும் வழங்கப் பெற்றுள்ளது.
3. இத்தலம் எட்டாம் நூற்றாண்டிலிருந்து தொடர்ந்து புகழ் பெற்று விளங்கி வருகிறது.
4. நேத்திரபால விநாயகர் திருவுருவைச் செய்வித்தவன் சாக்கர் பொற்பதி பாரியனார் செழிய சிங்கபத்மன்.
5. முதலாம் இராசராச சோழனின் மிகப்பெரிய வெற்றிச் செய்தி உறுதிப்படுகிறது.
6. மாறவர்மன் சுந்தரபாண்டியன் சோணாட்டின் மீது படையெடுத்துச் சென்று வெற்றி பெற்றது உறுதிப்படுகிறது.[11] என்பர்.

"குடைவரைகளுக்குச் சற்றுத் தொலைவில் சமணர்களுடைய ஏழு படுக்கைகள் உள்ளன. இவை முன்பு சமணர்கள் தங்கி, வழிபாடு நடத்திய இடமாக இருக்க வேண்டும். ஏற்கனவே வழிபாடு நடந்த இடங்களில் குடைவரைகளை அமைப்பது அக்கால மரபு. அம்மரபினை ஓட்டி, இங்கும் குடைவரைகள் உருவாக்கப் பட்டிருக்கலாம்.

இங்குள்ள குடைவரைகளின் அமைப்பு பல்லவப் பேரரசனான மகேந்திரவர்மன் பாணியில் உள்ளது. இருப்பினும் அவனது வழித்தோன்றலும், காஞ்சி கைலாசநாதர் கோயிலை எழுப்பியவனுமான இரண்டாம் நரசிம்மவர்மன் என்ற இராசசிம்மன் காலத்தில் செதுக்கப் பெற்ற குடைவரைகளைப் போன்று இங்கும் புதைச் சிற்பங்களுக்கு அதிக முதன்மை அளிக்கப்பட்டுள்ளது. இங்குள்ள புதைச் சிற்பங்கள் முற்காலப் பாண்டியர்களின் கலைச் செல்வங்களாம். இராசிம்மன் பாணி கி.பி.674 முதல் கி.பி 800 வரை என்று கொள்ளப்பட்டுள்ளது. எனவே இங்குள்ள குடைவரைக் கோவில்களை எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்தனவாகக் கருதலாம்"(12) என்பர் தி.ராசமாணிக்கம்.

**கட்டுமானக்கோவில்**

**பழனியாண்டவர் சந்நிதி**

பழனியாண்டவர் சந்நிதியில் இறைவன் அலங்காரத்துடன் ஊஞ்சலில் வைக்கப்பட்டுள்ளார். சந்நிதி வாயிலின் இரண்டு பக்கமும் நடராசர் சிலைகள் காணப்படுகின்றன. இது அன்னதான மண்டபம் என்று அழைக்கப்பெறுகிறது. சந்நிதியின் வலப்புறம் இடும்பன் வேல்களுடன் காட்சியளிக்கிறார்.

**சண்முகநாதன்**

மலைக் கோவிலிலுள்ள இறைவன் சண்முகநாதன், ஆறு முகங்களோடும், பன்னிரு கைகளோடும் மயில் வாகனத்தில் காட்சியளிக்கிறார்.

சண்முகநாதனின் வலப்புறத்தில் தனி மயில் வாகனத்தில் வள்ளியும், இடப்புறத்தில் தனி மயில் வாகனத்தில் தெய்வானையும் உள்ளனர். கருவறை அமைந்திருக்கும் மண்டபம் மயில் மண்டபம் என அழைக்கப்பெறுகிறது.

முருகவேல் அடியார்களுக்கு அஞ்சுமுகம் (இடுக்கண்) தோன்றும் போதெல்லாம் தமது ஆறுமுகம் கொண்டு ஆறுதல் தந்தருள் புரிகின்றான். இறைவனின் இறைமைக் குணங்கள் ஆறு. ஞானம், ஐசுவரியம், திரு, வீரியம், வைராக்யம், புகழ் என்ற ஆறும் ஆறுமுகங்களாகத் திகழ்கின்றன. ஆறுமுகப் பெருமான் தன வலப் பக்கத்தில் வள்ளியையும், இடப்பக்கத்தில் தெய்வானையையும் கொண்டு மயில் மீது இவர்ந்த கோலத்தில் உள்ளதை,

"படைவேல் பகழி வாள்திகிரி பாசம் அபயம் வலத்திடத்துச்
சுடர்வார் கலிசம் சிலைதோல்புள் தோட்டி வரதம்இவை பரிந்த
தடவான் கரமும் முகம்ஆறும் தனிமா மயிலும் இருமாதர்
உடனாம் எழிலும் தரும்ஆளு முகன் உருவம் உளுற்றுநரும்"

என்று தணிகைப் புராணம் (72), ஆறுமுகப் பெருமானின் வடிவ அமைப்புப் பற்றிக் கூறுகிறது.

கருவறையின் வாயிலில் துவார பாலகர்கள் காணப்படுகின்றனர். இருவரும் ஒரு கையில் வாளும், மறு கையில் கேடயமும் வைத்துள்ளனர். கருவறையின் முன் உள்ள தூண்களில் ரதி, மன்மதன் சிலைகள் அமைக்கப்பட்டுள்ளன. காமதகனம் நடைபெற்ற நிகழ்ச்சியினை நினைவூட்டுதாக இச்சிலைகள் உள்ளன.

கருவறையின் முன் கொடிமரம் புதுப்பொலிவுடன் காணப்படுகின்றது. கொடிமரத்தின் முன், மூன்று தலையுடன் கூடிய பாம்பை மயில் பிடித்திருப்பது போன்ற தோற்றத்துடன் மயில் வாகனம் கற்சிலையாக உள்ளது. அதன் பின்னால் பலிபீடம் காணப்படுகிறது.

**பிற தெய்வங்கள்**

மலைக்கோவிலக்குச் செல்லும் வழியில் கார்த்திகைப் பிள்ளையார் சந்நிதி உள்ளது. அதனைத் தொடர்ந்து,

'காவடிக்கு முன்னவனே கைவோன் நம்முருகன்
சேவடிக்கும்கீழ் நின்றருளும் செம்மலே மேவும்
இடும்பை எலாம் தீர்ப்பாய் இடும்பா நீ எம்மை
அடும்பகையை வெல்ல அருள்!'

என்ற பாடலுடன் இடும்பன் சந்நிதி உள்ளது.

ஆறு தூண்களுடன் அழகிய புடைப்புச் சிற்பங்களுடன் தனிக் கருவறையில் வல்லபை கணபதி வீற்றிருக்கிறார். கோவிலின் மேல்தளத்தில் கிழக்கு முகமாக துரைராசு மண்டபத்தில், வீரபாகு சந்நிதியும், நால்வர் (திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி, மாணிக்கவாசகர்) சிற்பங்களும் உள்ளன. வாயிலின் இருபக்கமும் துவார பாலகர்கள் வண்ணப்பூச்சுடன் காணப்படுகின்றனர். அதிகமான தூண்களை உடைய மகா மண்டபத்தில் சதா சேவை சிற்பங்கள் உள்ளன. அதில் ஆதீன அடிகளாரின் சிற்பமும், மருதுபாண்டியரின் சிற்பங்களும் அடங்கும்.

கருவறையின் திருச்சுற்றில் சொர்ணகணபதி, தெண்டுப்பரமன், குழந்தை வடிவேலர், சுமித்திர சண்டீசர், ஆடல் வல்லான், பைரவர், நவக்கிரகங்கள் (ஒன்பான் கோள்கள்), கொடிமரம், பலிபீடம், சந்திரன், சூரியன், விசாலட்சி உடனாய விசுவநாதர் (இலிங்க வடிவம்) ஆகிய கடவுளர்களின் தனிச் சந்நிதியும், புடைப்புச் சிற்பங்களும் காணப்படுகின்றன. வள்ளி, தெய்வானையுடனாய சண்முகநாதன் உற்சவமூர்த்தியாகத் தனியறையில் வைக்கப்பட்டுள்ளார். இது செப்புத் திருமேனியாகும்.

கார்த்திகை தினத்தன்று ஏற்றப்படும் பெரிய அளவிலான 'செடி விளக்கு' ஒன்றும் மகாமண்டபத்தில் உள்ளது. 5.11.1872ஆம் ஆண்டில் தேவகோட்டை இரு.வீர. வீரப்பச்செட்டியார் குடும்பத்தினர் இவ்விளக்கினைக் கோவிலுக்கு வழங்கியுள்ளனர்.

சண்முகநாதர் சந்நிதிக்கு நேர்கிழக்கே மலையடிவாரத்தில் சந்நிதி விநாயகர் கோவில் உள்ளது. சந்நிதி விநாயகர் கோவிலக்கு நேர்கிழக்கே ஒற்றைக்கால் மண்டம் உள்ளது. அருகில் கீழ் ரதவீதியில் பங்குனி உத்திரத்தேர் நிலை கொண்டுள்ளது. அடுத்து வெள்ளிரதம் நிலைகொண்டுள்ள கட்டடம், அதனைத் தொடர்ந்து தைப்பூசத் தேர் நிலை கொண்டுள்ளது.

**தீர்த்தங்கள்**

மலையடிவாரத்தின் தென்மேற்கே சரவணப் பொய்கை உள்ளது. கோவிலின் மேற்குப்பக்கத்தில் ஞானியார் மலையில் சுனையாகப் பாண்டவர் தீர்த்தம் உள்ளது. மேலும், தேனாறு தீர்த்தம், மயில் தீர்த்தம், சக்தி தீர்த்தம், சண்முகநதி ஆகியவை உள்ளன.

**திருக்கோளக்குடிக் குடைவரைக்கோவில்**

இக்கோவில் பிரான்மலைக் குடைவரையைப் போன்றே கீழ்த்தளம் (பாதாளம்), இடைத்தளம் (மத்யமம்), மேல்தளம் (சுவர்க்கம்) என்ற மூன்று பிரிவுகளுடையது. சுவர்க்கம் என்று அழைக்கப்பெறும் மேல்தளக் கோயிலே, இக்கோவிலின் ஆதிக்கோவிலாகும். பூமி, அந்தரம், சுவர்க்கம் என்னும் மூவகை அமைப்பில் உருவாக்கம் கொண்டிருக்கும் திருக்கோளக்குடித் திருக்கோவிலில் முறையே பொய்யா மொழீசர், சிவதருமபுரீசர், ககோளபுரீசர் ஆகிய இறைவனது சந்நிதிகளும், மரகதவல்லி, சிவகாமவல்லி, ஆத்மநாயகி ஆகிய இறைவியின் சந்நிதிகளும் வடிவாக்கம் கொண்டுள்ளன. மூன்று

சிவபெருமான், மூன்று அம்மன், மூன்று சுப்பிரமணியர் என்று மூன்று திருக்கோவில்கள் அடங்கியுள்ளன. இது பாண்டியர் காலக் குடைவரைக் கோவில் அமைப்புடையது.

பாதாளத்தில் பொய்யாமொழீசுவரர் கருவறை சதுரமாகவும் அனைத்து உறுப்புகளையும் பெற்றிருக்கிறது. இந்தச் சிவலிங்கம் மேற்கு நோக்கி அமைக்கப்பட்டுள்ளது. கருவறைக்கு முன் அர்த்த மண்டப வாயிலின் வலப்புறம் மேற்கு நோக்கி விநாயகர் வீற்றிருக்கிறார். அர்த்த மண்டபத்தில் சிவனுக்கு நேராக நந்தி அமைக்கப்பட்டிருக்கின்றது. மேற்கு நோக்கிய கடவுளர்கள் நோய் தீர்க்கும் வல்லமை உடையவர் என்ற நம்பிக்கை மக்களிடம் காணப்படுகிறது. பழனிமலை முருகனும், புள்ளிருக்கும் வேர் வைத்தியநாதனும் மேற்கு நோக்கியவை என்பது குறிப்பிடத்தக்கது.

இக்கோவிலில் தெற்கு நோக்கிய நிலையில் மரகதவல்லியம்மை நின்ற கோலத்தில் காணப்படுகிறார். சதுரவடிவான கருவறையின் விதானம் செட்டிநாட்டு வீடு கட்டும் கலைப்பாணியைக் கொண்டுள்ளது. மரச்சட்டங்கள் போட்டு கட்டப்பட்டுள்ளன. அம்மன் கருவறைக்கு எதிர்த் திசையில் காசி-மரகதம்பாள் சிறிய அளவிலான சிலைகள் உள்ளன.

இக்கோவிலில் கோபுரங்களோ, விமானங்களோ கிடையாது. ஒரே கட்டடத்திற்குள் சுவாமி, அம்மன் சந்நிதிகள் காணப்படல், விமானங்கள் இன்மை ஆகியன பிற்காலப் பாண்டியர் காலத்திய அமைப்பு என்றுணரப் பெறுகிறது. இக்கோவிலில் பள்ளியறையோ, உற்சவர் திருமேனியோ, கொடிமரமோ இல்லை.

**வட்டப்பாறை அல்லது திருப்பாறை**

பொய்யாமொழீசுவரர் திருக்கோவிலக்குத் தென்புறம் ஒரு வட்டமான பாறை காணப்படுகிறது. இந்தப்பாறையை மக்கள் வணக்கத்திற்குரிய நிலையில் வைத்துள்ளனர். இப்பாறையைச் சுற்றி வந்து சத்தியம் செய்தால், அதனை இறைவன் கேட்பான் என்று மக்கள் நம்புகின்றனர். அருகில் பொய்யாமொழீசுவரர் இருப்பதால், மக்கள் பொய்ச்சத்தியம் செய்வதற்கு அஞ்சுவதாகவும் கூறுகின்றனர்.

**வலம்புரி விநாயகர்**

மலை மேலுள்ள குடைவரைக்குச் செல்லும் வழியில், பாறையில் வலம்புரி விநாயகர் நான்கு கைகளுடன் யோக நிலையில் உருவாக்கப்பட்டுள்ளார். ஒரு கையில் மோதகமும், தலையில் கரண்ட மகுடமும் உள்ளன. மார்பில் முப்புரி நூலும், வயிற்றில் உதரபந்தனமும் உள்ளன.

**இடைத்தளம் (மத்தியமம்)**

இடைத்தளத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் சிவதருமபுரீசுவரர். சதுர வடிவமான கருவறையில் சிவபெருமான் கிழக்கு நோக்கி வீற்றிருக்கிறார். மலைமீது இருந்தாலும் இக்கோவில் கட்டுமானக் கோவிலாகும். கருவறைக்கு முன் பதினொரு தூண்களுடன் முன் மண்டபம் இருக்கிறது. இத்தூண்களில் தேர், மற்றும் மனித உருவங்கள் வணங்கிய நிலையில் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. இக்கருவறையில் தென்புறம் தேவகோட்டத்தில் தட்சிணாமூர்த்தி காணப்படுகிறார். ஏனைய தேவகோட்டத்தில் இருக்க வேண்டிய இலிங்கோத்பவர், பிரம்மா போன்றோர் காணப்படவில்லை.

திருமஞ்சன நீர் வெளியே செல்லும் கோமுகிக்கு அருகில் சண்டிகேசுவரர், தனிச்சந்நிதியில் அமர்ந்த கோலத்தில் காட்சியளிக்கிறார்.

இறைவன் சந்நிதிக்கு வடபுறத்தில் சிவகாமியம்மை கருவறை உள்ளது. இங்கு அம்மை கிழக்கு நோக்கி உள்ளாள். பாதாளத்தில் மரகதவல்லியம்மை தெற்கு நோக்கிய நிலையில், சிவகாமியம்மையோ மதுரை மீனாட்சியம்மனைப் போன்று கிழக்கு நோக்கி இருக்கிறாள்.

சிவதருமபுரீசுவரர் கருவறையின் பக்கச் சுவர்களில் பாண்டியர் காலக் கல்வெட்டுகள் காணப்படுகின்றன.

**மடைப்பள்ளி, சுனை, நந்தவனம்**

கருவறையின் தெற்கே மடைப்பள்ளி அமைந்துள்ளது. இதன் எதிர்ப்புறம் சுனை ஒன்று காணப்படுகிறது. இச்சுனையை 'தவளைபடாச் சுனை' என்று மக்கள் அழைக்கின்றனர். இச்சுனையில் தவளைகள் காணப்படாததால் இப்பெயர் வந்ததாகக் கூறுகின்றனர். சுனையின் மேலுள்ள பாறையில் தேனடைகள் காணப்படுகின்றன. தேன் சுனையில் விழுந்து இச்சுனைநீர் சுவையாக இருப்பதாகவும் கூறுகின்றனர். இத்தவளைபடாச் சுனை பற்றி ஆதீனப்புலவர் க.கதிரேசன், "இத்தளத்தில் 'தவளை படாச்சுனை' என்று ஒரு சுனை உள்ளது. இதில் தவளைகள் உண்டாவதில்லையாதலால் வந்த பெயர் என்கின்றனர். ஆனால் இதில் தவளைகள் நீந்தித் திரிகின்றன. எனவே இப்பெயர்க்காரணம் பொருந்துமாறில்லை. இதனோடு ஒத்த ஒலியுடைய வேறு ஒரு பெயரின் திரிபாக இருக்கலாம் என்று எண்ணலாம். இது தவளம் படாச் சுனை என்பது தவளம் ஒளி வெண்மை. இச்சுனைக்கு எதிரே கிழக்கில் நீண்டு நெடிய பாறையொன்று உள்ளது இது ஞாயிற்றொளி இச்சுனையில் படாதவாறு மறைத்து நீரைத் தண்ணீராகவே வைத்துக் கொள்ள உதவுகிறது.

தவளம் ஒளி. ஒளிபடாச் சுனை என்பதே ஊரவர் நாவில் 'தவளைபடாச்சுனை' என்று வழங்கப் பெறுகிறது"[13] என்கிறார்.

மடைப்பள்ளிக்கும் சுனைக்கும் இடைப்பட்ட பகுதி நந்தவனமாகும். இதில் தென்னை மரங்கள் காணப்படுகின்றன. சுனையின் மேற்புறமுள்ள சிறுமேடையில் தல விருட்சமான பலாமரமும், நெல்லிமரமும் உள்ளன. இவற்றின் கீழ்ப் பல நாகர் சிலைகள் காணப்படுகின்றன. மேல் தளச்சுவரில் கிழக்கு நோக்கியபடி சுவர் சிறிது அகழப்பட்டு 'பாலமுருகன்' சிலை நிறுவப்பட்டுள்ளது. தீபம் ஏற்றுவதற்குரிய மாடக்குழிகள் காணப்படுகின்றன. இதுதவிர 'சங்குச்சுனை' மலையின் அடிவாரத்தில் உள்ளது.

**சுவர்க்கம்**

இது மலைக்கோவிலின் மேல்தளம். இது பாண்டியர் காலக் குடைவரைக் கோவிலாகும். இக்குடைவரை மிகச் சிறியது. மலை குடையப்பட்டு, மலையில் ஒரு மேடைமீது சிவலிங்கம் அமைக்கப்பட்டிருக்கிறது. கருவறைக் குடைவரை 3x3மீட்டர் அகல நீளமும் இரண்டரை மீட்டர் உயரமும் கொண்டதாகப் பாறையிலேயே செதுக்கப்பட்டுள்ளது.

குடைவரைக்கு முன் அருத்த மண்டபத்தின் வலப்புறம் ஒரு இலிங்கம் காணப்படுகிறது. அருத்த மண்டபத்தை அடுத்துள்ள முன் மண்டபத்தில் இரண்டு அரைத்தூண்களும், இரண்டு முழுத் தூண்களும் இருக்கின்றன. இவற்றிற்கிடையே சற்று முன்பாக மலையிலேயே குடையப்பட்ட நந்தி காணப்படுகிறது.

**அகத்தியர் - புலத்தியர்**

இம்மண்டபத்தின் வலப்புறமும் இடப்புறமும் இறைவனை வழிபடுவது போல அகத்தியரும் அவரின் மாணாக்கர் புலத்தியரும் உள்ளனர். இவை பெரிய உருவங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. மூலவருக்கு அருகில் இருப்பதாலேயே இவர்கள் துவார பாலகர்கள் என்று கூறிவிட முடியாது. இருப்பினும் திருமெய்யம் சத்தியகிரீசுவர் குடைவரைக் கோவிலில் துவாரபாலகர் சாதாரணத் தோற்றத்தில் நிறுவப்பட்டுள்ளமை நோக்கத்தக்கது.

அகத்தியரையும் புலத்தியரையும் வெண்ணிற ஆடை கொண்டு மறைத்துள்ளனர். அகத்தியர் நின்ற கோலத்தில் தனது ஆணுறுப்பைக் கையில் பிடித்த வண்ணமும், புலத்தியர் ஒரு கையை மேல்நோக்கி, தடுத்து நிறுத்துவது போன்றும் வடிவமைக்கப்பட்டுள்ளனர். இறைவனுக்கு அபிடேக நீர் காசியிலிருந்து வருவதற்குத் தாமதமான போது, அகத்தியர் தனது சிறுநீரைப் பிடித்து அபிடேகத்திற்குத் தந்தார் என்றும், அப்போது புலத்தியர் அவ்வாறு செய்யக்கூடாது எனத் தடுத்தார் என்றும் ஒரு கதையை அர்ச்சகர் கூறுகின்றார்.

**மழவராயன் திருமண மண்டபம்**

முன்மண்டபத்தை அடுத்து மழவராயன் திருமண மண்டபம் உள்ளது. இம்மண்டபத்தில் பதினெட்டுத் தூண்களும், ஆறு அரைத் தூண்களும் உள்ளன. இம்மண்டபம் முன்மண்டபத்தின் மேல் கர்ணக்கூடு அமைக்கப்பட்டு அதனுடன் கட்டப்பட்டதாகும். இம்மண்டப வாயிலில் பலிபீடங்கள் உள்ளன. வடக்கிலும் கிழக்கிலும் உற்சவமூர்த்திகள் உள்ளனர்.

**உற்சவமூர்த்திகள்**

இக்கோவிலில் 26 உற்சவமூர்த்திகள் உள்ளனர். அவை ஐம்பொன்னால் செய்யப்பட்டுள்ளன. விநாயகர், சோமாசுகந்தர், கந்தர், பிரியாவிடை,

ஆத்மநாயகி அம்பாள், சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, அய்யனார், புசுபகலா, சூரியகலா, பிடாரிஅம்மன், அசுரதேவர் (சூலாயுதம்), (பிரதோச சாமிகள்) சிவன்-அம்மன், சந்திரசேகர்-அம்மன், நடராசர் (பெரிய நடராசர், சிறிய நடராசர்), சிவகாமி அம்மன் (பெரிய சிவகாமி, சிறிய சிவகாமி), மாணிக்கவாசகர், சுந்தரமூர்த்தி போன்ற உற்சவமூர்த்திகள் இங்கு அழகுறக் காட்சிபடுத்தப்பட்டுள்ளன.

வெள்ளியிலான இரண்டு காளை வாகனங்களும், மரத்தாலான கைலாச வாகனம், மயில் வாகனம், சிம்ம வாகனமும் இக்கோவிலில் உள்ளன.

**மகாமண்டபம்**

மகாமண்டபம் முப்பது முழுத்தூண்களும் ஆறு அரைத்தூண்களும் கொண்டது. மண்டபத்தின் வடக்கே நடராசர் சந்நிதி உள்ளது. இந்த நடராசர் சுதையாலானவர். பிற்கால வளர்ச்சியில் ஏற்படுத்தப்பட்டுள்ளதாக அறியப் பெறுகிறது.

நடராசர் சந்நிதிக்கு இடப்புறம் பைரவர் சந்நிதி உள்ளது. சந்நிதி வாயிலில் கெஜலெட்சுமி சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது. பைரவருக்கு முன்பாக வேல் காணப்படுகிறது.

**சப்தகன்னியர்**

கருவறைக்கு வடக்கேயுள்ள இலிங்கத்தை அடுத்து மலைப் பாதையில் சப்தமாதர் (மகேசுவரி, நாராயிணி, வராகி, பிராமி, கௌமாரி, இந்திராணி, சாமுண்டி) உருவங்கள் காணப்படுகின்றன. சப்தமாதர்களுடன் சிவபெருமான் காளை வாகனத்துடனும், வலக்கையில் சின்முத்திரையுடனும் சுகாசனத்தில் காட்சி தருகிறார். “இவை முற்காலப் பாண்டியரின் கைவண்ணம்”(14) என்பர்

கலைக்கோவன். படிக்கட்டின் வலப்புறம் சிறு இலிங்கம் ஒன்று பலாமரத்தடியில் உள்ளது. இப்பலாமரம் வேர்ப்பலா ஆகும்.

**ஆத்மநாயகி சந்நிதி**

ஆத்மநாயகியம்மன் சந்நிதி கிழக்கு நோக்கி உள்ளது. அம்மனின் கருவறை நீண்ட சதுர வடிவினது. அம்மனுக்கு முன்பாக நந்தியும், பலிபீடமும் காணப்படுகிறது. அந்தராள விதானம் எண்கோள வடிவினது. முன்மண்டபத்தில் பன்னிரெண்டு தூண்கள் உள்ளன. இம்மண்டபத்தின் வடபுறம் தென்முகமாக, சதுரவடிவில் பள்ளியறை சிறிய அளவில் உள்ளது.

அம்மன் சந்நிதிக்கு வெளியே இடப்புற மூலையில் சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை சந்நிதி இரு தூண்களுடன் கூடிய சிறிய சதுர வடிவில் உள்ளது. இச்சந்நிதியின் வழியாகத்தான் மலை உச்சிக்குச் செல்ல வேண்டும்.

மலையின் உச்சியில் வள்ளி, தெய்வானை உடனாய சுப்பிரமணியர் சந்நிதி உள்ளது. சந்நிதிக்கு வெளியே பலிபீடமும், மயிலும் உள்ளன.

அதன் அருகில் கற்களால் அடுக்கி வைக்கப்பட்ட சந்நிதி போன்ற அமைப்பு காணப்படுகிறது. அதனுள் இலிங்கம் ஒன்று வைக்கப்பட்டுள்ளது.

அதன் அருகிலுள்ள சிறு குன்றின் மேல் தூபி போன்ற அமைப்பு காணப்படுகிறது. அதில் கார்த்திகை தினத்தன்று தீபம் ஏற்றுகிறார்கள்.

குடைவரை இறைவனின் (ககோளபுரீசர்) சந்நிதிக்கு மேல் விமானம் இல்லா நிலையில் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம் தவத்திரு குன்றக்குடி அடிகளார், ஒரு கலசத்துடன் கூடிய விமானத்தை நிறுவியுள்ளார். தற்போது அக்கலசம் அங்கு இல்லை. திருடு போய்விட்டது..

**கலைச்சிறப்புகள்**

தமிழ்மக்கள் மொழி, கலை, இலக்கியம், சமயம் முதலிய பல்வேறு துறைகளில் வளர்ந்து புகழ் பெற்றுள்ளனர். தமிழ் மக்களின் பழமைக்கும், வளர்ச்சிக்கும் முக்கியச் சான்றாக, வழிபடு தெய்வம் ஆடல் வல்லோனாக அமைத்திருப்பதே ஆகும். தமிழ், இயல், இசை, கூத்து என மூன்று திறத்ததாக வளர்ந்து முழுமை பெற்றுள்ளது.

‘கோவில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்’

என்ற உலகநீதிப் பாடலின் வழி திருக்கோவில்கள் தமிழ் மக்களின் வாழ்க்கையில் எவ்வளவு முக்கியத்துவம் பெற்றிருந்தன என்பதற்குச் சான்றாக விளங்குவன.

**சிற்பக்கலை**

கலை, நாகரிகம் அடைந்த சமுதாயத்தின் படைப்புகளுள் ஒன்று. கலைத்துறை ஒன்றல்ல. அறுபத்து நான்கு கலைகள் என்று கூறுவர். கலை, அனுபவத்தில் பிறந்து அனுபவத்திற்கு உரியதாகி அனுபவத்தை வளர்த்துச் செழுமைப்படுத்துவது.

இயற்கையோடு இயைந்தது வாழ்க்கை, வாழ்க்கையோடு இயைந்தது சமயம், சமயமும் கலையும் ஒன்றையொன்று தழுவியன. எல்லாம் மனித குலத்தை வளப்படுத்துவதற்காகவே. தமிழகத் திருக்கோவில்கள் இயல்பான வாழ்க்கையோடு இயைந்த அனைத்து உணர்வுகளும் ததும்பும் சிற்பங்களைக் கொண்டு அழகுற விளங்குகின்றன. தமிழகத் திருக்கோவில்களின் சிற்பங்கள் கண்ணுக்கு விருந்து அளிப்பன; சிந்தைக்கும் களிப்பு நல்குவன எண்ணுவதற்குக் கற்பனைக் களஞ்சியமாய் விளங்குவன.

தமிழ்நாட்டுத் திருக்கோவில்களில் அமைந்துள்ள சிற்பங்கள், கலைகளின் கருவூலமாக மட்டுமல்லாமல், தமிழக வரலாற்றைப் பாதுகாத்து, அந்தப் பழமையான வரலாற்றுச் செய்திகளைப் புத்துணர்வோடு மக்கள் அனுபவிக்கத் தக்க வகையில் அமைந்துள்ளன. "தமிழகத் திருக்கோவில் சிற்பங்கள் பல திறத்தன. இச்சிற்பங்களைச் சாதாரண உருவங்களாகக் கருதுதல் கூடாது. கலையுணர்வில் ஆவேசித்து நின்ற ஒரு கலைஞன், அர்ப்பணிப்பு உணர்வுடன் தன்னை மறந்து இந்தச் சிற்பங்களைச் செதுக்குகின்றான். சிற்பக் கலைஞன் வாழும் உலகம் வேறு அவனுடைய மனோ நிலையும் வேறு. சாதாரணமாக - சராசரி வாழ்க்கைத் தரத்தைக் கூட உயர்த்திக் கொள்ளாதவர்கள் இத்தகைய சிற்பங்களை அனுபவிக்கவும் விமர்சிக்கவும் இயலாது. பொதுவாகச் சமய உலகில் ஆண், பெண் என்ற வேறுபாட்டின் காரணமாக உயர்வும் இல்லை தாழ்வும் இல்லை கவர்ச்சியும் இல்லை. காதல் வாழ்க்கை தவிர்க்க இயலாத ஓர் இயற்கை நியதி. எனவே, இவ்வகையான சிற்பங்களில் பெண்பால் உருவங்களைப் பார்க்கும் பொழுது சிலர் அதனைக் கொச்சையானது என்று நினைக்கின்றனர். அந்த உருவத்தைச் செதுக்கிய சிற்பி, கலை உபாசனா முறையில் பால் உணர்வுகளுக்கு அப்பாற்பட்டு நின்றே வடித்துக் கொடுத்துள்ளான். அந்தக் கலைஞனின் உணர்வுப் போக்கிலேயே அவற்றை அனுபவிக்க வேண்டும்"[15] என்பர். இம்மண்டபத் தூணில் ஒரு மூதாட்டி நிர்வாணக் கோலத்தில் நிற்கும் சிலை ஒன்று உள்ளது.

திருக்கோளக்குடிக் குடைவரைக்கோவிலில் உள்ள சிற்பங்கள், பாண்டியர் காலச் சிற்பங்களாகக் காணப்படுகின்றன. குறிப்பாக, வலம்புரி விநாயகரின் சிற்பம், வடக்குப் பக்கமாக மலையைக் குடைந்து, கிழக்கு

நோக்கிய நிலையில் பாறையில் செதுக்கப்பட்ட நேர்த்தி சிற்பக் கலைக்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

குடைவரையில் இறைவன் ககோளபுரீசர் திருமேனி பாறையிலேயே உருவாக்கம் கொண்டுள்ளது. இக்கோவிலிலுள்ள சப்தகன்னியருடன் சிவபெருமான் காளை வாகனத்துடன் இருப்பது போன்று சிலை வடிக்கப்பட்டுள்ளது.

கருவறையின் வலப்புறம் இருக்கும் அகத்தியர் நின்ற கோலத்தில் தனது ஆணுறுப்பைக் கையில் பிடித்த வண்ணம் உள்ள சிலை அமைப்பு, ஒரு கைதேர்ந்த சிற்பியின் கண்ணியத்தைப் புலப்படுத்துகிறது.

சிவதர்மபுரீசுவரர் முன் மண்டபத்தின் எட்டுத் தூண்களின் இடைப்பகுதியில் இரட்டை மீன், தனிமீன், தேர், தேரில் சிவலிங்கம் போன்றவை செதுக்கப்பட்டுள்ளன. இங்குள்ள கற்பலகைகள் பலவற்றிலும் இரட்டை மீன் சின்னங்கள் செதுக்கப்பட்டுள்ளன. கட்டுமானக் கோவில்களைப் போல புராணச் சிற்பங்களோ, ஓவியங்களோ காணப்படவில்லை. இவை பாண்டியரின் கை வண்ணங்கள் என்பதை நிருபணம் செய்கின்றன.

இக்கோவிலிலுள்ள 26 உற்சவ மூர்த்திகளின் ஐம்பொன் சிலைகள் கலைகளின் வடிவமாகக் காணப்படுகின்றன. வெள்ளியினாலும், மரத்தினாலும் செய்யப்பட்ட வாகனங்கள் (காமதேனு, காளை, குதிரை, அன்னம், பூதம்) கலை நயத்தைக் காட்டுகின்றன.

மலை உச்சியின் மேல் கார்த்திகை தீபம் ஏற்றுவதற்காகத் தூபி போன்ற அமைப்பு பிற்காலக் கட்டடக்கலைக்குச் சான்றாக விளங்குகிறது.

இம்மலையிலுள்ள கோளக் குன்றுகளே கலை வடிவமாகக் காட்சியளிக்கின்றன. இயற்கையிலேயே அமைந்துள்ள உலக்கை மலை கலை வடிவத்துடன் காணப்படுகிறது.

பிரான்மலை கொடுங்குன்றநாதர் திருக்கோவிலிலுள்ள கற்சிற்பங்கள் கலைநயத்துடன் செதுக்கப்பட்டுள்ளன.

பிரான்மலையிலுள்ள கோவிலில் மூன்று முகங்கள், மூன்று கைகள், மூன்று கால்களுடன் ஜுரகரேசுவரர் காணப்படுகிறார். இது சிவபெருமானின் மாற்று வடிவமாகும். இத்தகைய அமைப்பு ஒரு சில கோவில்களில் மட்டுமே அரிதாகக் காணப்படும்.

கோவில் திருப்பணிகள் நடந்து வருவதால் ஏனைய பழமையான ஓவியங்களோ, புராணச் சிற்பங்களோ இக்கோவிலில் காணக்கிடைக்கவில்லை.

பிரான்மலையில் மங்கைபாகர் சந்நிதிக்குச் செல்லும் வழியில் வெள்ளைப் பிள்ளையார் சிலை உள்ளது. முற்றிலும் சலவைக் கற்களால் ஆன சிறிய பிள்ளையார். சிற்பியின் கலைச் சிறப்பை அறியமுடிகிறது.

முன்மண்டபத் தூணில் கல் உருண்டை ஒன்று தூணிற்கு உள்ளே இருக்கின்றது. சிற்பக்கலையில் கைதேர்ந்தவர்கள் தமிழர்கள் என்பதைப் பறைசாற்றுகிறது.

குன்றக்குடி சண்முகநாதர் திருக்கோவில் குடமுழுக்கு அண்மையில் நிகழ்ந்தது. எனவே, இக்கோவில் அழகுற காட்சியளிக்கின்றது.

மலையடிவாரத்தில் உள்ள பழனியாண்டவர் சந்நிதியில், ஊஞ்சலில் ஆடிய வண்ணம் உள்ள பழனியாண்டவர் அழகுற காட்சி தருகின்றார்.

அங்குள்ள மண்டபத்தில் மீனாட்சித் திருக்கல்யாணக் காட்சி சுதைச் சிற்பங்களாக வண்ணப்பூச்சுடன் காணப்படுகிறது.

பூவேலைப்பாடுடன் சிற்பங்கள் காணப்படுகின்றன. லெட்சுமி அமர்ந்திருக்க இரண்டு பெண்கள் கவரி வீச, இரண்டு யானைகள் துதிக்கையுடன் காணப்படுகின்ற காட்சி, சுதைச் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளது.

குடைவரையின் நுழைவு மேற்பகுதியில் சிவனும், பார்வதியும் காளை வாகனத்துடன் இருக்க, இரண்டு பெண்கள் கவரி வீசு, ஆறு பெண்கள் வணங்குவது போன்ற காட்சி சிலையாக வடிக்கப்பட்டுள்ளது.

குடைவரையில், கருவறைக்கு வலப்புறம் சங்கர நாராயணன் உள்ளார். வலப்பக்கம் சடையும், புலி ஆடையும், மழுவும் சிவன் என்று காட்டுகின்றன. இடப்பக்கம் பட்டாடை, சங்கு, கிரீட மகுடம் ஆகியன திருமால் என உணர்த்தும் வகையில் சிற்பங்களில் நுண்ணிய வேலைப்பாட்டினைக் காணமுடிகிறது.

வள்ளி, தெய்வானை உடனாய சண்முகநாதன் ஆறு முகங்களோடும், பன்னிரு கைகளோடும் செதுக்கப்பட்டுள்ள சிற்பம் சிற்பக்கலையின் சிறப்பினை உணர்த்துவதாக உள்ளது. கருவறையின் முன் ரதி, மன்மதன் சிலைகளும் அழகுற காட்சிபடுத்தப்பட்டுள்ளன.

மகாமண்டபத்தின் மேற்புறத்தில் (உற்சவ மூர்த்திகள் வைக்கப்பட்டுள்ள அறையின் முன்பாக) அஷ்டதிக் பாலகர்கள் (வாயு, குபேரன், ஈசானம், வருணன், பிரம்மா, இந்திரன், நைருதி, யமன், அக்னி) (திசைகள் எட்டையும் காப்பவர்கள் என நம்பப்படுகிறது) தங்களின் வாகனங்களுடன் இருப்பது போன்று சிலைகளை நேர்த்தியாக வடித்துள்ளனர். "வழிபாட்டினை அனைவரும்

அனுபவித்து மகிழவே சிற்பம். திருவுருவ வழிபாடு. மலையெல்லாம் குகை. குகையெல்லாம் திருக்கோவில். மனம், வாக்குக் கடந்த பரம்பொருள். பேசும் பொற் சித்திரமாக, அருளும் திருமேனியாக எழுந்தருளியுள்ள காட்சி. தமிழகத்தில் உள்ள கோவில்கள் சிற்பக் களஞ்சியங்கள். கல்லுக்கு உயிர் கொடுத்துப் பேசவைக்கும் கலையில் தமிழ்ச் சிற்பக் கலைஞர்கள் விஞ்சிய புகழுடையவர்கள்"[16] என்ற அடிகளாரின் கருத்து இங்கு நோக்கத்தக்கது.

சண்முகநாதர் சந்நிதியின் எதிர்புறத்தில் உள்ள செடி விளக்கு நகரத்தாரின் கலைநயத்தையும், கொடைச்சிறப்பையும் காட்டுவதாக அமைகிறது.

குடைவரைக் கோவில்கள் மூன்றிலும் சதா சேவைச் சிற்பங்கள் காணப்படுகின்றன. மூன்று கோவில்களிலும் ஆதீன அடிகளாரின் சதா சேவைச் சிற்பங்கள் உள்ளன.

மூன்று கோவில்களிலும் பாண்டியரின் சின்னமான மீன் சிற்பம் செதுக்கப்பட்டுள்ளமை அறியப்பெறுகிறது.

**செப்புத் திருமேனிகள்**

குடைவரைக் கோவில்களில் செப்புத் திருமேனிகள் காணப்படுகின்றன. இவை எழில் மிகுந்து கலை நிறைந்து காணப்படுவதால் விலை மதிப்பில்லாச் செல்வங்களாகத் திகழ்கின்றன.

தமிழகம் தோற்றுவித்த சிறந்த கலைப் படைப்புகளில் ஆடவல்ல பெருமானாக நடராச மூர்த்தியாக உள்ள உருவே உலகோர் அனைவரின் கருத்தையும் கவர்ந்திருக்கிறது.

இம்மூன்று கோவில்களிலும் சிவபெருமானின் நடராச வடிவம் செப்புத் திருமேனிகளாக உள்ளன. சிவகாமியும், மாணிக்க வாசகரும் உடனிருக்க நடராசர் ஆடல் வல்லானாக இருக்கிறார். உற்சவமூர்த்தியாக இருக்கும் சிவபெருமான், பார்வதி சிலைகளோடு மாணிக்கவாசகரின் சிலை இருப்பது திருவிளையாடற் புராணக் காட்சியை நினைவூட்டுவதாக உள்ளது. பிற்காலத்தில் தான் இத்தகைய நிலை ஏற்பட்டிருக்க வேண்டும். ஏனெனில் கற்படிவங்களில் இத்தகைய அமைப்பு காணப்பெறவில்லை.

வாழ்வியல் கலைகளில் முதலில் தோன்றியது கூத்து. மக்கள் தங்கள் உணர்வுகளை நினைந்திடும் பொருட் குறிப்பை, முதன்முதலில் அங்க அசைவுகளால்தான் (Body Language) புலப்படுத்தினர். தமிழரின் தலைசிறந்த வழிபாட்டுத் திருவுருவம் ஆடல்வல்லான் (தென்னாடுடைய சிவன்) திருவுருவம். (தஞ்சைப் பெருவுடையார் கோவிலில் 80 வர்ணங்களைச் சிவன் அபிநயித்துக் காட்டுவதாகச் சிற்பத்தில் செதுக்கப்பட்டுள்ளன). ஆடல்வல்லானின் ஆனந்தக் கூத்தில் ஈடுபடும் ஆன்மா, இன்ப அனுபவங்களை அடைவதாக நம்புகின்றனர்.

தமிழரின் வழிபடும் தெய்வங்களில் சிறப்புடைய சிவம், சக்தி இருவருமே ஆடற்கலை நிகழ்த்தியிருக்கின்றனர். இன்றும் ஆடிய திருக்கோலத்தில் உள்ள அத்திருமேனிகளுக்கு வழிபாடு செய்யப் பெறுகிறது. இவ்வாதீனத்திற்கு உட்பட்ட மூன்று குடைவரைகளிலும் ஆடல்வல்லானின் சிலைகள் கற்சிலையாகவும், சுதைச் சிற்பங்களாகவும், செப்புத் திருமேனிகளாகவும் உள்ளன.

**ஓவியக்கலை**

வானவில்லின் வண்ணங்களைக் கண்ட தமிழர்கள், வண்ணப் பூச்சுக் கலையில் கைதேர்ந்தவர்களாக உள்ளனர். 'ஓவத்தன்ன வினைபுனை நல்இல்'

என்று அகநானூறும், 'ஓவக் கண்டன்ன இல' என்று நற்றிணையும் ஓவியக்கலையின் சிறப்பைக் கூறும். ஓவியமும் நுண்கலைகளில் ஒன்றாகும் பல வண்ணக்கலவையால் துகிலிகை கொண்டு படைக்கப் பெற்ற கண்கவர் காட்சிகள் ஓவு, ஓவியம், ஓவம், சித்திரம், படம், படாம், வட்டிகைச் செய்தி என்றும் அழைக்கப் பெற்றன.

சங்ககால நூல்களில் ஓவியக் கலையைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. அரண்மனைச் சுவர்களிலும், கோவில் சுவர்களிலும், செல்வரின் மாளிகைச் சுவர்களிலும் அழகிய ஓவியங்கள் வரையப்பட்டிருந்தன. அக்காலக் கோவில்களில் எழுத்து நிலை மண்டபம் என ஒரு பகுதி இருந்தது. அங்கு பெரும்பாலும் புராண சம்பந்தமான ஓவியங்கள் வரையப்பட்டிருந்தன. இதனை,

'இந்திரன் பூசை யிவளகலிகை யிவள்
சென்ற கவுதமன் சினனுறக் கல்லுரு
வொன்றிய படியிதென் றுரைசெய் வோரு
மின்னம் பலபல வெழுத்து நிலை மண்டபம்'

எனப் பரிபாடல் வரிகள் (19-54) குறிப்பிடுகின்றன.

'சுடும ணோங்கிய நெடுநிலை மனைதொறு
மையறு படிவத்து வானவர் முனிவர்
எவ்வகை யுயிர்களு வுவமங் காட்டி
கண்கல ரோவியங் கண்டு நிற்குநரும்'

என்னும் மணிமேகலை அடிகள் (3:128-131) அக்கால மனைகளில் ஓவியங்கள் எழுதப்பட்டிருந்தமையை விளக்குகின்றன. மடலேறுதல் என்பதுகூட ஒருவனின் வரையும் திறனைக் காட்டுவதாகும்.

ஓவியம் வரையப்பட்ட இடங்கள் சித்திர கூடம், சித்திரமாடம், எழுத்துநிலை மண்டபம், எழுதொழில் அம்பலம் என அழைக்கப் பெற்றன.

திருக்கோவில் முழுவதும் தூய்மையாகவும், அழகாகவும், எடுப்பாகவும் விளங்க வண்ணப்பூச்சு செய்யப்படுகிறது. குன்றக்குடி மலையடிவாரத்தில் உள்ள பழனியாண்டவர் மண்டபத்தில் நாயன்மார்களின் வண்ண ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. கோவில் மண்டபத்தின் உட்சுவரில் பல புராண, இதிகாசக் கதைகள் பல ஓவியங்களாகக் காட்சி அளித்ததை, மக்கள் கண்டு மகிழ்ந்தனர் என்பதைப் பரிபாடலின் வழி அறியலாம்.

அம்மண்டபத்தின் மேற்புறத்தில் இரண்டு பெண்கள் படுத்த நிலையில் நூல் வாசிப்பது போன்ற தோற்றத்துடன் ஓவியம் தீட்டப்பட்டுள்ளது. ஓவியர்கள் சோதிடக் கலைகளையும் நன்கு கற்று வளர்ந்து செவ்வனே தீட்டியுள்ளனர். பன்னிரண்டு ராசிகளையும், விண்மீன்களையும் சுவர் ஓவியங்களாக வரைந்துள்ளனர். இத்தகைய ஓவியங்களை ஓவியர்கள் வரைந்ததை நெடுநல்வாடை கூறும். நந்திதேவரும், ஒரு முனிவரும் யாழ் மீட்டுவது போன்ற ஓவியக் காட்சிகள் அழகுற, கலைநயத்துடன் காணப்படுகின்றன.

துரைராச மண்டபத்தில் வள்ளி, தெய்வானை உடனாய சண்முகநாதன் மயில் வாகனத்தில் இருப்பது (மூலவரைப் போன்று) போன்று ஓவியக் காட்சி வரையப்பட்டுள்ளது. பக்கத்தில் பெரியமருதுவின் பிளவை நோயைத் தீர்த்த வரலாறு ஓவியமாய் வரையப்பட்டுள்ளது.

## தொகுப்புரை

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்திற்கு உட்பட்ட குடைவரைகளில் சிவனே முழுமுதற்பொருளாக விளங்குவதை அறியமுடிகிறது. பிற்காலத்தில் மலை உச்சியில் முருகன் கோவில்கள் கட்டப்பட்டுள்ளன என்பதும் பெறப்படுகிறது.

ஆதீனத்திற்கு உட்பட்ட மூன்று குடைவரைகளில் சிற்பக்கலை வளர்ச்சி, ஆகம வழி கடவுளர்கள் போன்ற பல சிறப்பியல்புகள் காணப்படுகின்றன.

இங்குள்ள குடைவரைகளின் மண்டபத்தில் தாய்ப் பாறையிலேயே மூலத்தெய்வங்களின் உருவங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

இக்குடைவரைக் கோவில்களில் காணப்படும் சிற்பங்கள், அவற்றின் அமைப்பு ஆகியவை பாண்டியர் கால சிற்பங்களாகக் காணப்படுகின்றன.

இக்குடைவரைகளில் விநாயகர் புடைப்புச் சிற்பங்கள் அதிகளவில் காணப்படுகின்றன. இக்குடைவரைகளின் கருவறை, அபிசேக நீர் வெளியில் செல்ல கோமுகி அமைக்கப்பட்டு வழி செய்யப்பட்டுள்ளன. இக்குடைவரைகள் ஆன்மீகத்திற்கும், இந்து சமயக் கடவுளர் வழிபாட்டிற்கும் சிறப்பிடம் அளித்துள்ளமையை, இக்குடைவரைகளில் காணப்படும் கடவுளர்களின் சிற்பங்கள் வழி அறிய முடிகிறது.

திருக்கோளக்குடியில் கருவறைக்கு வடக்கிலும், மேலும் ஓர் இலிங்கமும் அதனை அடுத்து சப்தமாதர்களின் சிற்பங்களும் காணப்படுகின்றன. இவர்களுடன் இடபவாகனர் போன்று அமைப்புடைய சிற்பமும் காணப்படுகிறது. காளையுடன் இவர் காணப்படினும், ஆலமர்

செல்வரின் ஜடாபாரத்தைப் பெற்றுள்ளபடியால் இவர் ஆலமர் செல்வராக இருத்தல் கூடும் என்பது ஆய்வின் வழி அறியலாகிறது.

திருக்கோளக்குடியில் அகத்தியர் புலத்தியர் (சித்தர்கள்) சிலைகள் வேறு எங்கும் காணாத வடிவத்தில் இருக்கின்றன.

திருக்கோளக்குடி மற்றும் குன்றக்குடிக் குடைவரைக் கோவில்களின் அமைப்பு பல்லவப் பேரரசன் மகேந்திரவர்மன் பாணியில் உள்ளது. இருப்பினும் அவனது வழித்தோன்றல் இராசசிம்மன் பாணியில் உள்ளது போன்றே இங்கும் புதைச் சிற்பங்களுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. எனவே இதன் காலத்தை எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதலாம்.

ஓவியர்கள் சோதிடக் கலைகளையும் நன்கு கற்று வளர்ந்து செவ்வனே தீட்டியுள்ளனர். ஆடு முதலான பன்னிரண்டு ராசிகளையும், விண்மீன்களையும் சுவர் ஓவியங்களாக வரைந்துள்ளனர்.

குன்றக்குடி கோவிலின் உள்ளே, அஷ்டதிக் பாலகர்கள் தங்கள் வாகனங்களுடன் இருப்பது போன்ற சிலைகள் சதுரவடிவில் மேற்கூரையில் அழகுற செதுக்கப்பட்டுள்ளன

இக்குடைவரைகள் சமய வளர்ச்சி பெற்ற சமணர் வாழ்விடங்களின் அருகிலேயே அமைக்கப்பட்டுள்ளன என்பது பெறப்படுகிறது.

கலையின் வழியாகக் கடவுளர்களை மக்கள் கண்டு கருணையைப் பெறுகின்றனர். கடவுளர்களைக் காட்டும் கலைத்திறனாகிய சிற்பக்கலை வளர்ந்துள்ளது. சிந்தனையில் எழுந்த தியானத் திருவுரு, செயல்திறனாகக் கல்லிலும், மரத்திலும், செம்பிலும் உருவாயிற்று. கோவிலில் உள்ள

சிற்பங்கள் சிந்தனையாளனுடைய ஈடுபாட்டைத் தெரிவிக்கும் அழகுக் கருவூலங்களாக உள்ளன.

திருக்கோவில் அமைப்பு, சிற்ப வேலைப்பாடு, ஓவியச் சிறப்பு, சிவாகம நெறியில் செய்யும் பூசை முறைகள், ஆலய வழிபாட்டின் தத்துவம், இவையாவற்றையும் எக்காலத்திலும் யாவரும் அறிந்து செயல்பட வேண்டி, வழி வழி வந்த, இத்தகு மரபுக் கலைகளை, ஒவ்வொரு மனிதரும் அறிய வேண்டுமென நினைந்து குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனக் குருமுதல்வர்கள் செயல்பட்டு வருவது அறியப் பெறுகிறது.

சங்ககாலத்தில் காணப்பட்ட சுதைச் சிற்பங்களைப் போன்று, ஆதீனத்திற்கு உட்பட்ட மூன்று குடைவரைக் கோவில்களிலும் காணப்படுகின்றன.

கோவில்களில் திருப்பணிகள் செய்யும் பொழுது பழமையான ஓவியங்கள் அழிக்கப்பட்டுள்ளன என்பது பெறப்படுகிறது.

## சான்றெண் விளக்கம்

1. நா.வானமாமலை, தமிழ் ஆராய்ச்சியின் புதிய எல்லைகள், ப.102.

2. டாக்டர் கே.கே.பிள்ளை, தமிழக வரலாறு-மக்களும் பண்பாடும், ப.241.

3. டாக்டர் ஆ.வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ப.74.

4. சு.இராசவேல், அ.கி.சேஷாத்திரி, தமிழ்நாட்டுக் குடைவரைக் கோவில்கள், ப.3.

5. தி.இராசமாணிக்கம், தமிழகக் குடைவரைக் கோவில்கள், முன்னுரை.

6. குன்றக்குடி ஆதீன ஐந்து கோவில்கள், ப.17.

7. ந.ரா.முருகவேள், தெய்வத் திருவுருவங்கள், பக்.18-19.

8. ஹரிபிரசாத் சர்மா, தினகரன் ஆன்மீக மலர், பக்.18-19, நாள்:7.6.2014.

9. அ.விசுவநாதன், திருக்கோவில் கருத்தரங்கம் (ஆய்வுக்கோவை), ப.194.

10. தி.இராசமாணிக்கம், தமிழகக் குடைவரைக் கோவில்கள், பக்.12-13.

11. மரு.பரமகுரு, குன்றக்குடித் தலவரலாறு, பக்.74-82.

12. தி.இராசமாணிக்கம், தமிழகக் குடைவரைக் கோவில்கள், பக்.12-13.

13. க.கதிரேசன், திருக்கோளக்குடி தலவரலாறு, வாழ்த்துப்பகுதி.

14. மருத்துவர் கலைக்கோவன், எட்டாவது உலகத்தமிழ் மாநாட்டு மலர், பக்.287-290.

15. தவத்திரு குன்றக்குடி அடிகளார், திருக்கோவில் கருத்தரங்கம் , ஆய்வுக்கோவை (கோவில் வளர்த்த வாழ்வியற் கலைகள்), ப.29.

16. மேலது, ப.28.

குறிப்பு: தகவலாளிகள் அளித்த பேட்டிகள் (பின்னிணைப்பில் காண்க).

## இயல் - 3

## கட்டுமானக் கோவில்களின் அமைப்பும் திருவுருவ அமைதியும்

இறைவனை வழிபடாத வாழ்க்கை வாழ்க்கையாகக் கருதப்படமாட்டாது. மக்களிடையே தெய்வ வழிபாடு வாழ்க்கையின் அடிப்படைக் கொள்கைகளுள் ஒன்றாக உள்ளது. தங்குதடையின்றி இறைவனை வணங்கி அவனது அருளைப் பெற வசதியாகத் திருக்கோவில்கள் அமைக்கப் பெற்றன. 'கோவில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்பது முதுமொழி. 'கோ' என்னும் சொல்லுக்கு அரசன் என்பது பொருள். 'இல்' என்பது இல்லம் எனப்படும். அரசன் மக்களைக் காப்பது போன்று கண்ணுக்குப் புலப்படாத கடவுள் நம்மைப் பாதுகாக்கிறார் என நம்பப்படுகிறது. காலநிலையில் கடவுள் தங்கியிருக்கும் இடம் கோவில், கோட்டம் என அழைக்கப்பெற்றது.

திருமடங்களில் வீற்றிருந்து கோவில்களுக்கு வேண்டிய அனைத்துத் திருப்பணிகளையும் செய்து வரும் திருமடங்களின் குருமுதல்வர்களிடத்தில் திருக்கோவில் நிருவாகத்தையும், அதற்குரிய சொத்துக்களையும் மன்னர் பரம்பரையினர் விட்டுச் சென்றுள்ளனர். இது ஒரு நீண்ட வரலாறு ஆகும். ஒரு கோவிலை உருவாக்கி, சிலைவடித்து. அவ்வேற்பாடு தொடர்ந்து நடக்க நிலபுலன்கள் அளித்து, இவ்வாறாக அனைத்தையுமே செய்தவர் அரசரும், செல்வரும், சிற்பிகளும் ஆன தமிழரே என்ற வே.ஆனைமுத்து கருத்து இவண் கருதத்தக்கது. அந்தவகையில் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத் திருமடம் நெடுங்காலமாக ஐந்து திருக்கோவில்களை நிருவகித்து வருகிறது. அந்நிருவாகத்திற்கு உட்பட்ட கட்டுமானக் கோவில்களின் அமைப்பும் திருவுருவ அமைதியும் பற்றிக் காண்பதே இவ்வியலின் நோக்கமாகும்.

**ஆலய அமைப்பு**

ஆகமங்களில் விதிக்கப்பட்ட ஆலய அமைப்பு இரண்டு வகைப்படும். ஒன்று நம் உடல் அமைப்பையொட்டியது. மற்றொன்று நம் இதய அமைப்பையொட்டியது. பெரும்பாலும் கோவில்கள் உடம்பு போல் அமைக்கப்பட்டிருக்கின்றன.

'உள்ளம் பெருங்கோவில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளற் பிரானுக்கு வாய் கோபுர வாயில்'

என்பது திருமூலர் வாக்கு. ஆகம விதிப்படி ஆலயங்கள் கர்ப்பக்கிரகம், ஒன்று முதல் ஐந்து பிரகாரங்களுடன் கூடிய இராசகோபுரம், பலிபீடம், கொடிமரம், யாகசாலை, நந்தி முதலியவற்றுடன் விளங்கும்.

**இராசகோபுரம்**

பெரிய கோவில் ஒன்று அமைத்து அதற்கு வாயில் ஒன்று வைக்கப்படுகிறது. அந்த வாயிலுக்கு மேல் உயர்ந்த கோபுரம் ஒன்று எடுக்கப்படுகிறது. கோவிலிலுள்ள ஏனைய கோபுரங்களைவிட இந்தக் கோபுரம் மிக உயர்ந்து காணப்படும். இராசகோபுரத்தின் மேல்நிலை பொதுவாக ஒற்றைப்படை எண்ணில் அமைந்திருக்கும். மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது, பதினொன்று. இவ்வாறு அதில் அமைந்துள்ள நிலைகள் ஒன்றன்மேல் ஒன்றாகப் பெருகிக் கொண்டே போகும்.

**கடவுள் நம்பிக்கை**

மனிதன் விலங்கு வாழ்க்கையினின்றும் முன்னேறிச் சிறிது நாகரிகம் பெறத் தொடங்கியதும் பல சிந்தனைத் திறன்களைப் பெற்றான். இடி, மின்னல், புயல், வெள்ளம் போன்றவற்றின் பேரழிவுகள் நேரிட்டபோது, தன் ஆற்றலுக்கும் மேற்பட்ட ஒரு இயற்கை சக்தி உண்டென உணரத் தொடங்கினான். மனிதன் தன் ஆற்றல் ஓர் வரம்பிற்குட்பட்டது என்பதை உணர ஆரம்பித்த நிலையில்

தன்னை மீறிய ஓர் சக்தி உள்ளது அது கட்டுக்கடங்காதது என உணர்ந்தான். இவ்வாறு கடவுள் நம்பிக்கை தோன்றியது.

அச்சம் காரணமாகவும், பின்னர் அன்பு காரணமாகவும் தெய்வ வழிபாடுகள் தோன்றின. இதனைத் திருநாவுக்கரசர்,

"அஞ்சி யாகினும் அன்புபட் டாகிலும்
நெஞ்சம் வாழி! நினைநின்றி யூரைநீ"[1]

என்ற பாடலில் சுட்டியுள்ளார். இக்காரணம் பற்றிய கடவுளர்களின் தொடக்க வழிபாடு கோவில்களில் இல்லாமல் குன்றுகளிலும், ஆற்றங்கரைகளிலும், ஆல், அரசு போன்ற மரத்தடிகளிலும் நடைபெற்று வந்தது.

"ஆலமும் கடம்பும் நல்யாற்று நடுவும்
கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்
அவ்வவை மேய வேறுவேறு பெயரோய்"[2]

என்ற கடுவன் இளவெயினனார் பாடலின் வழி அறியலாம்.

கோவில் என்ற வழக்குக்கு முன், ஆலயத்தைக் கோட்டம் என்று அழைத்தனர். இதனைச் சிலப்பதிகாரத்தின் வழி அறியலாம். ஆலயங்கள் கற்றிளிகளாக ஓங்கின. அதனால் கடவுளுக்கும் 'கல் வீட்டுக்காரன்[3] என்ற பெயர் பொது மக்களிடத்தில் வழங்கப்படுகிறது.

### நடுகல் வழிபாடு

முற்காலத்தில் இயற்கை மலைகளில் அமைந்திருந்த குகைகளில் தான் கடவுளர்களை வழிபட்டார்கள். அவற்றின் உருவங்களைக் குகையின் சுவர்களில் ஓவியங்களாகத் தீட்டினார்கள். மிருகங்களை வேட்டையாடப் பயன்படுத்திய கற்களை நட்டு வைத்து வணங்கினார்கள். சங்ககாலத்தில் போரில் விழுப்புண் பட்டு வீழ்ந்த வீரர்களின் நினைவாக நடுகற்களை நட்டு வைத்து அதைச் சுற்றிக் கோவில் கட்டி மக்கள் வணங்கினர். வீரச்செயல்

செய்து நாட்டிற்குப் புகழ் தேடிய வீர ஆண்களுக்கும், பெண்களுக்கும் நடுகற்கள் அமைக்கப்பட்டன.

பண்டைக் காலத்தில் போரில் ஒரு வீரன் வீரமரணம் எய்திடுவானாயின் அவனுக்காக, அவன் நினைவாக ஒரு கல் நட்டு அக்கல்லில் அவனது வீரச் செயல்களைப் பொறித்து அதனை மங்கல நீராட்டி, அதற்குப் பலிகொடுத்து மக்கள் வணங்கினர். இதுவே நடுகல் வழிபாடாக வளர்ந்திருக்கின்றது. "நடுகல்லிற்கு நாட்காலையில் நன்னீராட்டிப் பாலூட்டி நெய்ந்துறை கொடுத்தலாகிய தூபம் போடுதல் மரபாம் என்னும் நற்றிணைப் பாடலின் வழி அறியலாம்."(4)

முன்னோர் வழிபாட்டில் முதன்மை பெறுவது நடுகல் வழிபாடாகும். சிறுதெய்வ வழிபாட்டின் தொடக்கம் நடுகல் வழிபாடாக இருந்திருக்க வேண்டும்.

"காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்

சீர்த்தகு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தலென்

றிருமூன்று வகையிற் கல்லொடு புணர"(5)

என்பது தொல்காப்பியம், "சமுதாயச் சிறப்புமிக்க இயல்புகளைக் கொண்டிருந்தவர்களின் இறப்பிற்குப் பின் அவர்களது நினைவாக நடப்பட்ட கல்லே நடுகல் ஆகும்."(6) இதனை,

"நடுகல் பீலி சூட்டி. நார் அரி

சிறுகலத்து உகுப்பவும்"(7)

என்று புறநானூறு கூறுகின்றது.

**மரவழிபாடு**

பல்லாயிரம் ஆண்டுகளாக மக்கள் வழக்கில் வழிபடு தெய்வங்களாகப் போற்றப்பட்ட மரங்கள் நாளடைவில் தல விருட்சங்கள் ஆயின. இம்மர

வழிபாட்டின் வளர்ச்சி நிலைதான் இன்று சைவ சமயக் கோவில்களில் தல விருட்சங்களை வணங்குவதாகும். பௌத்தர்கள் போதிமரத்தை வணங்குவது நோக்கத்தக்கது.

**பள்ளிப்படைகள்**

உலகிலே நல்வாழ்வு வாழ்ந்து இறந்துபட்ட பெரியோர்களுக்கும், போரில் வீரமரணம் எய்திய வீரர்களுக்கும் நினைவாக நடுகல் நடுவர். இதைப் போன்று இறந்து பட்டவர்களைப் புதைத்தலைப் 'பள்ளிப் படுத்தல்' என்பர். அவ்விடத்தே கோவில் எடுப்பதும் மரபாகும். இவற்றிற்குப் 'பள்ளிப்படை' என்று பெயர்.

**கோவில் வகைகள்**

மாடக்கோவில், கரக்கோவில், ஞாழக்கோவில், கொகுடிக் கோவில், இளங்கோவில், மணிக்கோவில், ஆலக்கோவில், திருக்கோவில் போன்றவை கோவில்களின் வகைகளாகும். "திருக்கோவில்கள் பெருங்கோவில், இளங்கோவில், மணிக்கோவில், கரக்கோவில், தூங்கானை மாடம் எனத் திருமுறைகளில் குறிக்கப்படுகின்றன. பொதுத் தன்மையில் தேவாலயம் என்றும், மிச்ராலயம் என்றும், சங்கீர்ணாலயம் என்றும் மூன்று வகைகளாகப் பிரிப்பர்"[(8)] என்பர்.

தமிழகத்தில் புராண அடிப்படையிலும், மும்மூர்த்திகள் வழிபட்ட தலத்தின் சிறப்புக்காகவும் தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள், அசுரர்கள், விலங்குகள், பறவைகள் போன்றோர் வழிபட்ட சிறப்புக் கருதியும், பல்வேறு கோவில்கள் தோன்றலாயின. பக்திப் பெருக்காலும், பாமரமக்களின் வேண்டுகோளாலும், பொதுமக்களின் நன்மைக்காகவும் மன்னர்கள் கண்ட

வெற்றியின் நினைவாகவும், சித்தர்களின் சீவசமாதி சுவடுகளுக்காகவும் கோவில்கள் எழுப்பப்பட்டன.

கோவில்கள் பெரும்பாலும் அரசர்களாலும், அரசமா தேவியர்களாலும். பெருங்குடி மக்களாலும், அமைச்சர்களாலும் கட்டப்பட்டவை. ஆலயங்களின் அமைப்புப் பணிகளில் குடிமக்களின் ஆர்வமும், பங்களிப்பும் பெருகப் பெருக கோவில்களும் பெருகின. "கோவில்கள் தேவார திருமுறைகள் ஓதுவிக்கும் கல்விச் சாலையாகவும், வேதங்கள், போர்க்கலைகள் பயிற்றுவிக்கும் பாடசாலையாகவும், பல்வகை இலக்கியம், இலக்கணம், இதிகாசம், காப்பியம், சோதிடம், மருத்துவம், ஆகமம், புராணம் போன்ற பல்வேறு சுவடிகள் சேகரிக்கும் மையமாகவும், அவற்றைப் பகுத்து, வகுத்துப் பிரித்து வகைப்படுத்திய நூலகமாகவும், மருத்துவச் சாலையாகவும், நிலங்களைக் கோவிலக்கு வாங்கி, விற்கும் ஆவணப் பதிவகமாகவும், நாட்டிய, நாடகங்கள் நடத்தும் கவின்கலைக் கூடமாகவும், பஞ்ச காலங்களில் நிவாரண மையங்களாகவும், கட்டடம், சிற்பம், படிமம் போன்ற நுண்கலை வளர்க்கும் வளர்கலைக் கூடமாகவும் விளங்கியுள்ளன"(9) என்பர். இதன்வழி கோவில்களின் பயன்கள் அறியவருகின்றன.

**கலை வளர்க்கும் இடம்**

அக்காலத்தில் கோவில்கள், பொதுமக்கள் கூடித் தங்கள் பிரச்சினைகளை ஆராய்கின்ற பொது மன்றங்களாகவும் இருந்தன. கோயிற்கலை வளர்ச்சியோடு சிற்பக்கலையும், ஓவியக்கலையும், இசைக்கலையும் நாட்டியக்கலையும் வளர்ந்தன. கோவில்களில் தெய்வங்களின் உருவங்களும், அரசர், அரசியர் மற்றும் உயரதிகாரிகள், அறிஞர்கள் ஆகியோரின் உருவங்களாகக் கல்லிலும், செம்பிலும் செதுக்கி வைத்தனர்.

கோவில் சுவர்களிலும் மேற்கூரைகளிலும் அழகிய ஓவியங்கள் தீட்டப்பட்டன. இறைவனின் திருவிளையாடல்கள், இயற்கைக் காட்சிகள் ஓவியங்களாகத் தீட்டப்பட்டு, ஓவியக்கலையும் வளர்ச்சியுற்றது. தேவாரம், திருவாசகம், பிரபந்தப் பாடல்கள், இசைக்கருவிகளின் துணையோடு கோவில்களில் பாடப்பட்டன. இசைக்கலையும் புத்துணர்ச்சி பெற்றது. இசையை ஓதுவாருக்கு மானியங்கள் வழங்கப்பட்டன. நாட்டியக்கலையும் வளர்ச்சியுற்றது. செல்வக்குடியில் பிறந்த பெண்கள்கூட நாட்டியத்தில் ஈடுபாடு கொண்டனர். நடனக்கலைக்காகவே தங்கள் வாழ்வை அர்ப்பணித்துக் கொண்டனர். பிற்காலச் சோழர் காலத்தில் தேவரடியார்கள் என அழைக்கப்பட்ட தளிச்சேரிப் பெண்டிர் நடனக் கலையிலும் இசைக் கலையிலும் சிறந்து விளங்கினர். பண்டைய தமிழ்மக்கள் கோவில்களோடு தங்கள் வாழ்க்கையை இணைத்தே வாழ்ந்தனர். கட்டடக்கலை, சிற்பக்கலை, சித்திரக்கலை, இசைக்கலை, நாட்டியக்கலை ஆகியவற்றின் பிறப்பிடமாகக் கோவில்கள் திகழ்ந்து கலைப் பொக்கிசமாக விளங்குகின்றன.

### திருப்புத்தூர் திருத்தளிநாதர் திருக்கோவில்

பாண்டியர்களின் கட்டுமானக் கோவில்களுக்குச் சான்றாக இக்கோவில் விளங்குகிறது. 'திருப்புத்தூரில் மருவியுறைதரு பெருமாளே' என்று அருணகிரிநாதரால் பாடப்பெற்ற திருத்தலமாகும். சம்பந்தர், நாவுக்கரசர் ஆகியோரது பாடல் பெற்றது இத்திருத்தலம் என்ற வரலாற்றுக் குறிப்பால் இக்கோவில் கி.பி. ஏழாம் நூற்றாண்டிலேயே சிறப்புப் பெற்றிருந்தமை அறியப் பெறுகிறது. முற்காலப் பாண்டியர்களின் கல்வெட்டுச் செய்திகளும் கிடைப்பதினால் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டிற்கும் முற்பட்டது என்பது தெளிவு. இக்கோவிலின் தீர்த்தமாக 'சீதளி' என்ற குளம் உள்ளது. தல விருட்சமாகச் 'சரக்கொன்றை' விளங்குகிறது.

இத்திருக்கோயிலைப் பற்றி ராய.சொக்கலிங்கம் 'திருப்புத்தூர் புராணம்' என்ற நூலை இயற்றியுள்ளார். 'பாண்டிய நாட்டுத் திருப்புத்தூர் சிற்சபையில் சிவபெருமான் ஆடினார் என்று மயிலை சீனிவேங்கடசாமி, 'இறைவன் ஆடிய ஏழுவகைத் தாண்டவங்கள்' என்ற நூலில் கூறியுள்ளார். திருப்புத்தூர் தலபுராணமும் இக்கருத்தையே வலியுறுத்துகிறது."(10)

இக்கோவில் கருவறை, அர்த்தமண்டபம், மகா மண்டபம், முன் மண்டபம் ஆகியவற்றுடன் தட்சிணாமூர்த்தி, மகாகணபதி, வர்ணலிங்கம், மகாலட்சுமி, அகத்தியலிங்கம், கொன்றை நாராயணப் பெருமாள், சண்டிகேசுவரர், துர்க்கை ஆகிய சந்நிதிகள் முதல்சுற்றில் காணப்படுகின்றன. இரண்டாம் சுற்றில் ஆறுமுகன், வன்னிமரத்து விநாயகர், திருநாகேசுவரர், பைரவர், ஆடல்வல்லான் சந்நிதிகள் உள்ளன. மூன்றாம் சுற்றில் அம்மன் சந்நிதி உள்ளது.

**காமிக ஆகமம்**

இக்கோவில் பெருந்தெய்வக் கோவில்களின் அடிப்படையில், காமிக ஆகம முறைப்படி கட்டப்பட்டுள்ளது. "சைவாகமங்கள் சதாசிவ மூர்த்தியால் அருளப் பெற்றனவாகும். இவை காமிகம் முதல் வாதுளம் ஈறாக 28 பகுப்பினை உடையதாகும். காமிக ஆகமத்தில் இந்த அதிஷ்டான வர்க்கம் பற்றிப் பல்வேறு விதமான பஞ்சரங்களும், கர்ணகூடங்களும், கோஷ்டங்களும், முக சாலைகளும், உபரி சாலைகளும் காணப்படுகின்றன. இந்த அதிஷ்டானம் 5,8,12, என்ற கோஷ்டங்கள் என்ற அமைப்பில் காணப்படுகின்றது. சாதாரணமாக 8 கோஷ்டங்கள் உள்ள திருக்கோவில்களே அதிகமாக உள்ளன. முன் வாசலின் இரண்டு பக்கத்திலுமுள்ள கோஷ்டங்களில் துவார பாலகர்களும் தென்புறமுள்ள கோஷ்டங்களில் நிருத்த கணபதி,

தட்சிணாமூர்த்தி, மேற்கு கோஷ்டத்தில் விஷ்ணு அல்லது இலிங்கோத்பவரும், வடக்கு கோஷ்ட மாடத்தில் பிரம்மா, துர்க்கையும், கோஷ்ட தேவதா மூர்த்திகளாகப் பிரதிட்டை செய்தல் வேண்டும். இந்த கோஷ்டத் திருமேனிகளின் லட்சணங்கள் பல நிலைகளில் வைத்துப் பூசிக்கப்படுகிறது. மேலும் தென் கோஷ்டத்தில் விநாயகர் விளங்குவார். அவருக்குப் பக்கத்தில் துர்வாசர் அல்லது அகத்தியர் அல்லது ததீசி அல்லது புலத்தியர் அல்லது வசிஷ்டர் ஆகியோரில் எவராவது ஒரு ரிஷியின் திருமேனி பிரதிட்டை செய்யப்படும். சிலர் புலத்தியர் ரிஷிக்குப் பதிலாக கௌதமரைச் சொல்வர். இவர்கள் பஞ்ச ரிஷிகள் ஆவார்கள்"[(11)] என்பர்.

**கருவறை**

கருவறை சிறிய அளவில் சதுர வடிவில் கிழக்கு நோக்கி உள்ளது. இதன் நிலை மகர தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளது.

**அர்த்த மண்டபம்**

கருவறையை அடுத்த அர்த்த மண்டபத்தில் கீழும், மேலும் நான்கு பட்டையுடனும், நடுவில் எட்டுப் பட்டையுடனும் எட்டுத் தூண்கள் காணப்படுகின்றன. இதன் மேல் தரங்க போதிகை உள்ளது. இம்மண்டபத்தின் வாயிலில் துவார பாலகர்கள் உள்ளனர். இத்துவார பாலகர்கள் இருக்கும் இடம் ஒரு சிறு அறை போன்று அமைக்கப்பட்டுள்ளது. இதன் வாயிலின் மேல் விதானத்தில் பூத கணங்கள் வரிசையாகக் காணப்படுகின்றன.

**மகாமண்டபம்**

மகாமண்டபத்தை 18 முழுத் தூண்களும், மூன்று அரைத் தூண்களும் தாங்குகின்றன. இத்தூண்கள் பல்லவர் காலப் போதிகை அமைப்பைப் பெற்றுள்ளன. மண்டபத்தின் மேற்கே இராமர், இலட்சுமணர், சீதை ஆகியோரின்

சந்நிதியும், வடக்கில் சிவகாமியம்மை உடனாய நடராசர் சந்நிதியும் உள்ளது. இம்மண்டபத்தின் நடுவில் நான்கு புறங்களிலும் கம்பிகளால் தடுப்புக் கட்டிய நிலையில் நந்தி சிலை உள்ளது.

**முன்மண்டபம்**

முன்மண்டபத்தில் இரு முழுத் தூண்களும், இரு அரைத் தூண்களும் உள்ளன. இம்மண்டபத்தில் ஆண் துவாரபாலகர்களின் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. மண்டபத்தின் வடக்கே சண்முகநாதரும், மேற்கே பொள்ளாப் பிள்ளையாரும், தெற்கே சம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோரின் படிமங்கள் உள்ளன.

**திருநாள் மண்டபம்**

திருக்கோவிலின் வாயிலில் நுழைந்தவுடன் காணப்படும் மண்டபம் ‘அநபாய சோழன் காவணம்’ எனப்படும். அதற்குத் தென்திசையில் திருநாள் மண்டபம் உள்ளது. இந்த மண்டபம் திருப்புத்தூர்த் தமிழ்ச் சங்க மன்றமாக விளங்குகிறது.

**முதல் திருச்சுற்று சந்நிதிகள்**

முதல் திருச்சுற்றில் பதின்மூன்று தூண்கள் உள்ளன. இம்மண்டபத்தில் மேற்கு நோக்கிய நிலையில் சூரியர், சந்திரர், வடக்கு நோக்கிய நிலையில் மகாலட்சுமி சந்நிதிகளும் உள்ளன. இம்மண்டபத்தில் சிற்ப வேலைபாடுகளுடன் பத்துத் தூண்கள் உள்ளன. இம்மண்டபத்தில் வீரபத்திரர், சப்தகன்னிகள், விநாயகர் சந்நிதிகளும் உள்ளன.

**சக்தி விநாயகர் சந்நிதி**

முதல் திருச்சுற்றின் மூலையில் கிழக்கு நோக்கிய நிலையில் இச்சந்நிதி உள்ளது. இதன் அருகில் துவார பாலகர்களுடன் கூடிய இரண்டு தூண்கள் உள்ளன.

**வர்ணலிங்கம் சந்நிதி**

இச்சந்நிதி மிகச் சிறிய குறுகிய வாயிற் படியுடன் அமைந்துள்ளது. இதனை அடுத்து கணபதி சந்நிதியும், காசி விசுவநாதர் - விசாலாட்சி சந்நிதியும் உள்ளன.

**அகத்தியலிங்கம் சந்நிதி**

முதல் திருச்சுற்றின் மேற்கில் கோவிலின் தல விருட்சமான சரக்கொன்றை மரத்திற்கு அருகில் நாகலிங்க வடிவ சிலைகள் காணப்படுகின்றன. அதற்கு வடமேற்கே அகத்தியலிங்கம் சந்நிதி உள்ளது. இச்சந்நிதி வாயிலின் மேற்புறம் விநாயகர் உருவம் அமைந்துள்ளது. இதன் எதிர்புறம் ஒரு அறையில் மகாலட்சுமியின் சந்நிதி தெற்கு நோக்கி உள்ளது.

**தல விருட்சம்**

சரக்கொன்றை மரத்தடியில் சிறிய வடிவிலான ஓர் அறையில் வால்மீகி முனிவர் அமர்ந்த நிலையில் உள்ளார். இது அவர் தவமிருந்த இடமாகக் கருதப்படுகிறது.

**பெருமாள் சந்நிதி**

வடக்கு நோக்கி கொன்றை யோக நாராயணப் பெருமாள் சந்நிதி உள்ளது. இச்சந்தியின் மேல் வட்ட வடிவ நாசிகையுடன் கூடிய சிறு விமானம் காணப்படுகிறது.

**சண்டீசுவரர் சந்நிதி**

வடக்குப்புறத்தில் சண்டீசுவரர் சந்நிதி அமைந்துள்ளது. இச்சந்நிதியின் மேல் ஒற்றைக் கலசத்துடன் சிறிய விமானம் உள்ளது.

**துர்க்கை சந்நிதி**

சண்டீசுவரர் சந்நிதிக்கு அருகில் துர்க்கை சந்நிதி அமைந்துள்ளது. சந்நிதிக்கு மேற்குப்புறமும், வடக்குப்புறமும் கம்பிகளாலான வாயில்கள் உள்ளன. இச்சந்நிதிக்கு மேல் ஒரு சிறு விமானம் காணப்படுகிறது.

**ஆடல்வல்லான் சந்நிதி**

முதல் பிரகாரத்தில் வடக்குப் பகுதியில் தெற்கு நோக்கிய நிலையில் ஆடல்வல்லான் சந்நிதி உள்ளது. இவ் ஆடல் வல்லான் கௌரி தாண்டவ மூர்த்தியாகக் கருதப்படுகிறார். ஆடல் வல்லான் 'கூத்தாடு தேவன்' என்று கல்வெட்டில் குறிக்கப்படுகிறார். இவர் சிவப்பு நிறத்திலும், பார்வதி பச்சை நிறத்திலும், மறுபக்கம் நந்திகேசுவரர் வெள்ளை நிறத்திலும் நின்ற கோலத்தில் உள்ளனர். இவரின் பத்துக் கைகளில் சூலம், உடுக்கை, அம்பு, கத்தி, மழு, கஜகஸ்தம், தீச்சட்டி, விறல், கேடயம், அங்குசம் ஆகியவைகளைத் தாங்கியுள்ளார். இடதுகாலை மேலே தூக்கிய நிலையிலும், வலதுகாலை முயலகன் மீது ஊன்றியவாறும் காட்சியளிக்கிறார். இச்சிலை சுதையால் ஆனதாகும். "இன்முறுவல் காட்டி தென்திசை நோக்கி நடனமிடும் வல்லானின், உடுக்கையில் சிகரமும், வீசிய கரத்தில் வகரமும், அபய கரத்தில் யகரமும், அகலில் நகரமும், ஊன்றிய திருவடியில் மகரமும் கொண்டு திருநடனம் அம்மைக்கு மகிழ்வூட்டுவதாக உள்ளது"(12) என்பர் குன்றக்குடி அ.பெரிய பெருமாள். இதனை விளக்கும் முகமாக ஆடல் வல்லானின் நடனத்தைக் கண்டு களிப்பது போல இடதுபுறத்தில் அம்மை

நின்ற கோலத்தில் உள்ளார். அம்மையின் வலது கரத்தில் நீலோபத்பவ மலரும், இடக்கரத்தினைத் தொங்கவிட்ட நிலையிலும் உள்ளார். கரண்ட மகுடத்துடன் ஆரம், வளையல் போன்றவையும் அணிந்துள்ளார்.

திரிபுர அரசர்கள் தாரகட்சன், கமலாட்சன், வித்துன்மாலி ஆகியோரின் பொன், வெள்ளி, இரும்புக் கோட்டைகளைத் தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்க எரித்துச் சாம்பலாக்கிய நிலையில் உமையவளுடன் சிவன் ஆடிய ஆடல்கள் கொடுகொட்டி, பாண்டுரங்கம், காபாலம் ஆகும். சிவன் ஆடும் பொழுது அனைத்தையும் அழித்துக் கொண்டே அவன் கைகொட்டி ஆடினான். இதுவே கொடுகொட்டி என்றாயிற்று. உடலில் சாம்பலைப் பூசிக் கொண்டு ஆடும் ஆடல் பாண்டுரங்கம். தலை ஓடு, எலும்புகளையும் ஏந்தி ஆடும் ஆடல் காபாலம் என்றாயிற்று. இதனை,

"படு பறை பல இயம்ப, பல் உருவம் பெயர்த்து நீ
கொடுகொட்டி ஆடுங்கால்...
மண்டு அமர்பல கடந்து மதுகையால் நீறு அணிந்து
பண்டரங்கம் ஆடுங்கால்...
கொலை உழுவைத் தோல் அசைஇ
கொன்றைத்தார் சுவற் புரள
தலை அங்கை கொண்டு நீ காபாலம் ஆடுங்கால்..."

என்று கலித்தொகை வாழ்த்துப் பாடல் கூறுகிறது.

கலித்தொகைக் கடவுள் வாழ்த்துப் பாடலில், இறைவனது ஆடலுக்கேற்பத் தாளமிடுகின்ற பொறுப்பேற்ற உமையவள் இங்கு ஒதுங்கி நிற்பது வியப்பைத் தருவதாக உள்ளது.

**தாண்டவங்கள்**

சிவபெருமான் ஆடிய தாண்டவங்கள் அறுபத்து நான்கு தாண்டவங்கள் (அட்டாட்ட மூர்த்தங்கள்) கூறப்பட்டுள்ளன. "மக்களுக்குப் பெரிதும் அறிமுகமாக உள்ள தாண்டவங்கள் ஏழு ஆகும். அவை ஆனந்த தாண்டவம், ஊர்த்தவ தாண்டவம், காளிகாதாண்டவம், சதுர தாண்டவம், சம்மார

தாண்டவம், சந்தியா தாண்டவம், திரிபுர தாண்டவம் ஆகும். சிலர் எழுவகைத் தாண்டவங்களாகக் காளிகாதாண்டவம், கௌரி தாண்டவம், சந்திய தாண்டவம், சங்கார தாண்டவம், திரிபுரத் தாண்டவம், ஊர்த்தவ தாண்டவம், ஆனந்த தாண்டவம் ஆகியவற்றைக் கூறுவர். இவற்றைப் பின்பற்றித் திருப்புத்தூர்ப் புராணம் சில நுண்குறிப்புகளைப் புலப்படுத்தும். அந்தப் புராணப்படி திருநெல்வேலித் தாமிர சபையிலே காளிகா தாண்டவம் அல்லது முனிதாண்டவம் படைத்தலைக் குறிக்கும். திருப்புத்தூர்ச் சிற்சபையிலும், மதுரை வெள்ளியம்பலத்திலும் முறையே கௌரி தாண்டவமும், சந்தியா தாண்டவமும் காத்தலைக் குறிக்கும். இருண்ட நள்ளிரவிலே சங்கார தாண்டவம் அழித்தலைக் குறிக்கும். தில்லைப் பொன்னம்பலத்தில் ஆனந்தத் தாண்டவம் ஐந்தொழிலையும் குறிக்கும் என்பது அறியலாகும்”[13] என்று கூறுவது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

தமிழ்ச் சிற்ப வரலாற்றிலும் ஆன்மிக வரலாற்றிலும் இத்தகைய சிறப்புப் பெற்றிருப்பதால்தான் துளசிராம் தமது அருட்பா ஆராய்ச்சி நூலில் "Lord Nataraja is the light within light" என்று குறிப்பிடுகிறார்.

**திருத்தளிநாதர்**

சதுரவடிவமான பெரிய ஆவுடையாரின் மேல் சுயம்பு இலிங்கமாகத் திருத்தளிநாதர் காட்சியளிக்கிறார். ‘லிங்’ என்பது ஒடுக்கமாகிய லயத்தையும் ‘கம்’ என்பது தோற்றத்தையும் குறிப்பிடும். எனவே இலிங்கம் என்பதைத் தோற்ற ஒடுக்கத்தின் சின்னமாக ஆகமங்கள் விளக்கும்.

**சண்முகநாதர்**

சண்முகநாதர் ஆறுமுகங்களுடன் மயில் மீது அமர்ந்துள்ளார். அவருடைய பன்னிரு கைகளில் வலக்கையில் வேல், அம்பு, வாள்,

சேவற்கொடி, கதை ஆகியவற்றுடன் ஒரு கரம் அபயமாகவும், இடக்கையில் ஒன்று வரதமாகவும், மற்றவைகளில் வச்சிரம், வில், கேடயம், தாமரை, சூலம் ஆகியவையுடன் விளங்குகிறார். முருகன் இடக்காலை மடக்கி வலக்காலைத் தொங்கவிட்ட நிலையில் உள்ளார். இருபுறமும் வள்ளியும் தெய்வானையும் நின்ற நிலையில் உள்ளனர்.

### பொள்ளாப் பிள்ளையார்

இவர் அமர்ந்த நிலையில் இடம்புரி விநாயகராக உள்ளார். உருவில் பெரியதாக அமைக்கப்பட்டுள்ளது. இவருக்கு நான்கு கைகள் வலது மேல் கையில் ஒடிந்த தந்தமும், கீழ்க்கையில் சங்கும், இடது மேல் கையில் அங்குசமும், கீழ்க்கையில் மோதகமும் உள்ளன. இவருக்கு அருகில் ஒரு சிறிய பிள்ளையாரும் உள்ளார். இரண்டும் ஒரே பீடத்தில் வைக்கப்பட்டுள்ளன. எதிரில் மூசிகம் பீடத்தின் மேல் அமைக்கப்பட்டுள்ளது. அங்கு பொல்லாப் பிள்ளையார் என்று எழுதப் பெற்றுள்ளது. ஆனால், பொள்ளாப் பிள்ளையார் என்பதே சரியான சொல்லாட்சியாகும். பொள்ளாப் பிள்ளையார் என்றால் உளியால் செதுக்காமல் சுயம்புவாகத் தோன்றியவர் என்று பொருளாகும்.

### நால்வர் திருவுருவ அமைதி

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் முதலான நால்வரும் நின்ற கோலத்தில் உள்ளனர். ஞானசம்பந்தர் கையில் தாளக் கருவியுடனும், அப்பரும், சுந்தரரும் கூப்பிய கரங்களை உடையவர்களாகவும், மாணிக்க வாசகர் அபய, வரத முத்திரைகளைக் குறிக்கும் கரங்களுடனும் காட்சியளிக்கின்றனர். சம்பந்தர், சுந்தரர் இருவருக்கும் மகுடம் உள்ளது. மற்ற இருவருக்கும் மகுடமில்லை. நால்வரும் கழுத்தில் ஆரம் அணிந்துள்ளனர்.

சமயாச்சாரியர்களான நால்வரைப் பற்றிய குறிப்புகள் கீழ்க்கண்டவாறு அமைகின்றன:

**திருநாவுக்கரசர்**

கூப்பிய கரங்களையுடையவரும், விபூதி உருத்திராக்கம் இவைகளை அணிந்திருப்பவரும், வயோதிகத் தன்மை வாய்ந்த சரீரத்தை உடையவரும், சாந்தஸ்வருபியாயும், புற்களை அகற்றும் உழவாரப் படையைக் கையில் கொண்டவரும், நன்மைகளைச் செய்பவரும், சிவாலயத்தைப் பரிசுத்தப்படுத்துவதற்கே தன்னை அர்ப்பணித்துக் கொண்டவரும், முழங்காலளவு மட்டில் ஆடையினை உடுத்தியிருப்பவரும் என்று அவருடைய அமைப்பு முறையினை விளக்குகிறார்.

**திருஞானசம்பந்தர்**

தலையின் முன்புறத்தில் அழகான கொண்டையினால் சோபிக்கின்ற முகத்தையும், சரீரத்தையுமுடையவரும், குழந்தை வடிவமாக இருப்பவரும், முத்துமாலை முதலான ஆபரணங்களை உடையவரும், அழகான ஆடையை உடுத்தியிருப்பவரும், சுவர்ணத்தாலான தாளத்தைக் கையில் வைத்திருப்பவரும், ஒலிக்கின்ற நூபுரத்தைக் கால்களில் அணிந்திருப்பவருமான என்று அவரின் அமைப்பு முறையைக் குறிப்பிடுவர்.

**சுந்தரர்**

கிரீட மகுடத்தைத் தரித்திருப்பவரும், காதுகளில் குண்டலங்களையும், மார்பில் பூணூல், ஆரம் முதலிய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவரும், இவரின் கரம் கடக் கரமாகவும், மற்றொரு கை தொங்கவிட்டபடியும் இருக்கும் எனச் சுந்தரரின் உருவ அமைப்பை விளக்குவர்.

**மாணிக்கவாசகர்**

வலது கையில் ஜபமாலை, இடது கையில் பன ஓலையாலான சுவடி, இவைகளை உடையவருமான, நற்தேக வடிவமுடையவருமான, விபூதி, ருத்ராட்சம் இவைகளைத் தரித்தவருமான என்று மாணிக்கவாசகரின் உருவ வடிவை ஒப்பிடுவர். ஆனால் வேறு திருத்தலத்தில் காணவியலாத வண்ணம் மாணிக்க வாசகர் இங்கு அபய, வரத முத்திரைகளைக் குறிக்கும் கரங்களுடனும் காட்சியளிக்கிறார்.

**முன்மண்டபத்துத் துவார பாலகர்கள்**

இருபுறமும் இரு ஆண் துவார பாலகர்கள் உள்ளனர். இவர்களுக்கு நான்கு கரங்கள் உள்ளன. இடப்பக்கம் உள்ள துவார பாலகரின் வலது மேல் கரத்தில் அங்குசமும், வலது கீழ்க்கரத்தில் சூசிக முத்திரையும், இடது மேல் கரத்தில் சங்கும், இடது கீழ்க்கரத்தில் கதையும் கொண்டு காட்சி தருகிறார். வலப்பக்கம் உள்ள துவார பாலகரின் இடது கீழ்க்கரம் சூசிக முத்திரையுடனும், மேல் கரத்தில் சங்கும், வலது மேல்கரத்தில் அங்குசமும், கீழ்க்கரத்தில் கதையும் காணப்படுகிறது. சிறிய மகுடத்துடனும் கோரைப் பற்களை வெளியில் நீட்டியும், கழுத்தில் ஆரம் அணிந்து முழந்தாள் வரையான ஆடை அணிந்தும் உள்ளனர். இடப்பக்கம் உள்ளவர் இடக்காலை ஊன்றி, வலக்காலை கதையின் மேல் வைத்துள்ளார். வலப்பக்கம் உள்ளவர் வலக்காலைக் கதையின் மேல் வைத்து, இடக்காலை ஊன்றிய படி உள்ளார்.

**முதல் திருச்சுற்றில் உள்ள திருவுருவ அமைதி**

முதலாம் திருச்சுற்றில் முதலாவதாக, சூரியன் நின்ற கோலத்தில் கரண்ட மகுடத்துடன் காணப்படுகிறார். கையிலும், கழுத்திலும் ஆரம் அணிந்திருககிறார். அவரை ஒட்டிய பெரிய கல் மண்டபத்தில் மகாலெட்சுமி

சிலை வடக்கு நோக்கி நடராசரைத் தரித்த வண்ணம் அமைக்கப்பட்டுள்ளது. நான்கு கைகளில் கீழ் வலக்கை அபயமாகவும், கீழ் இடக்கை வரதமாகவும், மேல் இடக்கையில அங்குசமும், வலக்கையில் சங்கும் வைத்துள்ளார். கழுத்தில் அணிகலன்கள் உள்ளன.

20.6.2011 அன்று நடந்த குடமுழுக்கின் போது மகாலெட்சுமியின் வலப்புறம் புதிதாக சரசுவதியின் சிலை தனிச்சந்நிதியாக அமைக்கப்பட்டுள்ளது.

முதல் திருச்சுற்றில் சப்தமாதர்களின் சிலைகள் உள்ளன. இவர்களுக்கருகில் முதலாவதாக வீரபத்திரரும், இறுதியாக விநாயகரும் உள்ளனர். விநாயகரை அடுத்து சேஷ்டாதேவியின் சிலை இடம்பெற்றுள்ளது. “ஜேஷ்டா தேவியானவள், செறிந்து விழுந்த ஸ்தநங்களும், செறிந்த (தொங்கும்) வயிறும், தொங்கும் உதடும், மேலே உயர்ந்த மூக்கும், முதிர்ந்த வயதுடையவள் போன்ற முகமும் சிவந்த உள்ளங்கையுமுடையவளாவாள். பீடாசனத்தில் அமர்ந்து கால்களை தொங்கவிட்டுக் கொண்டு இருப்பவள். இத்தேவியானவள் சிவப்பு நிறமாகவும், பச்சை நிறமான ஆடையை அணிந்தும், சகல ஆபரணங்களையுமணிந்தும், சர்பாரணம் அணிந்தும் இருப்பவள் ஆவாள்”(14) என்பர்.

சேஷ்டா தேவி அவருடைய மகன், மகள் ஆகிய மூன்று உருவங்களையும் ஒரே கல்லில் செதுக்கியுள்ளனர். இம்மூவரும் இடக்காலை மடித்து வலக்காலைத் தொங்க விட்ட நிலையில் உள்ளனர். வலக்கரம் அபயமாகவும், இடக்கரம் தொடைமீதும் வைத்துள்ளனர்.

வீரபத்திரர் அமர்ந்த நிலையில் நான்கு கைகளுடன் காணப்படுகிறார். கையில் வீணை வைத்து வாசிப்பது போல் உள்ளது.

தட்சிணாமூர்த்திக்கென தனிச் சந்நிதி உள்ளது. இவர் வலக்காலைத் தொங்க விட்டு இடக்காலை மடித்து வலது முழங்காலில் மீது வைத்து அமர்ந்துள்ளார். நான்கு கைகளில் முன் இடக்கை இடக்காலைப் பிடித்தபடி உள்ளது. முன் வலக்கை அபயமாக உள்ளது. பின் வலக்கையில் சங்கும், பின் இடக்கையில் அங்குசமும் வைத்துள்ளனர். கல்லால மரத்தடியில் அமர்ந்து காலுக்குக் கீழ் ஒரு அரக்கனை மிதித்த வண்ணம் உள்ளார்.

இடம்புரி விநாயகராக சக்தி விநாயகர் திகழ்கிறார். இவரது இரு தந்தமும் ஒடிந்த நிலையில் காணப்படுகிறது. கழுத்தில் பூணூல் அணிந்துள்ளார். நான்கு கைகளில், வலது மேல் கையில் தந்தமும், கீழ்க்கையில் சங்கும், இடது மேல் கையில் அங்குசமும், கீழ்க்கையில் மோதகமும் உள்ளன. இவருக்கு எதிரே இவருடைய மூசிக வாகனம் உள்ளது.

சிறிய வட்ட வடிவ ஆவுடையார் மீது சிறிய இலிங்க வடிவில் வர்ணலிங்கம் காட்சியளிக்கிறார். அருகில் அம்பாள் நின்ற நிலையிலும், எதிரே நந்தியும் உள்ளனர்.

அதனைத் தொடர்ந்து, பீடத்தில் அமர்ந்தபடி மகா கணபதி உள்ளார். இரு கைகளில் இடக்கை தொடைமீதும், வலக்கை மோதகத்தைப் பிடித்த நிலையிலும் உள்ளார். எதிரே மூசிகம் உள்ளது. கழுத்தில் ஆரமும், பூணூலும் அணிந்துள்ளார். இரு தந்தமும் ஒடிந்த நிலையில் உள்ளன.

வட்ட வடிவ ஆவுடையாரில் சிறிய லிங்க வடிவில் காசி விசுவநாதர் உள்ளர். அருகில் விசாலாட்சி நின்ற கோலத்தில், வலக்கரத்தில் மலரும்,

இடக்கரத்தைத் தொங்கவிட்ட நிலையிலும் காட்சியளிக்கிறார். இவர்கள் எதிரே நந்தியும் பலிபீடமும் உள்ளன.

கோவிலின் தலவிருட்சமான சரக்கொன்றை மரம் உள்ளது. இம்மரத்தின் கீழ், குடமுழுக்கு (20.6.2011) நிகழ்வின் போது வான்மீகி முனிவர் தவம் இருந்த இடம் என்று எழுதப்பெற்று, அம்முனிவருக்குச் சிலை ஒன்று நிறுவியுள்ளனர். இம்மரத்தின் கீழ் விநாயகர் சிலை ஒன்றும், நாகர் சிலைகளும் காணப்படுகின்றன.

தனிச்சந்நிதியாகக் கற்கோவிலக்குள் அகத்திய லிங்கர் பெரிய சதுர வடிவ ஆவுடையாரில் மேல் சிறிய வடிவில் அமர்ந்துள்ளார். அதே சந்நிதியில் தெற்கு நோக்கிப் புடைப்புச் சிற்பமாக நான்கு கைகளுடன் மகாலெட்சுமி உள்ளார். கரண்ட மகுடம் தரித்துள்ளார். மேல் இடக்கையில் சங்கும், மேல் வலக்கையில் அங்குசமும், கழுத்தில் பல்வேறு அணிகலன்களும் உள்ளன.

கொன்றை நாராயணப் பெருமாள் யோக நிலையில் இரு கால்களையும் மடக்கி அமர்ந்த நிலையில் உள்ளார். இவருக்கு நான்கு கைகள் உள்ளன. பின்னிரு கைகளில் வலது கையில் சக்கரமும், இடது கையில் சங்கும் உள்ளன. முன்னிரு கைகளும் தொடைமீது இடம்பெற்றுள்ளன. இதில் முனிவர் வடக்கு நோக்கியவாறு ஜடாமகுடம் தரித்து, முப்புரிநூல் அணிந்து, ஒரு கையில் கதையும், மறுகையைத் தொடைமீது வைத்தபடியும் உள்ளார். வடக்குப் பக்கம் உள்ள ஸ்ரீதேவி தெற்கு நோக்கியவாறு கைகளைக் கூப்பிய வண்ணம் காணப்படுகிறார். தேவியின் அருகில் அனுமன் கையில் கதையுடன் நின்ற வடிவில் சிறிய உருவமாக உள்ளார்.

சண்டிசுவரர் சிற்பம் மிக உயரமாக உள்ளது. நீண்டிருக்கும் இரு செவிகளில் குண்டலங்கள் உள்ளன. வலக்காலைத் தொங்க விட்டு,

இடக்காலை மடக்கி, பீடத்தில் வைத்தபடி அமர்ந்துள்ளார். இவரின் நான்கு கைகளில் வலது கீழக்கை அபயமாகவும், வலது மேல் கையில் சங்கும் உள்ளன. இடது கீழ்க்கையினைத் தொடைமீது வைத்தும் இடது மேல் கையில் அங்குசமும் ஏந்தியுள்ளார். கழுத்தில் ஆரம் அணிந்து கரண்ட மகுடத்துடன் காணப்படுகிறார்.

துர்க்கை கரண்ட மகுடத்துடன் நின்ற வடிவில் உள்ளார். இவருக்கு நான்கு கைகள். முன்னிரு கைகளில் வலக்கை அபயமாகவும், இடக்கை இடுப்பில் வைத்தபடியும், பின்னிரு கைகளில் இரு விரலை நீட்டியபடியும் உள்ளன. இத்துர்க்கை விட்ணு துர்க்கை என அழைக்கப்படுகிறாள்.

**இரண்டாம் திருச்சுற்றில் உள்ள திருவுருவ அமைதி**

முதல் திருச்சுற்றையும் இரண்டாம் திருச்சுற்றையும் இணைக்கும்படி முப்பது தூண்களைக் கொண்ட ஒரு மண்டபம் உள்ளது. இம்மண்டபத்தில் கொடிமரம், பலிபீடம், நந்தி சிலை ஆகியவை உள்ளன. இம்மண்டபத்தின் வடபுறத்தில் ஒன்பான் கோள்கள் (நவகிரகங்கள்) உள்ளன. அதனருகில் ஆஞ்சநேயர் சிற்பம் அமைந்துள்ளது. தற்போது ஆஞ்சநேயர் சிலை ஒன்று வைக்கப்பட்டுச் சந்நிதி போன்ற தோற்றத்தில் காணப்படுகிறது. திருச்சுற்றின் இடப்பக்கத்தில் உள்ள அறைகள் பழுது பார்க்கப்பட்டுப் பொருட்கள் அறையாகப் பயன்படுத்தப் பெறுகிறது.

மடைப்பள்ளியை அடுத்து வடக்கு நோக்கியவாறு ஆறுமுகசாமி (முருகன்) சந்நிதி உள்ளது. வள்ளயும், தெய்வானையும் திரிபங்க நிலையில் உள்ளனர். கால் வரையிலான ஆடையும், அணிகலன்களும் அணிந்துள்ளனர். வள்ளி வலக்கையைத் தொங்கவிட்ட நிலையிலும், இடக்கையில் அங்குசத்துடனும் காட்சியளிக்கிறார். தெய்வானை இடக்கை தொங்கியவாறு

வலக்கையில் மலர் தாங்கியுள்ளார். இருவரும் கரண்ட மகுடம் அணிந்துள்ளனர். முருகன் மயிலுக்கு அருகில் நின்ற கோலத்தில் நான்கு கைகளை உடையவராய் உள்ளார். முன் வலக்கை அபயமாகவும், இடக்கை வரதமாகவும், பின் வலக்கையில் அங்குசமும், இடக்கையில் சூலமும் வைத்துள்ளார். மூவரும் ஒரே பீடத்தில் உள்ளனர். இவர்களுக்கு முன் மயில் வாகனம் இடம் பெற்றுள்ளது.

அதனைத் தொடர்ந்து தற்போது நடைபெற்ற குடமுழுக்கின் போது 63 நாயன்மார்களும், 27 நட்சத்திரத்திற்குரிய நாயகர்களும் சிலை வடிவில் வைக்கப்பட்டுள்ளனர். அவரவர்க்குரிய ஜென்ம நட்சத்திரத்தில் சிறப்பு வழிபாடு நிகழ்த்தப் பெறுகிறது.

தென்மேற்கு மூலையில் விநாயகர் மிகப்பெரிய வடிவுடன் இடம்புரி விநாயகராகக் காட்சி தருகிறார். இவருக்கு நான்கு கைகள் இடது கீழ்க்கையில் மோதகமும், இடது மேல் கையில் மழுவும், வலது கீழ்க்கையில் தந்தமும், வலதை மேல் கையில் அங்குசமும் வைத்துள்ளார். இவருக்கு முன் மூசிகம் உள்ளது. இவரின் அருகில் நாகலிங்கம், சிறிய அளவிலான விநாயகர் சிலை, நிர்வாண கோலத்தில் பெண் சிலைகள் காணப்படுகின்றன.

**பைரவர் சந்நிதி**

இரண்டாம் திருச்சுற்றின் வடக்கில் பைரவர் சந்நிதி மேற்கு நோக்கியவாறு உள்ளது. இக்கோவில் கருவறை, அர்த்த மண்டபம், முன் மண்டபம் ஆகிய அமைப்புகளுடன் காணப்படுகிறது. முன் மண்டபத்தில் மருது சகோதரர்களுடைய சதாசேவைச் சிற்பங்கள் உள்ளன. முன்மண்டபம் பழுது நீக்கி பளிங்குக் கற்களால் புதுப்பிக்கப்பட்டுள்ளது. இதில் 18 தூண்கள் காணப்படுகின்றன.

புதுப்பிக்கப்பட்ட விமானம் கொண்ட தனிச்சந்நிதியில் மேற்குப் பார்த்தவாறு யோக பைரவர் காட்சிதருகிறார். யோக நிலையில், இரண்டு பாதங்களையும் பிணைத்து ஒடுக்கிப் பாதங்கள் நிலத்தில் பதியாது, உடம்புள் அடங்க வைத்து, தன் பெருவிரலை ஊன்றி அமர்ந்துள்ளார். இவரின் அருகில் வாகனமும், ஆயுதங்களும் காணப்பெறவில்லை. யோக பைரவரின் சந்நிதிக்கு முன்பாக இந்திரன் மகன் சயந்தன் கரங்களைக் கூப்பியவாறு, காதில் குண்டலமும், கழுத்தில் ஆரமும் அணிந்து, விரித்த சடையுடன் நின்ற வடிவில் சிலையாகக் காணப்படுகிறார்.

பைரவரின் சந்நிதிக்கு நேர் எதிரே மேரு பீடம் உள்ளது. இது மூன்றாம் திருச்சுற்றில் காணப்படுகிறது. யோக பைரவர் கால பைரவர் என்றும் அழைக்கப் பெறுகிறார். இக்கோவில் திருப்பத்தூர் திருத்தளிநாதர் திருக்கோவில் என அழைக்கப் பெறும் முன்னர் வைரவன் கோவில் என்றே அழைக்கப் பெற்று வந்துள்ளது. இன்றும் அரசுப் பதிவேட்டில் வைரவன் கோவில் என்றே உள்ளதாகக் கூறுகின்றனர். "சிவபெருமானின் பல திருநாமங்களுள் பைரவர் எனும் திருப்பெயர் சிறந்ததொன்றாகும். இவ்வுருவம் வீரம், கருணை, ஞானம் எனும் மூன்றினையும் தன்னுள் கொண்டது. சிற்ப நூல்களும், சிவாகமங்களும் பைரவமூர்த்தத்தை விவரிக்கும் போது அறுபத்து நான்கு பைரவர்களைக் கூறுகின்றன"(15).

இத்திருக்கோவிலில் உள்ள பைரவர் காலபைரவர் என்றும் அழைக்கப்படுகிறார். "கால பைரவர் குண்டலங்களை அணிந்த தோற்றம், கருமை நிறம், சர்ப்ப பூணூல், இடக்கரத்தில் கபாலம், வலக்கரத்தில் தண்டம் (தடி), இடையூறுகளை அழித்து இன்பம் தருபவர். ஜ்வாலாகேசம் கொண்டு விளங்குபவர்"(16). என்பர்.

சிவாலயத் திருமேனிகள் என்ற நூலில் பைரவமூர்த்தி திருவுருவ வகைகள் என்ற கட்டுரையில் கூறியபடி பைரவரின் தோற்றங்களை ஆராயுங்கால், திருப்புத்தூரில் உள்ள யோக பைரவருக்கும் ஏனைய பைரவருக்கும் உள்ள அடையாளங்கள் வேறுபடுகின்றன. எனவே, தனித்து ஆய்வதற்கானக் கூறுகள் உள்ளன என்று ஆய்வாளர் கருதுகிறார்.

**திருநாகேசுவரர்**

யோக பைரவர் சந்நிதிக்குப் பின்புறம் கிழக்கு நோக்கி திருநாகேசுவரர் சந்நிதி உள்ளது. இவர் லிங்க வடிவில் காணப்படுகிறார். கருவறைக்கு வெளிப்புறத்தில் ஆஞ்சநேயர் சிலையும், விநாயகர் சிலையும் உள்ளன. அர்த்த மண்டபத்தில் பத்துத் தூண்கள் இருக்கின்றன.

**மூன்றாம் திருச்சுற்றில் உள்ள திருவுருவ அமைதிகள்**

மூன்றாம் திருச்சுற்றின் நுழைவு வாயில் 'நம்பியாண்டார் நம்பி வாயில்' என்றழைக்கப்படுகிறது. வலப்புறத்தில் திருநாள் மண்டபம் உள்ளது. இதன் தென்கிழக்கு மூலையில் யானை கட்டும் இடம் உள்ளது. இதில் யானை சிவகாமி உள்ளது. இச்சுற்றில் மரங்களும், யானைக்குத் தேவையான புற்களும் வளர்க்கப்படுகின்றன.

**சிவகாமி அம்மன் சந்நிதி**

சிவகாமி அம்மன் சந்நிதி கிழக்குப் பார்த்தவாறு உள்ளது. சதுர வடிவில் அமைக்கப்பட்டுள்ளது. அர்த்த மண்டபமும், திருச்சுற்றுடன் கூடிய மண்டபமும் உள்ளன. இக்கோவிலின் கோபுரம் மூன்று மாடங்களுடன் ஐந்து கலசங்களுடன் காணப்படுகின்றன.

சிவகாமி அம்மை நின்ற வடிவில் இரு கைகளுடன் காட்சிளிக்கிறார். வலது கையில் தாமரையும், இடது கை தொங்கவிட்ட நிலையிலும் காணப்படுகிறது. சிலை அழகுற அமைக்கப்பட்டுள்ளது.

சிவகாமி அம்மன் சந்நிதியின் வாயிலில் இருபுறமும் பெண் துவாரபாலகிகள் உள்ளனர். அவர்களில் வலது துவார பாலகிக்கு நான்கு கைகள். அவற்றில் இடது கீழ்க்கையில் கத்தியும், மேல் கையில் மழுவும், வலது கீழ்க் கையில் கதையை வைத்து அக்கதையைத் தரையில் ஊன்றிப் பிடித்துள்ளார். மேல் கையில் தண்டம் வைத்துள்ளார். இடது துவார பாலகியின் வலக்கையில் கத்தியும், மழுவும் உள்ளன. இடக்கையில் உள்ள கதையைத் தரையில் ஊன்றியபடி மற்றொரு கையில் தண்டம் வைத்துள்ளார்.

சிவகாமி அம்மனின் அந்தராள வெளிப்புறச் சுவரில் வலதுபுறம் விநாயகர் நான்கு கைகளுடன் வீற்றிருக்கிறார். வலதுபுற மேல் கையில் மழுவும், கீழ்க்கையில் ஒடிந்த தந்தத்தையும் வைத்துள்ளார். இடது மேல் கையில் மழுவும், கீழ்க்கையில் மோதகமும் உள்ளன. இடப்புறத்தில் முருகன் மயில் மீது அமர்ந்த நிலையில் உள்ளார்.

**செப்புத் திருமேனிகள்**

இக்கோவிலிலுள்ள செப்புத் திருமேனிகள் கலையழகுடனும், தெய்வீகத் தன்மையுடனும் காட்சி தருகின்றன. இங்கு 10ஆம் நூற்றாண்டைச் சார்ந்த செப்புத் திருமேனிகளும் இருக்கின்றன. அந்நியரின் படையெடுப்பு மற்றும் ஆங்கிலேயர்களின் ஆட்சிக் காலங்களில் செப்புத் திருமேனிகள் மறைத்து வைத்துப் பாதுகாக்கப்பட்டுள்ளன. இங்குள்ள சுரங்கத்தைச் சுத்தம் செய்யும் போது இராமர், இலட்சுமணர், சீதை ஆகியோரின் சிலைகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன இவை இக்கோவிலக்கு உரியவையா அல்லது

பாதுகாப்பிற்காக வேறெங்கிருந்தோ கொண்டு வரப்பட்டவையா என்பதை அறிய முடியவில்லை.

வள்ளி, சுப்பிரமணியர், சோமாசுகந்தர், ஸ்ரீபிரியாவிடை, ஸ்ரீசிவகாமசுந்தரி, ஸ்ரீசண்டிகேசுவரர், லெட்சுமணர், இராமர், சீதை, யோக நாராயணர் பூமாதேவி, சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், நடராசர்-சிவகாமி அம்மன், யோக பைரவர், சந்திரசேகரர் சிவகாமியம்மன் ஆகியோரின் செப்புத் திருமேனிகள் உள்ளன.

இராமர் நின்ற கோலத்தில் வில்லேந்தி பத்ம பீடத்தில் இருக்கிறார். தலையில் கரண்ட மகுடத்துடனும், முப்புரிநூலும் அணிந்து முழங்கால் வரை ஆடையும் அணிந்துள்ளார். கேயூரம், கங்கணம் வாகுவளையம், உதரபந்தம், மகர குண்டலம் ஆகியவை அணிந்துள்ளார்.

இலட்சுமணர் பத்ம பீடத்தில் நின்ற கோலத்தில் உள்ளார். இரு கரங்கள். வில்லை உபயோகப்படுத்துகின்ற பாவனையில் இடது காலைச் சற்று முன்னே வைத்தவண்ணம் நிற்கிறார். மகுடம் தரித்து கேயூரம், உத்ரபந்தம், மகர குண்டலம், ஆரங்கள் ஆகியவை அணிந்துள்ளார்.

சீதை பத்ம பீடத்தில் திரிபங்க நிலையில் நிற்கிறாள். இரு கரங்களில் இடது கரம் டோல அஸ்தமாகவும், வலது கரம் மலர் ஏந்தியும் உள்ளன. மார்பை ஆரங்கள் அழகு செய்கின்றன. கணுக்கால் வரை வரிவரியான வேலைப்பாடுடன் கூடிய ஆடை அணிந்துள்ளார். இரு தோள்களையும், கரங்களையும் செவிப்பூக்கள், கேயூரங்கள், குண்டலங்கள் அழகுபடுத்துகின்றன. கீரிட மகுடம் அணிந்துள்ளாள்.

நடராசர் ஒரு காலைத் தூக்கி ஆடிய நிலையில், மறு காலை கீழே முயலகனின் மீது ஊன்றிய நிலையில் உள்ளார். இவருக்கு நான்கு கைகள். கீழ் வலதுகை அபயமாகவும், இடக்கையில் பாம்பு சுற்றியும், மேல் இடக்கையில் உடுக்கையும், மேல் வலக்கையில் தீச்சட்டியும் உள்ளன. இவரைச் சுற்றி பிரபாவளி உள்ளது. கரண்ட மகுடத்துடன் முடி பரந்து காணப்படுகிறது.

நடராசருக்கு அருகில் சிவகாமியம்மை திரிபங்க நிலையில் உள்ளார். இவருக்கு இரு கைகள் உள்ளன. வலதுகை மலரேந்தியும், இடது கையைத் தொங்கவிட்ட நிலையிலும் உள்ளார். கரண்ட மகுடம், அணிகலன்கள் அணிந்துள்ளார்.

பைரவர் பத்மபீடத்தில் நின்ற நிலையில் இரு கரங்களுடன் உள்ளார். கதையைத் தரையில் ஊன்றி அதன் மீது வலது கரத்தைக் குவித்து வைத்துள்ளார். கதை மீது பாம்பு சுற்றியுள்ளது. இடது கரத்தில் கபாலம் ஏந்தியுள்ளார். ஜடாபாரத்துடன் பத்ர குண்டலம் தரித்துக் கண்டமணியுடன் காட்சியளிக்கிறார். வாயில் கோரைப் பற்கள் தெரிகின்றன. பாம்பை அரைஞாணாக அணிந்துள்ளார். பைரவர் நிர்வாணக் கோலத்தில் இருந்தாலும், தோலினால் ஆன ஆடையை இருபுறமும் அணிந்துள்ளார்.

பூமாயி அம்மன் (காளி) எனப்படும் இச்செப்புத் திருமேனிக்கு நான்கு கரங்கள் உள்ளன. பின்னிரு கரங்களில் டமருகமும், பாசமும், முன்னிரு கரங்களில் சூலமும், கபாலமும் உள்ளன. மார்பில் ஆரம் காணப்படுகிறது. வலது கரத்தில் அரவ குண்டலமும், இடது காதில் பத்ர குண்டலமும், கைகளில் கேயூரம், கங்கணம், வயிற்றில் உதரபந்தமும் அணிந்துள்ளாள். இடையில் உள்ள இடைக்கச்சை இருபுறமும் முடிச்சுகளும், வளைவுகளும

உடையதாக உள்ளது. தலையில் சுடர் முடி உள்ளது. இச்செப்புத் திருமேனி இவ்வூரில் உள்ள பூமாயி அம்மன் கோவில் திருவிழாவின்போது பத்து நாட்களும் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படுகிறது.

திருமால் திருமகளுடனும், பூமகளுடனும் நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறார். தலையில் கீரிட மகுடம் உள்ளது. இவருக்கு நான்கு கைகள். பின்னிரு கரங்களில் சக்கரமும், சங்கும் உள்ளன. முன்னிரு கரங்களில் ஒன்றில் அபயம் காட்டி, மற்றொன்றில் கதையும் கொண்டுள்ளார். மார்பில் ஆரங்கள் காணப்படுகின்றன. இவர் கொன்றைப் பெருமாள் என்று அழைக்கப்படுகிறார். கேயூரம், உதரபந்தம், கடகம், கடிசூத்திரம் ஆகியவையும் அணிந்துள்ளார். கடிசூத்திரம் சிங்கமுகத்துடன் காணப்படுகிறது.

திருமகள் தாமரை மலரை கையில் ஏந்தியபடி நின்ற கோலத்தில் இருக்கிறார். கீரிட மகுடமும், மார்புக் கச்சும் காணப்படுகிறது. வலது கையை டோல அஸ்தத்திலும், இடது கையில் தாமரை மலரும் வைத்துள்ளார். கணுக்கால் வரை ஆடை உள்ளது. பூமகளும் திருமகள் போன்றே காட்சியளிக்கிறாள்.

சிவன் உமை இருவரும் பத்மாசனத்தில் அமர்ந்திருக்க இடையில் குமரன் பத்மபீடத்தில் நின்ற நிலையில், இரு கரங்களில் தாமரை மலரைத் தாங்கி உள்ளாள். இவர் சோமாசுகந்தர் என அழைக்கப்படுகிறார். இறைவன் நான்கு கரங்களில் பின்னிரு கரங்களில் மழு, மான் தாங்கி முன்னிரு கரங்களில் அபய வரத முத்திரை காட்டி வண்ணம் உள்ளார். மான் அவரை நோக்கித் திரும்பிக் கொண்டிருக்கிறது. செவிப்பூ, மகர குண்டலம், பத்ர குண்டலம் ஆகியவை காதுகளில் காணப்படுகின்றன. வாகு வளையம்,

ஆரங்கள் ஆகியவை மார்பில் உள்ளன. ஜடா மகுடத்துடன் காட்சியளிக்கிறார். இடக்காலை மடித்து வலக்காலைத் தொங்கவிட்ட நிலையில் அமர்ந்துள்ளார்.

அவருக்கு ஏற்றார் போல் அருகில் இறைவி வலக்காலை மடித்து இடக்காலைத் தொங்கவிட்ட நிலையில் அமர்ந்துள்ளார். வலது கரத்தில் மலர் தாங்கி இடது கரத்தை அஸ்தத்தில் வைத்துள்ளாள். கரண்ட மகுடம், கேயூரம், கடகம், செவிப்பூ, வாகுவளையம், சன்னவீரம், தண்டை ஆகியனவும் அணிந்துள்ளாள்.

சண்டிகேசுவரரின் செப்புத் திருமேனி உயரமாக உள்ளது. இரு கரங்களுடன் கூப்பிய நிலையில் உள்ளார். கொன்றை மலர் போன்ற ஒன்று மகுடத்தில் கவிழ்க்கப்பட்டுள்ளது. நீண்ட செவிகளுடன் காணப்படுகிறார். அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் செப்புத் திருமேனிகளும் உள்ளன.

**மேற்குத் திருத்தளிநாதர் கோவில்**

மேற்குத் திருத்தளிநாதர், ஆதித்திருத்தளிநாதர் என்றும் அழைக்கப்படுகிறார். இவர் லிங்க வடிவில் பெரிய ஆவுடையாரின் மேல் உள்ளார்.

சிவகாமியம்மை, முன் மண்டபத்தில் வடக்குப்புறம் தெற்கு நோக்கிய வண்ணம் நின்ற வடிவில் உள்ளாள். வலக்கையில் மலரேந்தி இடக்கையைத் தொங்கவிட்ட நிலையில் காட்சியளிக்கிறார்.

சிவகாமி அம்மன் சந்நிதி வாயிலில் வலப்பக்கம் சண்டிகேசுவரர் உள்ளார். இவர் வலக்காலைத் தொங்கவிட்ட நிலையில் இடக்காலை மடக்கிப் பீடத்தின் மேல் வைத்து அமர்ந்துள்ளார். இவர் நான்கு கைகளுடன் காணப்படுகிறார்.

முன்மண்டபத்தின் தெற்குப் பக்கம் கிழக்கு நோக்கி செல்வ விநாயகர் அமர்ந்துள்ளார். வலது கைகளில் மழுவும், ஒடிந்த தந்தமும் உள்ளது. இடது கையில் மோதகமும் அங்குசமும் உள்ளன. இவருக்கு முன் மூசிகம் காணப்படுகிறது. விநாயகரின் அருகில் ஐந்து தலை நாகம் உள்ளது.

பைரவர் முன் மண்டபத்தில் வடக்கில் தெற்கு நோக்கிய வண்ணம் நின்ற வடிவில் உள்ளார். கழுத்தில் மாலை அணிந்துள்ளார். இவருக்கு இரண்டு கைகள் உள்ளன.

**கலைச்சிறப்புகள்**

திருக்கோவில்கள் மங்கலமிக்க அருள் நயத்துடன் பொருள் நிறைந்த கலைகளையும் பெற்று விளங்குகின்றன. திருக்கோவிலின் அமைப்பே ஒரு கலையின் வடிவம். கலைச் செறிவு நிறைந்த கோவிலின் கட்டுமானக் கலை, தமிழர்களின் அறிவுச் சான்றாண்மைக்குக் கட்டியம் கூறும்.

திருக்கோவில்கள் வாழ்வியல் கலைகளின் இருப்பிடமாகத் திகழ்கின்றன. பெரும்பான்மையான திருக்கோவில்கள் மூன்று சுற்றுக்களுடன் அமைந்தவை. இந்த மூன்று சுற்றும் மும்முறை வலம் வரும்போது ஏற்படும் உடற்பயிற்சி, மூச்சுப்பயிற்சி முதலியன உடல் நலத்திற்கு உரியன. திருக்கோவிலில் வணங்கும் திருவுருவங்கள் அனைத்தும் வாழ்வியற் கலையைச் சார்ந்த அறிவியலின் வெளிப்பாடேயாகும்.

திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோவிலில் ஆடல் வல்லான் சந்நிதிக்கு முன்புள்ள காளிங்கராயன் மண்டபத்தில் அழகிய சிற்ப வேலைப்பாடுடைய ஐந்து இசைத் தூண்கள் அமைந்துள்ளன. இத்தூண்கள் விசயநகர மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் ஏற்பட்டதாகும்.

ஒரு பெரிய தூணைச் சார்ந்து இரண்டு மூன்று தூண்கள் உள்ளன. தூண்களுக்குள் சிறு சிறு தூண்கள் உள்ளன. ஒரு தூணே ஒரு முழுக் கட்டடப் பகுதி போல் உள்ளது. பெரிய தூணைச் சார்ந்துள்ள சிறிய தூண்களைக் கல் சன்னல்கள் இணைக்கின்றன. தூண்களில் நாக பந்தமும், போதிகையில் பூ முனையும் உள்ளன. பூ முனைகள் மொட்டு வடிவில் உள்ளன. நாக பந்தத்தை யாளிகள் இணைக்கின்றன. தூண்களைச் சிங்கங்கள், பூதகணங்கள் தாங்குவதாகக் கட்டப்பட்டுள்ளன. தூண்களில் அழகிய சிற்பங்கள் உள்ளன.

ஒரு தூணில் லிங்கோத்பவர் உருவம் உள்ளது. மேலே அன்னம் பறந்து செல்கிறது. அதற்கு அருகில் தாழம்பூ இறைவன் தலைமுடியில் இருந்து கீழே இறங்கி வருகிறது. கீழே வராகம் பூமியைக் குடைந்து செல்கிறது. லிங்கோத்பவருக்கு இருபுறமும் முறையே பிரம்மாவும் திருமாலும் கூப்பிய கரங்களுடன் நிற்கின்றனர். இக்காட்சிகள் அனைத்தும் ஒரு சிறு சதுரத்திற்குள் செதுக்கப்பட்டுள்ளன.

இங்குள்ள தூணில் இராவணன் கைலாய மலையைத் தூக்க முயலும் காட்சியும், மழு, மான் தாங்கிய அபய வரத முத்திரைகள் காட்டியவராய் நெற்றிக் கண்ணுடன் அமர்ந்துள்ள இறைவன், இராவணன் அம்மலையைத் தூக்க இயலாதவாறு தன் கால் விரலால் அழுத்துவதும், உமையம்மை பயத்துடன் சிவனை அணைத்துக் கொண்டுள்ளமையும் மிகச் சிறப்பாகச் செதுக்கப்பட்டுள்ளன.

பல்லவரது சமகாலத்தில் தமிழகத்தின் தென்பகுதியை ஆண்ட பாண்டியரது ஆட்சியில் நரசிம்மரது சிற்பத்தைக் குடைவரை மற்றும் கட்டுமானக் கோவில்களில் இடம்பெறச் செய்துள்ளனர். அந்த வகையில்

திருத்தளிநாதர் கோவிலில் ஆடல்வல்லான் சந்நிதி மண்டபத்தில் உள்ள தூணில் நரசிம்மரின் புடைப்புச் சிற்பம் காணப்படுகிறது. இரணியனின் மகன் பிரகலாதனின் வேண்டுகோளுக்கு இணங்கத் தூணிலிருந்து நரசிம்மமாக வந்து இரணியனை நரசிம்மர் அழித்தார். இரணியன் தனக்கு ஆகாயத்திலும், பூமியிலும், வீட்டிற்குள்ளும், புறமும், இரவும், பகலும், மனிதர்களாலும், விலங்குகளாலும், ஆயுதங்களாலும் இறப்பு இல்லை என வரம் பெற்றவன். இத்தொன்மத்தின் அடிப்படையில்தான் நரசிம்மர் இரணியனை வதைக்கும் சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது. இதில் நரசிம்மர் இரணியனைத் தன் மடியில் கிடத்தி அவனது குடலைப் பிடுங்கும் உக்கிர நரசிம்மராகப் படைக்கப்பட்டுள்ளார். வெளியில் வரும் குடல் தெளிவாகக் காணப்படுவது கலை நுட்பத்தின் சிறப்பாகும்.

அரிவாட்டாய நாயனார் மன்னனது யானையின் தும்பிக்கையை வெட்டிய அரிவாளைக் கையில் ஏந்தியபடி ஒரு தூணில் செதுக்கப்பட்டுள்ளார். பகீரதனின் தவம் (கங்கையை பூமிக்குக் கொண்டு வந்தவன் பகீரதன்) ஆகியவை செதுக்கப்பட்டுள்ளன.

விநாயகர், அம்பாள், சரசுவதி, மயில் மீது முருகன், தியாகேசுவரன், அனுமன், பிரம்மா போன்ற சிற்பங்கள் ஆடல் வல்லான் சந்நிதியிலுள்ள தூண்களில் காணப்படுகின்றன.

ஆடல் வல்லான் சந்நிதியில் இசைத் தூண்கள் காணப்படுகின்றன. இசைத் தூண்களில் இசை வரும்படி அமைக்கும் பொழுது புதிய தொழில்நுட்ப முறையைக் கையாண்டுள்ளனர். நரம்பில் நீளத்தைக் கூட்டிக் குறைக்கும் பொழுது அதற்குத் தகுந்தபடி இசை மாறுபடும். அதுபோல கல்லின் நீளத்தைக் கூட்டியும், குறைத்தும் வைத்து மாறுபட்ட இசை வரும்படி

தூண்களை அமைத்துள்ளனர். இம்முறையை முதலில் நரம்பில் செய்து, பின்னர் மரத்திலும், பின் கல்லிலும் முயற்சி செய்து, வெற்றியும் பெற்றுள்ளனர். அதனால் ஆடல் வல்லானின் சந்நிதி சிற்சபை போன்று அமைந்துள்ளது.

## சிறுதெய்வ வழிபாடு

சிறு தெய்வம் என்ற வழக்கு "சென்று நாம் சிறுதெய்வம் சேரோம் அல்லோம்"[17] என்று ஏழாம் நூற்றாண்டைச் சார்ந்த அப்பர் தேவாரத்தில் காணப்படுகின்றது. "சிறுதெய்வத்தை மூன்று வகையாகப் பிரித்துள்ளனர். 1.வீட்டுத் தெய்வம், 2.குலதெய்வம், 3.ஊர்த் தெய்வம் அல்லது கிராம தேவதை என்று வகைப்படுத்தி, இத்தெய்வங்களை வணங்கினால் நன்மையும் வணங்காவிடின் தீமையும் செய்வதாக மக்கள் நம்புகின்றனர்"[18] சமூகத்தில் அடித்தளத்து மக்கள் வழிபடும் கடவுளைச் சிறு தெய்வங்கள் எனவும் அழைப்பர்.

மறைமலையடிகள் 1920-ஆம் ஆண்டில் வெளியான தமது நூலொன்றில் 'சிறு தெய்வ வழிபாடாக அவர் கருதும் வழிபாட்டு முறை' குறித்துப் பின்வரும் கருத்துக்களை வெளியிட்டுள்ளார். சிற்றுயிர்களின் வடிவங்களையும் கல்லிலும், செம்பிலும் செய்து வைத்துக் கொண்டு, அவற்றை வணங்குதலே பெரிதும் குற்றம் ஆகாது. காரணம் சிறு தெய்வம் உருவத்தால் அல்லது அளவால் அமைந்த பெயர் அன்று. இவற்றை தாம் விரும்பிய இடத்தில் தெய்வத்தை உருவாக்கி வணங்கினர்.[19]

நடுகற்களாக வணங்கப்பட்டவர்கள் ஒரு காலகட்டத்தில் சிறு தெய்வங்களாக மாறினர் எனவும் கருதுவர். "வீர வணக்கம் காலக்கதியில் சிறு தெய்வ வணக்கமாக மாறியது என்றும் நடுகற்களை வணங்கியதன் காரணமாக

பின்தங்கிய சமூகங்களில் வீழ்ந்துபட்டவர்களே கிராம தேவதைகளாக மாறினர்"[20] என்ற கருத்தும் நடுகல் வழிபாடே நாளடைவில் சிறுதெய்வ வழிபாடாக மாறி வளர்ச்சி பெற்றது என்ற கருத்தை வலியுறுத்தும்.

இச்சிறு தெய்வ வழிபாடானது "பெருந்தெய்வ வழிபாட்டு முறையினின்றும் முற்றிலும் மாறுபட்டதாக அமைந்துள்ளது. இத்தெய்வங்களுக்குப் பூஜை செய்ய அந்தணர்கள் நியமிக்கப் பெறவில்லை. தெய்வங்களை வணங்கும் இனத்தவருள் ஒருவரே பூசாரியாக இருந்து பூசைக்குரிய பணிகளைக் கவனித்துக் கொள்கின்றனர்."[21]

இச்சிறு தெய்வக் கோவில்களில் வரன்முறைப்படுத்தப்பட்ட பூசைகள் நடைபெறுவதில்லை. விரும்பும் நேரங்களில் பூசை செய்து கொள்வர். சிறு தெய்வக் கோவில்கள் அனைத்துமே ஒரு தனிப்பட்ட ஆளின் நிர்வாகத்தில் அல்லது ஒரு சமுதாயத்தின் கட்டுப்பாட்டில் அல்லது ஓரிரு குடும்பங்களின் கடுப்பாட்டில் இருக்கின்றன.

இதற்கெனத் தனி வருமானம் இன்மையில் தங்களுக்குள் வரி வசூல் செய்தே பூசைகளையும் திருவிழாக்களையும் நடத்துகின்றனர். இச்சிறு தெய்வக் கோவில்களில் பணியாற்றும் பூசாரிகளில் பெரும்பான்மையோருக்கு ஊதியம் கிடையாது. ஊதியத்தை எதிர்பார்க்காது தெய்வப் பணிகளைச் செய்து முடிக்கின்றனர்.

**தேனாட்சியம்மன் திருக்கோவில்**

சிவகங்கை மாவட்டத்தில் காரைக்குடியிலிருந்து திருப்புத்தூர் செல்லும் வழித்தடத்தில் சிறாவயல் என்ற சிற்றூரில் கோவில் அமைந்துள்ளது.

### பெயர்க்காரணம்

தேனாற்றிலிருந்து எடுக்கப்பட்ட அம்மன் ஆகையால் இவள் தேனாட்சியம்மன் என்று அழைக்கப்படுகிறாள். தேனாட்சி அம்மனுடன் பிறந்தார் எழுவர். அவர்கள் நாச்சியாபுரம் காட்டு நாச்சியம்மன், இளங்குடி இளையா நாச்சி, சிறாவயல் பெரிய நாச்சியம்மன், பிள்ளையார்பட்டி கொங்கு நாச்சியம்மன், பட்டமங்கலம் அழகு நாச்சியம்மன், சிவகங்கை பரநாச்சியம்மன், கண்டரமாணிக்கம் மாணிக்க நாச்சியம்மன் ஆவர். "தேனாற்றில் தோற்றமான திருவுருவச் சிலையைப் பிரதிஷ்டை செய்து, மக்கள் வழிபடத் தொடங்கினர். தேனாற்று நாச்சி என முதலில் இத்திருவுருவச் சிலை அழைக்கப் பெறினும், காலவோட்டத்தில் தேன் நாச்சி என்னும் திருப்பெயர் அமைந்தது. ஆற்றின் கரையருகே நீரோட்டத்திற்கு எதிராக, தேவியின் திருவுருவச் சிலை ஒன்று எழுந்தருளி இருப்பதையும் கண்ட மக்கள் அருளாற்றல் மிக்க பராசக்தி எனக் கொண்டாடினர். கோயிலைச் சுற்றிக் குடியேறி வாழ்ந்த மக்கள் குடியிருப்புச் சிறியதொரு கிராமமாகி தேனாட்சியம்மன் கோவில் எனக் குறிப்பிடப்பெற்றது என்பர்."[22] இதில் தேனாட்சியம்மனுக்கும், மாணிக்க நாச்சியம்மனுக்கும் சிவாச்சாரியார்கள் (சைவம்) பூசை செய்கின்றனர். மற்ற கோவிலில் ஓச்சப்பட்டர்கள் (அசைவம்) பூசை செய்கின்றனர்.

### திருப்பணிகள்

இக்கோவிலக்குத் திருப்பணிகள் செய்தவர்கள் மருது சகோதரர்கள் ஆவர். முதல் திருப்பணி 1897இல் நடந்துள்ளது. கோட்டையூர் நகரத்தார்கள் 1971இல் குடமுழுக்கு நடத்தியுள்ளனர். பின்னர் 1987ஆம் ஆண்டு (2.5.1987) கோவில் புதுப்பிக்கப்பட்டுக் குடமுழுக்கு நடைபெற்றுளளது.

செட்டியார் மண்டபம் என்று அழைக்கப்படுகின்ற மண்டபத்தில் வெங்களப்ப நாயக்கர் தனது இரு மனைவியருடன் இருப்பது போன்ற சதாசேவை சிலைகள் உள்ளன. சிவகங்கை சமஸ்தானத்திற்கு உட்பட்ட பகுதியான மிதிலைப்பட்டியில் வாழ்ந்த அழகிய சிற்றம்பலக் கவிராயரே உ.வே.சாமிநாதையருக்கு மணிமேகலையைப் பதிப்பிப்பதற்கு ஓலைச் சுவடிகளைக் கொடுத்தவர். அவரைப் பற்றி உ.வே.சா 'நான் கண்டதும் கேட்டதும்' என்ற நூலில் எழுதும் போது சமீன்தார் வெங்களப்ப நாயக்கரின் தானங்களையும், தர்மங்களையும் பற்றிக் குறிப்பிடுகிறார். அப்பகுதியில் வாழ்ந்த வெங்களப்ப நாயக்கர் இக்கோவிலக்குத் திருப்பணிகள் செய்திருக்கலாம். அதனால் அவருடைய சிலைகள் அங்கு அமைக்கப்பட்டிருக்கின்றன என்று ஆய்வாளர் கருதுகிறார். இங்குத் திருப்பணி செய்தவர் வெங்களப்ப நாயக்கர் திருமலை நாயக்கரின் வழிவந்தோராவர்.

**சனீசுவரன் சந்நிதி**

தேனாட்சியம்மன் கோவில் மகாமண்டபத்தில் அமைந்துள்ள சனீசுவரன் புதிதாகத் தோற்றம் பெற்றவர். திருமதி ராதா தியாகராசன் (முன்னாள் துணைவேந்தர், அழகப்பா பல்கலைக் கழகம்) தனது நேர்த்திக்கடனுக்காகச் சனீசுவரன் சிலையை அமைத்துக் கொடுத்தார் என்று அறியப் பெறுகிறது.

தேனாட்சியம்மன், திருமேனிக் கருப்பையா பாமாலை என்ற நூல் இக்கோயிலோடு தொடர்புடைய இலக்கியமாகும். புதுவயல் செல்லப்பன் பதிப்பித்திருக்கிறார்.

நகரத்தார்களின் குல தெய்வமாக இக்கோவில் விளங்குகிறது. முன்னர் வேளாளர் பூசை செய்த போது ஆடு, கோழிகள் பலியிட்டுள்ளனர்.

தற்போது பிராமணர்கள் பூசை செய்து வருவதினால் பலிகள் தவிர்க்கப்பட்டுச் சைவப் பூசைகளாக நடைபெறுகின்றன.

தேனாட்சியம்மன் சிறு தெய்வ வழிபாட்டு மரபில் இருந்தாலும் மகிசாசுரமர்தினி என்கிற புராணத் தாக்கம் பெற்றுப் பெருந்தெய்வ மரபுகளைக் கொண்டுள்ளது. ஆகம விதிகளின்படி கோவில் அமைப்பு இல்லாவிட்டாலும் பெருந்தெய்வ மரபிற்குரிய சில கோவில் உறுப்புக்களைக் கொண்டுள்ளமை அறியப் பெறுகிறது.

தேனாட்சியம்மன் திருக்கோவில் கருவறை, அர்த்த மண்டபம், மகா மண்டபம், கொடிமரம், பலிபீடம், வாகனம், விமானம், இராசகோபுரம், செட்டியார் மண்டபம், முன் மண்டபம், திருக்குளம் போன்ற கோவில் உறுப்புக்கள் அனைத்தும் பெற்று விளங்குகிறது.

**கருவறை**

கருவறை நீள் சதுர வடிவில் வடக்கு முகமாக அமைந்துள்ளது. மாடக் கோவில் போன்று மேடை அமைப்பின் மீது கருவறை காணப்படுகிறது. கருவறையின் அகலம் 12 அடி, நீளம் 10 அடி. கருவறையின் நடுவில் இரண்டடி உயரத்தில் பீடம் உள்ளது. அதன் மேல் தேனாட்சியம்மன் அமர்ந்த கோலத்தில் காட்சியளிக்கிறார்.

**அர்த்த மண்டபம்**

கருவறையை அடுத்து அர்த்த மண்டபம் நீள் சதுர வடிவத்தில் உள்ளது.

**மகாமண்டபம்**

கருவறை, அர்த்த மண்டபம் ஆகியவற்றை நடுவில் வைத்துச் சுற்றிலும் இம்மண்டபம் எழுப்பப்பட்டுள்ளது. இம மண்டபத்தில் நாற்பத்தி நான்கு

தூண்கள் உள்ளன. மகா மண்டபத்தின் தென் மூலையில் களஞ்சியம் அமைந்துள்ளது. இதன் கிழக்குப் பகுதியில் மடப்பள்ளி தெற்கு நோக்கியவாறு உள்ளது. அருகில் கிணறு உள்ளது.

**திறந்த வெளி**

இப்பகுதி 'வெயிலடி' எனவும் அழைக்கப்பெறுகிறது. இங்குப் பலிபீடம், தேக்கினாலான கொடிமரம், சிம்மவாகனம் போன்றவை உள்ளன.

**செட்டியார் மண்டபம்**

இச்செட்டியார் மண்டபத்தின் வடக்குப் பகுதியில் வெங்களப்ப நாயக்கர் தம்மிரு மனைவியருடன் சதாசேவை சிற்பங்களாக உள்ளனர். இதன் கிழக்குப் பகுதியில் மின்னஞ் செட்டிக் காளியின் பாதம் காணப்படுகிறது. ஆலய மணி இங்குக் கட்டப்பட்டுள்ளது.

**முன் மண்டபம்**

முன் மண்டபம் நீள் சதுர வடிவானது. மேற்கூரை ஓடுகளால் வேயப்பட்டுள்ளது. இருபுறமும் திண்ணைகள் உள்ளன.

**விமானம்**

ஒற்றைக் கலசத்துடன் கூடிய உருண்டை வடிவ விமானம் காணப்படுகிறது.

**இராசகோபுரம்**

எல்லா கோபுரங்களைக் காட்டிலும் உயர்ந்ததாகக் காணப்படும் கோபுரம் ராசகோபுரமாகும். இரண்டு நிலைகளை உடைய சிறு இராசகோபுரம் மூன்று கலசங்களைக் கொண்டுள்ளது.

நாட்டுப்புறப் பெண் தெய்வங்கள் மேல்நிலையாக்கம் பெறுகின்ற போது பெருந் தெய்வ மரபுகள் கடைப்பிடிக்கப் படுகின்றன. மாரியம்மனை

ரேணுகாதேவியின் அம்சம் என்று கருதுவது போன்று, தேனாட்சியம்மனை மகிசாசுரமர்த்தினியாகக் கருதுவது மேல்நிலையாக்கத்தின் விளைவேயாகும். இதற்கு, மக்கள் இத்தெய்வங்களிடம் காட்டுகின்ற பக்தி நிலையே காரணமாகும். சிறு தெய்வக் கோவில்களை நோக்கிப் பெருந்திரள் வருகின்ற போது அதன் வளர்ச்சியும், வழிபாடும் மாற்றப்பட்டு ஆகம விதிகள் உட்புகுத்தப்படுவதே காரணமாகும்.

**திருவுருவ அமைதி**

**தேனாட்சியம்மன்**

தேனாட்சியம்மன் மகிசாசுரமர்த்தினியின் அம்சமாகக் கருதப்படுகிறாள். மகிசனை (எருமைக்கடா) வதம் செய்யும் கோலத்துடன் திருவுருவம் காணப்படுகிறது. எட்டுக் கைகளுடன் காணப்படுகிறாள். தலையில் அக்கினி மகுடத்துடன், வலக்காலை மடித்தும், இடக்கால் தொங்கவிட்ட நிலையில் மகிசனை மிதித்துக் கொண்டும் இருக்கிறது. பாசம், அங்குசம், டமருகம், கட்கம், கபாலம், திரிதவம், அபயம், வரதம் போன்றவை திருக்கைகளில் காணப்படுகிறது. சிவப்புநிற ஆடையில் காணப்படுகிறாள்.

மகிசாசுரமர்த்தினி துர்க்கையின் பல வடிவங்களில் ஒன்றாகும். "மகிஷாசுரனை வதம் செய்ய வந்த திருவுருவம் துர்க்கையாகும். இமவான், மேனை ஆகியோருக்கு மகளாகப் பிறந்து சிவபெருமானை மணந்த பார்வதி தன் தாயின் வேண்டுகோளுக்கிணங்கி நிலவுலகு வந்து மூன்று நாள் தங்கியிருந்தாள். அந்த மூன்று நாளும் பார்வதியை வழிபட்டு அருள் பெற்றனர். சிங்கவாகனத்தைக் கொண்ட துர்க்கையை இளவேனிற் காலத்தில் பூசை செய்தால் மிக்க பலன் கிட்டும்"(23) என்பர்.

**துவாரசக்திகள்**

அம்மனின் வாயிலைக் காவல் செய்பவைகளாக இரு துவார சக்திகள் காணப்படுகின்றன. இடக்காலைத் தொங்கவிட்ட நிலையில் வலக்கையில் சூலாயுதத்தை ஏந்தியபடி நிற்கின்றனர்.

**இடைச்சியம்மன்**

தேனாட்சியம்மனின் பக்தை என்று கூறுகின்றனர். கோவிலக்குத் தினமும் மோர் கொண்டு வருவதைத் தன் கடமையாகச் செய்து வந்துள்ளாள். யாதொரு காரணமும் அறிய முடியாத நிலையில் அவளின் மரணம் ஐயப்பாட்டிற்கு உரியதாக அமைந்திருக்கலாம். கோவிலின் புனிதம் கருதித் தீட்டுடைய பெண்கள் அக்கோவிலின் பக்கம் சென்று விடாமல் இருக்க சில கட்டுக்கதைகளைச் சிலர் புனைந்துள்ளனர்.

அம்மனுக்கு நேர் எதிராகத் தெற்கு நோக்கியவாறு இடைச்சியம்மன் மூன்றடி உயரமுடைய மேடையில் நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறாள். “தேனாட்சி அம்மனுக்கு எதிரே கூப்பிய கரத்துடன் நின்ற கோலத்தில் காணப்படும் இடைச்சி அம்மன் பற்றி மற்றுமொரு செவிவழிச் செய்தியும் கூறப்படுகிறது. மோர் விற்ற இடைச்சிப் பெண், கருவுற்ற ஒன்பதாம் மாதத்தில் தேனாட்சி அம்மன் திருச்சந்நிதிக்கு எதிரே வந்து விட்டதாகவும், இத்தகைய தீட்டைப் பொறுக்காத அம்மனின் அருளாற்றல் அவளை அடித்து மரணம் சம்பவிக்கச் செய்துவிட்டதாகவும், மரணமுற்ற இடைச்சிப் பெண்ணின் ஆவி, ஊர் மக்களைப் பெரிதும் தொல்லைப்படுத்தி வந்ததாகவும், எனவே அசுரத்தனமான அந்த ஆவியை மந்திரத்தால் அடக்கி, சிலையில் ஏற்றி அம்மனுக்கு முன் வைத்துவிட்டதாகவும் சொல்லப்படுகிறது.

இச்செய்தி ஏற்கத் தகுந்ததாக இல்லை. தீது செய்தாலும், பக்தி இல்லாத வாது செய்தாலும், போற்றாது ஏது செய்தாலும் தயவுடைய தாயாகித் தனிப் பெருங்கருணை காட்டும் அருட்கடலான அன்னை. ஒன்பது மாதக் கர்ப்பிணிப் பெண்ணைச் சாகடித்துச் சஞ்சலிக்கச் செய்தாளென்ற செய்தியைப் பக்தி உலகம் ஏற்குமா என்ன? அன்பு வடிவாகி நிற்கும் அன்னையை, துதிப்போருக்கு இன்பமெலாம் அருளும் தாயை, தேனாட்சி அம்மனை, இரக்கமற்ற அரக்க நிலையில் சித்திரிக்கும் இச்செவிவழிச் செய்தி பொருள் உள்ளதாகவோ, பொருத்தமானதாகவோ தெரியவில்லை இல்லையா?"[24]என்பர் பெரிய பெருமாள்.

**சனீசுவரன்**

அண்மையில் உருவான புதுச் சந்நிதியில் சனீசுவரன் மேற்கு நோக்கிய வண்ணம் உள்ளார். வலக்கையில் காகமும், இடக்கை அபய முத்திரையுடனும் உள்ளார்.

**பிற தெய்வங்கள்**

மகா மண்டபத்தின் மேற்கு மூலையில் கிழக்கு நோக்கியவாறு கணபதி, விசுவநாதர்-விசாலாட்சி, சுப்பிரமணியர், சனீசுவரன் ஆகியோரது சிற்பங்கள் உள்ளன.

கணபதி அமர்ந்த கோலத்தில் உள்ளார். எதிரே மூசிகவாகனம் உள்ளது. விசுவநாதர் இலிங்க வடிவில் காட்சியளிக்கிறார். விசாலாட்சி நின்ற கோலத்தில் இரு கைகளைப் பெற்றவராக இருக்கிறார். வலக்கையில் மலரும் இடக்கை தொங்கிய நிலையிலும் காட்சியளிக்கிறார்.

சுப்பிரமணியர் நான்கு திருக்கரங்களுடன் நின்ற கோலத்தில் உள்ளார். சனீசுவரன் தெற்கு நோக்கி அமர்ந்த நிலையில் உள்ளார். நான்கு கைகள் இருக்கின்றன. கீழ் இரண்டு கைகள் அபயமாகவும், வரதமாகவும் உள்ளன. மேலிரண்டு கரங்களில் ஆயுதங்கள் உள்ளன.

**உற்சவத் திருமேனிகள்**

மகாமண்டபத்தின் மேற்கு மூலையில் கிழக்கு முகமாக இருக்கும் கணபதி நின்ற கோலத்துடன் காணப்படுகிறார். வலக்கையில் ஒடிந்த கொம்பும் இடக்கையில் கொழுக்கட்டையும் உள்ளன. இம்மண்டபத்தில் தேனாட்சி அம்மனுக்குரிய உற்சவத் திருமேனி உள்ளது. நின்ற கோலத்தில் உள்ள அம்மன் வலக்கையில் சூலாயுதத்தையும், இடக்கையில் (தட்டுப்போன்று) ஆயுதத்தையும் ஏந்திய நிலை காணப்படுகிறது. தலையில் அக்கினி மகுடம் உள்ளது.

பெரிய நாச்சியம்மனின் உற்சவத் திருமேனியும் காணப்படுகிறது நான்கு கைகளுடன் நின்ற கோலத்தில் உள்ளாள்.

**மின்னஞ் செட்டி காளி**

மண்டபத்தின் தூண் ஒன்றில் நின்ற அழகுடன் செதுக்கப்பட்டிருந்த மின்னஞ் செட்டியார் சிலை உடைக்கப்பட்டு இரண்டு பாதங்கள் மட்டுமே இப்போது உள்ளன. இச்சிலை தற்போது திருமேனிக் கருப்பர் கோவிலில் வைக்கப்பட்டு 'மின்னஞ் செட்டிக்காளி' என்று அழைக்கப் பெறுகிறது. சிலை உடைக்கப்பட்டுள்ள தூணின் அடிப் பாகத்தில் உள்ள இரண்டு பாதங்களைத் தொட்டு வணங்குகின்றனர்.

தேனாட்சியம்மன் கோவிலக்குக் கிழக்கு முகமாக அமைந்திருக்கும் திருமேனிக் கருப்பர் கோவிலில் மின்னஞ் செட்டிக் காளியாத்தாள் என்று

சிலையினை நிறுவி வழிபட்டு வருகின்றனர். அம்மண்டபத்தை மின்னஞ்சு செட்டிக் காளியாத்தாள் மண்டபம் என்று அழைக்கின்றனர்.

**கலைச்சிறப்புக்கள்**

தேனாட்சி அம்மன் கோவில் கருவறை மற்றும் அர்த்த மண்டபத்தைத் சுற்றிலும் முப்பது அரைத் தூண்கள் உள்ளன. ஐந்து தேவகோட்டங்களும், ஆறு சிறு தேவ கோட்டங்களும் காணப்படுகின்றன. இத்தேவ கோட்டங்களில் சிலைகள் இல்லை.

மகா மண்டபத் தூண்களிலுள்ள சிற்பங்கள் கலைச் சிறப்புடையன. தூண்கள் ஒன்பதடி நீளமும், ஓரடி அகலத்திலும் அமைக்கப்பட்டுள்ளன.

அம்மன் வலப்பக்கத் தூண்களில் பூ வேலைப்பாடு, இலிங்கம், யாளி போன்றவை காணப்படுகின்றன. இரண்டாவது வரிசையில் சிம்மம் அமர்ந்த நிலையிலும், பாய்ந்த நிலையிலும் உள்ளது. மூன்றாவது தூணில் கிளி, பாயும் குதிரை, வில்வ மரத்தின் கீழ் இலிங்கம் போன்றவை இடம் பெற்றுள்ளன.

மேற்குப் பக்கமாக உள்ள தூண்களில் மான், யானை, கொக்கு, ஔவையார், யாளி, சிம்மம், கிருஷ்ணனின் காளிங்கா நர்த்தனம் போன்றவை அழகுறச் செதுக்கபட்டுள்ளன. இரண்டாவது வரிசையில் அரிவாளைத் தூக்கியபடி கருப்பர், இரு பாம்புகள் பிணைந்த தோற்றம், பழம் தின்னும் ஆஞ்சநேயர் தோற்றங்கள் நேர்த்தியாகச் செதுக்கப்பட்டுள்ளன.

ஒரு வெள்ளைக்காரர் சாய்வு நாற்காலியில் அமர்ந்து நூல் படிப்பது போன்ற சிற்பமும் காணப்படுகிறது. இது பிற்கால வளர்ச்சி நிலையினைக்

காட்டுகிறது. பயத்தின் காரணமாகவோ அல்லது பற்றின் காரணமாகவோ இத்தகைய சிலை அமைப்பது அக்காலத்தில் இருந்தமை புலனாகிறது.

செட்டியார் மண்டபத்திலுள்ள தூண் சிற்பங்கள் மிகவும் நேர்த்தியாக உள்ளன. இம்மண்டபத்தில் 16 தூண்கள் உள்ளன. தூண் சிற்பங்கள் அனைத்தும் சதாசேவைச் சிற்பங்களாக உள்ளன. மின்னஞ் செட்டி காளியாத்தாளின் பாதங்கள் மட்டும் உள்ளன. பாதங்களில் நரம்பு வெளியில் தெரிவது போன்று உயிரோட்டமாக இருக்கிறது.

வெங்கலப்ப நாயக்கர் தம் இரு மனைவியருடன் இருக்கும் சதாசேவை சிற்பங்கள் காண்பதற்கு அழகுறத் தோன்றுகின்றன. வெங்கலப்ப நாயக்கரின் இடையில் குறுவாள் ஒன்று காணப்படுகிறது. மருது பாண்டியர்களுள் ஒருவரது சிலை சதாசேவை சிற்பமாக உள்ளது.

அம்மண்டபத்தில் வெங்கலப்ப நாயக்கரின் சிலைக்கு மேலே உள்ள தூணில் ஒரு கிளி பழம் தின்னும் நிலையில் இருப்பது சிற்பக் கலை நயத்திற்கு எடுத்துக்காட்டாகும்.

**தொகுப்புரை**

மாடக்கோவில், கரக்கோவில், ஞாலக்கோவில், கொகுடிக்கோவில், இளங்கோவில், மணிக்கோவில், ஆலக்கோவில், திருக்கோவில், கோட்டம், தூங்கானை மாடம், தேவாலயம், மிச்ராலயம், கற்றளி எனக் கோவில்கள் பல வகைப்படும்.

கோவில்கள் கலை வளர்க்கும் இடமாகக் கருதப்பட்டன. ஓதுவிக்கும் கல்விச் சாலையாகவும், போர்க்கலைகள் பயிற்றுவிக்கும் பாடசாலையாகவும் விளங்கின. பொதுமக்கள் தங்கள் பிரச்சினைகளை ஆராய்கின்ற பொது மன்றங்களாகவும் இருந்தன. நிலங்களைக் கோவிலக்கு வாங்கி, விற்கும் ஆவணப் பதிவகமாகவும் திகழ்ந்தன.

ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த திருப்பத்தூர் திருத்தளிநாதர் திருக்கோவில் சம்பந்தர், திருநாவுக்கரசர், அருணகிரிநாதர் ஆகியோரால் பாடப்பெற்ற திருத்தலமாகும்.

இக்கோவில் காமிக ஆகமத்தின் அடிப்படையில் அமைக்கப் பெற்றதாகும். இக்கோவில் கருவறை, அருத்தமண்டபம், மகா மண்டபம், முன் மண்டபம் ஆகியவற்றுடன் தட்சிணாமூர்த்தி, மகாகணபதி, வர்ணலிங்கம், மகாலட்சுமி, அகத்தியலிங்கம், கொன்றை நாராயணப் பெருமாள், சண்டிகேசுவரர், துர்க்கை ஆகிய சந்நிதிகள் முதல்சுற்றில் காணப்படுகின்றன. இரண்டாம் சுற்றில் ஆறுமுகன், 63 நாயன்மார்கள், வன்னிமரத்து விநாயகர், திருநாகேசுவரர், பைரவர், ஆடல்வல்லான் சந்நிதிகள் உள்ளன. மூன்றாம் சுற்றில் அம்மன் சந்நிதி உள்ளது.

இக்கோவிலின் திருநாள் மண்டபம் திருப்புத்தூர்த் தமிழ்ச் சங்க மன்றமாக விளங்குகிறது.

இத்திருத்தலம் மன்னர்கள் காலத்திலிருந்தே பல்வேறு வளர்ச்சிநிலையை அடைந்து வந்துள்ளது. தற்போது 46ஆம் பட்டம் ஆதீன குருமுதல்வர் காலத்தில் புதிதாக வளர்ச்சி கண்டுள்ளது. குறிப்பாக, 20.6.2011இல் நடந்த குடமுழுக்கின் போது மகாலெட்சுமியின் வலப்புறம் சரசுவதியின் சிலை நிறுவப்பட்டுள்ளது.

கோவிலின் தலவிருட்சமான சரக்கொன்றை மரத்தின் கீழ், குடமுழுக்கு (20.6.2011) நிகழ்வின் போது வான்மீகி முனிவர் தவம் இருந்த இடம் என்று எழுதப்பெற்று, அம்முனிவருக்குச் சிலை ஒன்று நிறுவியுள்ளனர்.

இரண்டாம் திருச்சுற்றின் நுழைவு வாயிலில் நவகிரகங்களுக்கு அருகில் தற்போது ஆஞ்சநேயர் சிலை ஒன்று வைக்கப்பட்டு, சந்நிதி போன்ற தோற்றத்தில் காணப்படுகிறது. நாள் பூசைகளும், சிறப்புப் பூசைகளும் நடைபெறுகின்றன.

முருகன் சந்நிதியைத் தொடர்ந்து, 63 நாயன்மார்களும், 27 நட்சத்திரத்திற்குரிய நாயகர்களும் சிலை வடிவில் வைக்கப்பட்டுள்ளனர். அவரவர்க்குரிய ஜென்ம நட்சத்திரத்தில் சிறப்பு வழிபாடு நிகழ்த்தப்பட்டு வருகிறது. இதுவும் 46ஆம் பட்டம் பொன்னம்பல அடிகளார் காலத்தில் கோவில் அடைந்த வளர்ச்சி நிலையைக் காட்டுகிறது.

சேஷ்டாதேவியின் அவருடைய மகன், மகள் ஆகிய மூன்று உருவங்களையும் ஒரே கல்லில் செதுக்கியுள்ளமை அறியப்பெறுகிறது.

ஏனைய கோவில்களில் காணப்பெறாத நிலையில் மாணிக்கவாசகரின் சிலை அமைக்கப்பட்டுள்ளது.

ஆடல்வல்லான் சந்நிதி ஆண்டவன் ஆடிய சிற்சபையாக விளங்குகிறது. ஆடல் வல்லான் சந்நிதிக்கு முன்புள்ள காளிங்கராயன் மண்டபத்தில் அழகிய சிற்ப வேலைப்பாடுடைய ஐந்து இசைத் தூண்கள் அமைந்துள்ளன. இத்தூண்கள் விசயநகர மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் ஏற்பட்டதாகும்.

திரிபுர அரசர்களின் கோட்டைகளை எரித்துச் சாம்பலாக்கிய நிலையில் உமையவளுடன் சிவன் ஆடிய ஆடல்கள் கொடுகொட்டி, பாண்டரங்கம், காபாலம் ஆகும். சிவன் ஆடும் பொழுது அனைத்தையும் அழித்துக் கொண்டே அவன் கைகொட்டி ஆடினான். இதுவே கொடுகொட்டி என்றாயிற்று. கலித்தொகைக் கடவுள் வாழ்த்துப் பாடலில், இறைவனது ஆடலுக்கேற்பத் தாளமிடுகின்ற பொறுப்பேற்ற உமையவள், இங்கு ஒதுங்கி நிற்பது வியப்பைத் தருவதாக உள்ளது என்பது ஆய்வில் கண்டறியப்பட்டுள்ளது.

சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரும் நின்ற கோலத்தில் உள்ளனர். வேறு திருத்தலத்தில் காணவியலாத வண்ணம் மாணிக்கவாசகர் அபய, வரத முத்திரைகளைக் குறிக்கும் கரங்களுடனும் காட்சியளிக்கிறார்.

வள்ளி, தெய்வானையுடன் இருக்கும் முருகன் இத்தலத்தில் வடக்கு நோக்கி இருப்பது சிறப்பிற்குரியதாக அமைகிறது.

இத்திருத்தலத்தில் இருக்கும் யோக பைரவர், காலபைரவர் என்று அறியப்பெறுகிறார். மூல விக்கிரகங்களைப் போன்றே செப்புத் திருமேனிகளும் அமைதல் உண்டு. யோக பைரவரைப் போன்று செப்புத் திருமேனி அமைக்கவில்லை. மாறாக, யோக நிலையில் இல்லாமல் நிர்வாண நிலையில் செப்புத் திருமேனி உள்ளது. பைரவரின் தோற்றங்களை ஆராயுங்கால், இங்குள்ள யோக பைரவருக்கும் ஏனைய பைரவருக்கும் உள்ள

அடையாளங்கள் வேறுபடுகின்றன. எனவே, தனித்து ஆய்வதற்கானக் கூறுகள் உள்ளன என்பது ஆய்வில் தெரியவருகிறது.

இந்திரனின் மகன் ஜெயந்தன் சாப விமோசனம் பெற பைரவரை நோக்கித் தவம் இருந்ததாக நம்பப்படுகிறது. அதன் நினைவாக ஒவ்வொரு சித்திரை மாத முதல் வெள்ளிக்கிழமையன்று ஜெயந்தன் பூசை நடைபெறுகிறது.

இத்தலத்தில் 10ஆம் நூற்றாண்டைச் சார்ந்த செப்புத் திருமேனிகள் இருக்கின்றன. வான்மீகி முனிவர் தவம் செய்த இடம் என்று அறியப் பெறுவதாலும், இராமர், லெட்சுமணர், சீதை ஆகியோரின் செப்புத் திருமேனிகள் இங்கு கிடைத்திருக்கின்றன என்ற காரணத்தினாலும் இராமாயணத் தொடர்பு இருக்கலாம் என்றும் கருதப்பெறுகிறது.

திருத்தளிநாதர், ஆதித்திருத்தளிநாதர் என்று இரண்டு கோவில்கள் இருக்கின்றன. ஆதித்திருத்தளிநாதர் மேற்குத் திருத்தளிநாதர் என்றும் அழைக்கப்பெறுகிறார். முதலில் ஒரு கோவிலாகவும், வளர்ச்சியடைந்த நிலையில் இரண்டாவது கோவில் ஏற்படுத்தப்பட்டிருக்கலாம் என அறியப்பெறுகிறது.

இத்திருத்தலத்திற்கு அருகில் சீதளி என்ற தெப்பக்குளம் ஒன்று இருக்கிறது. இங்கு பத்தாம் நாள் விழாவாகத் தெப்பத்திருவிழா நடைபெறுகிறது.

சிவகாமி அம்மனுக்கென்று தனியாகக் கோவில் கிழக்கு நோக்கியவாறு அமைந்துள்ளது. அம்மன் நின்ற கோலத்தில் இரண்டு கரங்களுடன் காட்சியளிக்கிறாள். அம்மன் கோவிலின் கோபுரம் மூன்று மாடங்களுடன் ஐந்து கலசங்களுடன் காணப்படுகின்றது.

தேனாற்றிலிருந்து எடுக்கப்பட்ட அம்மன் ஆகையால் இவள் தேனாட்சியம்மன் என்று அழைக்கப்படுகிறாள். தேனாட்சி அம்மனுடன் பிறந்தார் எழுவர். அவர்களும் சிற்ர் தெய்வங்களாக இருக்கக் காண்கின்றமோம். இங்குச் சிவாச்சாரியார்கள் பூசை செய்கின்றனர். மற்ற கோவில்களில் ஓச்சப்பட்டர்கள் பூசை செய்கின்றனர்.

தேனாட்சியம்மன் கோவில் மகாமண்டபத்தில் அமைந்துள்ள சனீசுவரன் புதிதாகத் தோற்றம் பெற்றுள்ளார். இது கோவிலின் வளர்ச்சி நிலையைக் காட்டுகிறது.

தேனாட்சியம்மன் சிறு தெய்வ வழிபாட்டு மரபில் இருந்தாலும் மகிசாசுரமர்தினி என்கிற புராணத் தாக்கம் பெற்றுப் பெருந்தெய்வ மரபுகளைக் கொண்டுள்ளது. ஆகம விதிகளின்படி கோவில் அமைப்பு இல்லாவிட்டாலும் பெருந்தெய்வ மரபிற்குரிய சில கோவில் உறுப்புக்களைக் கொண்டுள்ளமை அறியப் பெறுகிறது.

மாரியம்மனை ரேணுகாதேவியின் அம்சம் என்று கருதுவது போன்று, தேனாட்சியம்மனை மகிசாசுரமர்த்தினியாகக் கருதுவது மேல்நிலையாக்கத்தின் விளைவேயாகும் என்பது பெறப்படுகிறது.

அம்மனுக்கு நேர் எதிராகத் தெற்கு நோக்கியவாறு இடைச்சியம்மன் மூன்றடி உயரமுடைய மேடையில் நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறாள். இவள் தேனாட்சியம்மனின் பக்தை என்று கூறுகின்றனர்.

மகா மண்டபத்தின் மேற்கு மூலையில் கிழக்கு நோக்கியவாறு கணபதி, விசுவநாதர்-விசாலாட்சி, சுப்பிரமணியர், சனீசுவரன் ஆகியோரது சிற்பங்கள் உள்ளன.

தேனாட்சியம்மனுக்குரிய உற்சவத் திருமேனி உள்ளது. நின்ற கோலத்தில் உள்ள அம்மன் வலக்கையில் சூலாயுதத்தையும், இடக்கையில் (தட்டுப்போன்று) ஆயுதத்தையும் ஏந்திய நிலை காணப்படுகிறது. தலையில் அக்கினி மகுடம் உள்ளது. பெரிய நாச்சியம்மனின் உற்சவத் திருமேனியும் காணப்படுகிறது.

மண்டபத்தின் தூண் ஒன்றில் நின்ற அழகுடன் செதுக்கப்பட்டிருந்த மின்னஞ் செட்டியார் சிலை உடைக்கப்பட்டு இரண்டு பாதங்கள் மட்டுமே இப்போது உள்ளன. பாதங்களில் நரம்பு வெளியில் தெரிவது போன்று உயிரோட்டமாக இருக்கிறது.

தேனாட்சியம்மன் கோவிலில் ஒரு வெள்ளைக்காரர் சாய்வு நாற்காலியில் அமர்ந்து நூல் படிப்பது போன்ற சிற்பமும் காணப்படுகிறது.

வெங்கலப்ப நாயக்கர், தம்மிரு மனைவியருடன் சதாசேவை சிற்பமாக உள்ளார். அச்சிலைகளுக்கு மேலே உள்ள தூணில் ஒரு கிளி பழம் தின்னும் நிலையில் இருப்பது சிற்பக் கலை நயத்திற்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

இத்திருத்தலங்களின் கலைச் செறிவு நிறைந்த கட்டுமானக் கலை, தமிழர்களின் அறிவுச் சான்றாண்மைக்குக் கட்டியம் கூறுகின்றன. திருக்கோவில்கள் வாழ்வியல் கலைகளின் இருப்பிடமாகத் திகழ்கின்றன.

## சான்றெண் விளக்கம்

1. திருக்குறுந்தொகை-9.
2. பரிபாடல் ப.77.
3. தெ.பொ.மீனாட்சி சுந்தரனார், தமிழும் பிற பண்பாடும் ப.107.
4. நற்றிணை, பா.317.
5. தொல்.பொருள் புறத்திணையியல், பா.63.
6. முனைவர் க.காந்தி,தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் ப.248.
7. புறநானூறு. பா. 232,
8. நாராயணசுவாமி, சிவாலயத் திருமேனிகள், ப.3.
9. மா.சத்தியமூர்த்தி, தமிழ்நாட்டு சிவாலயங்கள், ப.5.
10. வள்ளி சொக்கலிங்கம், திருப்புத்தூர், ப. 22.
11. நாராயணசுவாமி, சிவாலயத் திருமேனிகள், ப.7.
12. பெரியபெருமாள்.அ., திருப்பத்தூர் திருத்தளிநாதர் பைரவர் திருக்கோவில் திருத்தல வரலாறு, ப.20.
13. நாராயணசுவாமி, சிவாலயத் திருமேனிகள், ப.7.
14. மேலது, ப.7.
15. மேலது, ப.371.
16. மேலது, ப.379.
17. தே.லூர்து, நாட்டார் வழக்காற்றியல் சில அடிப்படைகள், ப. 400.
18. தொ.பரமசிவன், பண்பாட்டு அசைவுகள் (தெய்வங்களும் சமூக மரபுகளும்), ப.125.
19. முனைவர். இரா. சந்திரசேகரன், வழிபாட்டு மரபுகள், ப. 8.
20. தே.லூர்து, நாட்டார் வழக்காற்றியல் சில அடிப்படைகள். ப. 402.
21. க. கைலாசபதி, பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், ப. 55.

22. குன்றக்குடி பெரிய பெருமாள், குன்றக்குடி ஆதீன ஐந்து கோவில்கள், பக்.7576.

23. நாராயணசுவாமி, சிவாலயத் திருமேனிகள், பக்.164.

24. குன்றக்குடி பெரிய பெருமாள், குன்றக்குடி ஆதீன ஐந்து கோவில்கள், பக்.7677.

குறிப்பு: தகவலாளிகள் அளித்த பேட்டிகள் (பின்னிணைப்பில் காண்க).

## இயல் 4

## வழிபாட்டு முறைகளும் விழாக்களும்

அரசனுககுக் கொடுத்த மரியாதையும், வணக்கமுமே பின்னர் ஆலய வழிபாடாக மாறியது. (கோ-அரசன், இல்-வீடு) (கோவில்). அரசனுக்குச் செய்த பணிவிடைகள் ஆண்டவனுக்காக மாறியபோது வழிபடு விழாக்கள் தோன்றலாயின. அரசன் கொண்டிருக்கும் அனைத்தும் இறைவனுக்கும் இருக்கும்படிச் செய்தனர். கொடி, குடை, அணிகலன்கள் முதல் ஆயுதங்கள் வரை அரசனைச் சார்ந்தே எழுந்தனவாகும். அரசனும் ஆண்டிற்கு ஒரு முறை பரிவாரங்களோடு, துதி பாடி, நகர் வலம் வந்ததைத் தொடர்ந்தே ஆண்டவனையும் பக்திப் பனுவல்களோடு நகர்வலம் வரச்செய்து மகிழ்ந்தனர்.

அரச வழிபாட்டினை நர வழிபாடு எனக்கருதிய சமயச் சான்றோர், கண்ணுக்குப் புலப்படாத இறைவனை வணங்கத் தலைப்பட்டனர். "கடவுளைக் குறித்து வழங்கும் காரணப் பெயராகிய இறைவன் எனும் சொல், வேண்டுதல் வேண்டாமை இலானாகிய அப்பெருமானைப் போன்று யாவர் மாட்டும் விருப்பு வெறுப்பின்றி நடுநிலையுடையவனாகி அறவோர்க்கருளியும், அறமில்லாதாரை ஒறுத்தும் ஆளவல்ல வேந்தனைக் குறித்த பெயராகவும் வழங்கப் பெறுவதாயிற்று. இச்சொல்லின் பொருட்டன்மை முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு இறையென்று வைக்கப்படும் எனவரும் திருக்குறளால் இனிது புலனாதல் காண்க."(1) அவ்வழியே, குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்திற்கு உட்பட்ட ஐந்து கோவில்களில் நடைபெறும் பூசைகள், வழிபாட்டு முறைகள், திருவிழாக்கள் போன்றவற்றை விளக்குவதாக இவ்வியல் அமைகிறது.

**வழிபாடு**

கடவுள் நம்பிக்கை உடையோர் கடவுளரை ஆண்டானாகவும், தம்மை அடிமையாகவும் கருதி, அக்கடவுளர்களுக்குத் தமது நன்றியைப் புலப்படுத்தும் முகமாகச் செய்யும் தொழுகையே வழிபாடாகும்.

வழிபாடு என்பது மனித வாழ்வோடு ஒன்றியது. அதனால்தான் தொல்காப்பியர் 'வழிபடு தெய்வம் நிற்புறங் காப்ப' என்பார். வாழ்வில் நல்லன நிகழவும், தீயன விலகவும் மக்கள் வழிபாட்டை உருவாக்கினர்.

மனித மனத்தில் தோன்றிய அச்சம், குற்றவுணர்வு போன்ற மனவியல் பண்புகளின் பரிணாம வளர்ச்சியே வழிபாட்டு நெறிக்கு வித்திட்டது. 'அஞ்சியாகினும் அன்பு பட்டாகினும் தெய்வத்தை நினை' என்பர் அப்பர். 'வழிபாடு என்ற சொல்லுக்கு வணக்கம், கோட்பாடு, பூசனை, பின்பற்றுதல், வழக்கம் எனப் பல பொருள்கள் இருப்பினும் கடவுளையோ, உயிர் இல்லாதவற்றையோ, உயிர் உள்ளவற்றையோ, வாயால், மனத்தால் வழிபடுவதே வழிபாடு'[(2)] எனத் தமிழ்லெக்சின் விளக்கம் தருகிறது. குறிப்பிட்ட ஒரு வெற்றிடத்தை வழிபடல், பீடத்தை வழிபடல், உருவத்தை வழிபடல், நடுகல்லை வழிபடல் என வழிபாட்டில் பல நிலைகள் இருந்து வருகின்றன.

இறைவன் உண்மையின் வடிவாகவும் உறைவிடமாகவும் விளங்குகின்றான். மனக் கலக்கங்களும் வேறு பல துன்பங்களும் நீங்கச் சிறந்த கருவியாக வழிபாடு அமைகிறது[(3)] என்பர் இராசமாணிக்கனார்.

நமது உள்ளத்தில் இறைவனைக் குடியேற்ற வேண்டும். அதற்கு நம் உள்ளத்தைத் தூய்மையாக வைப்பதுடன் திறந்தும் வைத்திருக்க வேண்டும். வழிபாடு என்பது அடிப்படையில் ஒருவகை விருப்பத்தின் வெளிப்பாடே என்பர்.

ஆன்மீகக் கூட்டு வழிபாட்டை இன்று இச்சொல் உணர்த்தினாலும் ஒரு மதிப்புமிக்க வேண்டுதலையே வெளிப்படுத்துவதாகச் சமயமும் அறமும் பற்றிக் கலைக்களஞ்சியம் கூறுகிறது.

**வழிபாட்டின் வகைகள்**

வழிபாடு பல வகைகளில் அமைகின்றது. இதனைப் பொது வழிபாடு, சிறப்பு வழிபாடு என இருவகைப்படுத்துவர். ஒவ்வொரு நாளும் வழக்கம் போல் இறைவனை எண்ணி வழிபடுவது பொது வழிபாடு எனவும், சிறப்பு நாட்களில், திருவிழாக் காலங்களில் இறைவனை வழிபடுவது சிறப்பு வழிபாடு எனவும் கூறுவர்.

திருவாசகத்தில் பல வழிபாட்டு முறைகள் கூறப்பட்டுள்ளன. "பக்தியில் கூத்தாடுதல், பாடுதல், பதைத்தல், பணிதல், சிவன் எங்குற்றான் என்று தெருதோறும் அலறித்தேடுதல், நல்ல மலர் புனைதல், நாத்தழும்ப ஏற்றுதல், சிந்தனையைப் பிரானுக்கு ஆக்குதல், சிந்தை, செய்கை, கேள்வி, வாக்கு - இவை அனைத்தையும் அவருக்கே ஆக்குதல், சிவன் எம்பெருமான் என்று இயம்பி ஊற்று மணல் போன்று நெக்கு-நெக்கு உள்ளம் உருகி ஓலமிட்டுப் போற்றி நிற்றல், திருக்கோயிலைப் பெருக்குதல், மெழுகுதல், பெருமானை மலரிட்டு முட்டாது இறைஞ்சுதல், பூமாலை புனைந்து ஏத்துதல் போல்வன திருவாசகத்தில் காணப்படும் வழிபாட்டு முறைகளாகும்."[4]

**பூசை**

இறைவனுக்கு ஏதாவது பொருட்களைப் படைத்து மனதார வணங்குவதே பூசை எனப்படும். திருமுறைப் பாடல்கள் வழிபாட்டைப் பூசை, பூசனை, அருச்சனை, வழிபாடு என்ற சொற்களால் குறிக்கின்றன.

'பூசை செய்து அடியார் நின்று புகழ்ந்தேத்த'
'மலைமகள் பூசை மகிழ்ந்தருளும் சிட்டர்'
'அன்பரிட் டுகந்து ஆர்மலர் பூசை இச்சிக்கும் இறைவா'

என்ற திருமுறைத் தொடர்களில் பூசை என்ற சொல் இடம் பெற்றிருப்பது அறியப் பெறுகிறது.

'பூசனை உவந்து என் சிந்தையுட் புகுந்து
அணையவந்து புக்கு அயவந்தி வேவிய அமுதின்'
'துணை மலர்க்கழல் தொழுது பூசனை செயத் தொடங்கி'
'எணணில் ஆகமம் இயம்பிய இறைவர் தாம் விரும்பும்
உண்மையாவது பூசனை என உரைத்தருள'

எனவரும் தொடர்களில் பூசனை என்னும் சொல் பயின்று வந்திருப்பதைக் காணலாம்.

'தொண்டர் அஞ்சு களிறும் மடக்கிச் சுரும்பார் மலர்
இண்டைகட்டி வழிபாடு செய்யும் இடம் என்பரால்'

எனவரும் திருமுறைத் தொடரில் வழிபாடு என்னும் சொல் வந்துள்ளமை காணமுடிகிறது.

'அண்ணலார்தனை அர்ச்சனை புரிய ஆதரித்தாள்
பெண்ணின் நல்லவ ளாகிய பெருந்தவக் கொழுந்து'

எனவரும் திருமுறைத் தொடரில் அர்ச்சனை என்ற சொல் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

பெருந்தெய்வக் கோவில்களில் பூசை முறைகளில் ஓர் ஒழுங்கு முறை உண்டு. அதாவது நாள் ஒன்றுக்கு மூன்று காலம் அல்லது ஐந்து அல்லது ஆறு காலப் பூசைகள் நடைபெறும். இப்பூசைகள் தவறாது நடைபெறுகின்றன. இப்பூசைக்கு நைவேத்தியம் செய்து அதனை இறைவனுக்குப் படைக்கின்றனர். அதற்கென ஒவ்வொரு கோவிலிலும் மடைப்பள்ளியும் இருக்கிறது. பூசை முடிந்ததும் பக்தர்கட்குப் பிரசாதம் வழங்கப்படுகின்றது. சைவக் கோவில்களில்

திருநீறும் குங்குமமும் வழங்கப்படுகின்றன. வைணவக் கோவில்களில் துளசி, தீர்த்தம், குங்குமம் வழங்கப்படுகின்றன.

**வழிபாட்டுக்கு வேண்டும் பொருட்கள்**

தண்ணீர், மலர், தூபம், தீபம், சாந்தம்(சந்தனம்), மாலை, ஆடை, அணிகலன், திருவமுது முதலான பொருள்கள் பூசைக்கு வேண்டுவனவாகும். (எ.கா),

'பூவும் நீரும் பலியும் சுமந்து
அணிகொள் ஆமை, அம்பூண், அணிமாலை
அமுது செய்து, அமுதம் பெறு சண்டி' (7-65-2)

என வரும் திருமுறைத் தொடர்களால் இதனை அறியலாம்.

**வழிபாட்டுக்கு உரிமை உடையோர்**

தற்காலத்தில் அனைவரும் அர்ச்சகராகலாம் என்ற வார்த்தை மட்டுமே பயன்பாட்டில் உள்ளது. "தமிழகக் கோவில்களில் ஆதி சைவ அந்தணர்கள் மட்டுமே வழிபாட்டுக்கு உரிமை உள்ளவர்களாக இருக்கிறார்கள். ஏனைய சாதியார்க்கு இந்த உரிமை இல்லை. திருமுறைப் பாடல்களில், திருமுறை தோன்றிய காலத்திலும், புராண காலத்திலும் ஆலயங்களில் கிரியை வழிபாடு செய்வதற்குத் தேவர்களும், முனிவர்களும், மானிட வர்க்கத்தில் அந்தணர்களும் ஏனைய சாதியார்களும், பறவைகளும், விலங்குகளும் உரிமை பெற்றிருந்த வழக்கம் தெரியவருகிறது.

'மலைமகள் பூசை மகிழ்ந்தருளும்
சிட்டர்த் திருச்சத்தி முற்றத் துறையும் சிவக்கொழுந்தே'
'திகழும் ஆயிரம் மாலவன் ஆயிரம் மலரால்
ஏத்துவான் ஒரு நீள் மலர் குறைய'
'பூமகள் அலரொடு புனல்கொடு வழிபடு புறவமே
வந்தொர் இந்திரன் வழிபட மகிழ்ந்து
வானநாடு நீ ஆள்க என அருளி

பூவலர்ந்த கொண்டுமுப் போதும் உம் பொற்கழல்

தேவர் வந்து வணங்கும் மிகுதெளிச் சேரியீர்'

என வரும் தொடர்களால் மலைமகளும், திருமாலும், நான்முகனும், இந்திரனும், தேவர்களும் வழிபாடு செய்தமை தெரியவருகிறது.

'முட்டாமே நாள்தோறும் நீர் மூழ்கிப் பூப்பறித்து மூன்றுபோதும்

கட்டார்ந்த இண்டைகொண்ட அடிசேர்த்தும் அந்தணர்'

என வரும் தொடர்களில் அந்தணர் வழிபாடு செய்தது அறியப் பெறுகிறது.

'தொண்டர்தாம் மலர்தூவிச் சொன்மாலை புனைகின்ற

இண்டைசேர் சடையானை

பத்தரோடு பலரும் பொலியும் மலர்

அங்கை புனல் தூவி'

'பொன்னியல் நறுமலர் புனலொடு தூபம்

சாந்தமும் ஏந்திய கையின ராகிக்

கன்னியர் நாளும் வேடமே பரவும்'

எனவரும் திருமுறைத் தொடர்களால் அந்தணர்களைப் போல ஏனைச் சாதியாரும் வழிபாட்டுக்கு உரிமை பெற்றிருந்தது தெரிய வருகிறது."(5)

பாலை நிலத்தில் உள்ள பெண்கள் தம் கணவர் பிரிவினால் வருந்தியிருக்கும் நிலையில் அவர் விரைவில் வரவேண்டும் என்பதற்காக, 'மாலைக் காலத்தில் தமது இல்லத்தில் இரும்பால் செய்த தகளியில் நெய்தோய்ந்த திரிகொண்டு விளக்கு ஏற்றி, நெல்லையும், மலரையும் தூவி தெய்வத்தைக் கைகுவித்து வணங்கி வழிபட்டனர்' என்பதை நெடுநல்வாடை (39-44) தெரிவிக்கின்றது. இது குறித்து 46ஆம் பட்டம் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனகர்த்தா, திருக்கோவில்களில் வழிபாட்டு முறைகளில் ஏதேனும் மாற்றம் செய்யப்பட வேண்டுமா? என்ற வினாவிற்குக் கீழ்க்கண்டவாறு பதிலுரைக்கிறார்.

"திருக்கோவில்களில் வழிபாட்டு முறைகளில் மாறுதல் ஏதுமில்லை. அனைத்துச் சாதியினரும் அர்ச்சகராகலாம் என்ற கோட்பாடு என்றைக்கும் தேவையான, சமய உலகத்திலுள்ள தீண்டாமையை நீக்க, சமய உலகத்தின் சமத்துவத்தை நிறுவுவதற்கான கோட்பாடு. அந்தக் கோட்பாட்டை நடைமுறைப்படுத்த எதிர்காலம் வழிவகை செய்ய வேண்டும்"(6) என்கிறார்.

"திருக்கோவில்களில் சாதி வேறுபாடின்றி அனைவரும் அர்ச்சகராகலாம். இறைவனைத் தொட்டு வழிபாடு நடத்தச் சாதி ஒரு தடையாக இருக்கக் கூடாது. தகுதியும், சீலமும் உடையவர் யாராக இருந்தாலும் அர்ச்சகராகலாம் என்று ஆணித்தரமான கருத்துக்களை முன்வைக்கிறார்."(7) குன்றக்குடி ஆதீனம் நிருவகிக்கும் திருக்கோவில்களில் அந்தணர் தவிர்த்து வேற்றுச் சாதியினர் அர்ச்சகராக தற்போது இல்லை என்பதும் பெறப்படுகிறது.

### வழிபாட்டு மொழி

இந்தியாவில் பல்வேறு மொழிகள் பேசப்பட்டு வந்தாலும், சைவ, வைணவ ஆலயங்களில் வடமொழியே வழிபாட்டு மொழியாக இருந்து வருகிறது. "சைவ சமயமும், வைணவ சமயமும் வெவ்வேறு கோட்பாடுகளை உடையனவாயினும், இவ்விரு சமயங்களும் வடமொழி வேதத்தையே தமது சமய நூலாக ஏற்றுக் கொண்டுள்ளன. ஆகவே, ஆலயங்களில் வடமொழி மந்திரங்களை ஓதி வழிபாடு நடத்தப்படுகிறது. இது ஒரு காரணம்.

ஒரு மொழி பேசும் மாநிலத்தார், வேற்று மொழிகள் பேசப்படும் மாநிலங்களில் உள்ள புண்ணியத் தலங்களுக்கு யாத்திரை செய்து வருவது நடைமுறையில் இருந்து வருகிறது. எனவே எந்த ஒரு மொழிக்காரரும் ஆலய வழிபாட்டைப் புரிந்து கொள்வதற்கு வாய்ப்பாக ஒரு பொது மொழி இருப்பது

நலம் என்று கருதி முற்காலத்திலேயே ஆலய வழிபாட்டின் பொது மொழியாக வடமொழியை மேற்கொண்டுவிட்டார்கள். இது இரண்டாவது காரணம்.

திருமுறைப் பாடல்களும் அக்காலத்தில் ஆலயங்களில் வடமொழி, வழிபாட்டு மொழியாக இருந்ததைச் சுட்டிக் காட்டுகின்றன.

'சதுரம் மறைதான் துதிசெய்து வணங்கும்
மதுரம் பொழில்சூழ் மறைக்காட்டுறை மைந்தா'
'இருக்கு வாய்மொழியால் தனை ஏத்துவார்'

எனவரும் திருமுறைத் தொடர்களால் வடமொழி, வழிபாட்டு மொழியாகப் பயன்படுத்தப்பட்டதை அறியமுடிகிறது"[8]என்பர். இவ்வாறு இருப்பினும், அக்காலத்தில் வடமொழி அல்லாத பிற மொழிகளும், குறிப்பாகத் தமிழ் மொழி வழிபாட்டு மொழியாக இருந்ததையும் திருமுறை சுட்டுகிறது.

'செந்தமி ழோர்கள் பரவி ஏத்தும்
சீர்கொள் செங்காட் டங்குடி யதனுள்'

எனவரும் திருமுறைத் தொடரில் ஞானசம்பந்தர் செந்தமிழர்கள் என ஓர் இனத்தாரைப் பிரித்துக்காட்டி அவர்கள் வழிபட்டதைக் குறிப்பிட்டுள்ளார்.

'சலம் பூவொடு தூபம் மறந்தறியேன்
தமிழோடிசை பாடல் மறந்தறியேன்'

எனவரும் நாவுக்கரசரின் பாடல் வரிகளால் தமிழர்கள் தமிழ் மொழியில் வழிபாடு நடத்தியமை அறியப் பெறுகிறது.

இக்கருத்தினை ஒட்டி, 46ஆம் பட்டம் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனகர்த்தர் பொன்னம்பல அடிகளார் கீழ்வரும் கருத்தினைத் தெரிவிக்கிறார்.

'தமிழில் திருமுறைகள் பாடப்பட வேண்டும் என்பது தேவையான மிக அவசியமான ஒன்று. ஆனால் திருமுறைகள் ஓதுவார்களால் பாடப்படுவதில்லை. அதில் அவர்கள் விருப்பம் இல்லாதவர்களாகவும் இருக்கிறார்கள். அரசும், அறநிலையத் துறையினரும் நல்ல ஓதுவார்களை உருவாக்க வேண்டும்.

தமிழில் அர்ச்சனை செய்யப்படும் என்ற பெயர்ப் பலகை மட்டும் கோவில்களில் காணப்படுகின்றன. ஆனால் கோவில்களில் தமிழில் அர்ச்சனை செய்யப்படவில்லை. இதைமாற்ற வேண்டிய பொறுப்பு, தமிழ் உணர்வாளர்களுக்கு வரவேண்டும். தமிழ் உணர்வாளர்கள் என்றால் அவர்கள் தனித்தொகுதி கிடையாது. ஒட்டுமொத்தத் தமிழர்களும் இதற்குப் பாடுபட வேண்டும்"[9]என்கிறார்.

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்திற்குட்பட்ட ஐந்து திருக்கோவில்களிலும் தமிழில் அர்ச்சனை செய்யப்படவில்லை என்பது பெறப்படுகிறது. தென்னாடுடைய சிவனுக்குத் தமிழ் தெரியாதா? என்ற வினாவும் எழுகின்றது. எனினும் திருமுறைப் பாடல்கள் வடமொழியோடு கூடத் தமிழ் மொழியையும், திசை மொழியையும் அதாவது எல்லா இந்திய மொழிகளையும் வழிபாட்டு மொழியாக ஏற்றுக் கொள்ள வேண்டும். வடமொழிதான் வழிபாட்டு மொழி என்ற விடாப்பிடி தளர வேண்டும். தமிழ்நாட்டிலுள்ள அனைத்துக் கோவில்களிலும் தமிழ் மொழியில் வழிபாடு நடத்த வாய்ப்பளித்தால் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனக் கர்த்தாவின் கனவு நனவாகும் என்பது பெறப்படுகிறது.

**விழாக்களின் தத்துவங்கள்**

'அஞ்செழுத்து மெட்டெழுத்து மாறெழுத்து நாலெழுத்தும்
பிஞ்செழுத்து மேலைப் பெருவெழுத்து நெஞ்சத்தில்
பேசு மெழுத்துடனே பேசா வெழுத்தினையுங்
கூசாமற் காட்டக் கொடி'

கொடியேற்றிய முதல்நாள் விழா தூல உடம்பை நீக்குவதற்காகவும், இரண்டாம் நாள் தத்துவமான உடம்பு நீங்கும் பொருட்டும், மூன்றாம் நாள் மூவினை, முக்குணம், மும்மனம், முக்குற்றம், முப்பிறப்பு, முப்பற்று முதலியன

நீங்குவதற்கும், நான்காம் நாள் நாற்கரணம், நால்வகைத் தோற்றம் நீங்கவும், ஐந்தாம் நாள் விழா ஐம்பொறிகள், ஐந்தவத்தை, ஐந்து மலங்கள் நீங்கவும், ஆறாம் நாள் விழா உட்பகை ஆறும், கலைகள் ஆறும், கன்மதுலம் ஆறும், பதமுத்தி ஆறும் நீங்கவும், ஏழாம்நாள் விழா எழுவகைப் பிறப்பும் எழுவகைத் தத்துவங்களாகிய மலகுணமேழும் நீங்குதற் பொருட்டும், எட்டாம் நாள் விழா எண் குணங்கள் விளங்கவும், ஒன்பதாம் நாள் விழா மூவடிவும், மூக்கிருந்திறம், மூவிடத்து உறைதலிலை என்றற் பொருட்டும், பத்தாம் நாள் விழா சிந்தையும் மொழியும் செல்லா நிலைத்தாய் என்றும் கூறுகின்றனர்."[10]

**வழிபாடு (பிரான்மலை)**

சைவ ஆகம விதிப்படி நாள்தோறும் பூசைகள் நடைபெறுகின்றன. கொடுங்குன்ற நாதருக்குக் காமிக ஆகமப்படி ஆறுகாலப் பூசையும், வெறிமங்கை பாகருக்குக் காரண ஆகமப்படி நான்கு காலப் பூசையும் நடைபெறுகின்றன. "சூரிய உதயம் தொடங்கி பத்து நாழிகை பிராதக் காலம் (காலசந்தி), அக்காலம் முடிந்து பத்து நாழிகை மாத்யான்ஹிகம் (உச்சிக்காலம்), அது முடிந்து பத்து நாழிகை சாயங்காலம். பிரதோஷகாலம் சூர்யாஸ்தமன முதல் ஏழரை நாழிகை சாயர (இரண்டாம் காலம் என்பர்). அது முடிந்து மேல் மூன்றே முக்கால் நாழிகை அர்த்த யாமம். சூரியன் உதயத்திற்கு முன் மூன்றே முக்கால் நாழிகை உஷ:காலம் ஆகும்"[11] என்பர்.

பிரான்மலைக் கோவிலில் திருவனந்தல், விளாப்பூசை, காலசந்தி, உச்சிக்காலம், சாயரட்சை, அர்த்தசாமம் ஆகியவை கொடுங்குன்றநாதருக்கும், திருவனந்தல், விளாப்பூசை தவிர்த்த ஏனைய பூசைகள் மங்கைபாகருக்கும் நடைபெறுகின்றன.

**திருவனந்தல் - விளாப்பூசை**

இப்பூசை சூரியன் உதித்த மூன்றே முக்கால் நாழிகைக்கு முன் நடைபெறுகிறது. சிவாச்சாரியார்கள் அங்குள்ள நந்தியை வணங்கிப் பின் பைரவரிடம் உள்ள திறவுகோலைப் பெற்று, பள்ளியறை சென்று இறைவனையும் இறைவியையும் துயில் எழுப்பிக் கருவறையில் வைத்துப் பூசை செய்வர். விளாப்பூசை சூரியனிடமிருந்து ஆரம்பமாகும்.

**காலசந்தி**

இப்பூசை முதலில் விநாயகரிடமிருந்து தொடங்கி கால பைரவரிடம் நிறைவு பெறுகிறது. இப்பூசையின் போது அபிசேகம், அலங்காரம், தீபதூப ஆராதனை, அர்ச்சனை ஆகியன நிகழ்த்தப் பெறுகின்றன. "பஞ்சகவ்யம் ஸ்தபனம் செய்து கொண்டு த்வார பூஜை வாஸ்துநாத பூஜை இலிங்க சுத்தி செய்து சுவாமியை ஸ்திராசனம் வரையில் பூஜித்து அபிஷேக அலங்காரங்கள் செய்து, போகாங்கம் பூஜை செய்து, நைவேத்யம் முதலிய உபசாரங்கள் செய்து, பின் தேவியைப் பூஜித்து சண்டிகேசுவரனைப் பூசிக்க வேண்டும்"[(12)]என்பர். இது காரணாகமத்தின்படி நடைபெறுவது.

**உச்சிக்காலம்**

இது நண்பகல் நிகழ்த்தக் கூடிய பூசையாகும். இப்பூசையில் பைரவருக்கு முதலிடம் தரப்படுகிறது. அதற்கு அடுத்து கொடுங்குன்றநாதருக்கும், மங்கைபாகருக்கும் ஆராதனையுடன் நைவேத்தியம் நடைபெறுகின்றன.

**சாயரட்சை**

மாலை ஆறு மணிக்கு இப்பூசை நடைபெறுகிறது. இப்பூசையைப் பிரதோசகால பூசை என்கின்றனர். இப்பூசையின் போது விநாயகரிடம்

தொடங்கி, அதன்பின் எல்லா கடவுள்களுக்கும் ஆவகானம், அபிசேகம், தீபதூப ஆராதனை ஆகியன நடைபெறுகின்றன. "முதலில் நடராசரைப் பூசித்துப் பின் மூல லிங்கத்திற்குத் தூபம், தீபம், நைவேத்யம் முதலியவைகள் செய்து பிறகு சோமாஸ்கந்தர் முதலிய மூர்த்திகளுக்கும், தேவிக்கும் பூஜை மற்றும் உபசாரங்களைச் செய்ய வேண்டும்"(13) என்பர்.

**அர்த்தசாமம்**

இரண்டாம் காலப் பூசைக்குப் பின் மூன்றே முக்கால் நாழிகை கழித்து நிகழும் இப்பூசையின் போது நைவேத்தியப் படையல் மற்றும் தீபதூப ஆராதனை நிகழ்கிறது. இப்பூசைக்குப் பின் கடவுளரைப் பள்ளியறைக்கு அழைத்துச் செல்கின்றனர்.

காமிகாகமத்தில் சிவபெருமானுக்கு அர்ப்பணிப்பவைகளாக, "பத்திரம், புஷ்பம், பழம், ஜலம், அன்னம், பானம் இவைகளை நிவேதனம் செய்யாமல் சாப்பிடக்கூடாது. அவனுக்கு அது தனமாக மாறிவிடும். அப்படியே புஷ்பம் கொடுக்கின்றவனுக்கும் தனமாகக் கிடைக்கும். சிவார்ப்பணம் செய்யாமல் புசிப்பவனுடைய பொருள் யாவும் நாசத்தையடையும்"(14) என்பர்.

**சிறப்பு வழிபாடுகள்**

இக்கோவிலில் ஆனி, புரட்டாசி, கார்த்திகை, மாசி ஆகிய நான்கு மாதங்களில் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன. ஆனியில் நடராசருக்குத் திருமஞ்சனமும், புரட்டாசியில் கொலுவும், கார்த்திகையில் சம்பா சஷ்டியும், மாசிமாதம் சிவராத்திரியும் நடைபெறுகின்றன.

மங்கைபாகரின் முன் தீபம் காட்டப்படுவதில்லை. மங்கைபாகர் உடனாய தேனம்மைக்கு நீரால் அபிசேகமும் செய்வதில்லை. தினமும் மங்கைபாகர் உடனாய தேனம்மை பாதத்தின் கீழுள்ள லிங்கத்திற்குத்தான் நீரால்

அபிசேகம் நிகழ்த்தப்படுகிறது. அதற்குப் பதிலாக சாம்பிராணித் தைலம், புனுகு போன்ற தைலங்களால் அபிசேகம் நடைபெறுகின்றன. 16 முழம் வேட்டி அணிந்தநிலையில் கடவுளர் காணப்படுகின்றனர். வெள்ளிக்கிழமை அன்று சம்பாவடை நைவேத்தியமாகப் படைக்கப்படுகிறது.

**சயந்தன் விழா**

இவ்விழாவானது சித்திரை மாதம் பரணி நட்சத்திரத்தில் கொண்டாடப்படுகிறது. இது பைரவருக்குரிய சிறப்பான பூசையாகும். அன்று பைரவருக்குப் பால்குடம் எடுக்கப்படுகிறது.

சிறுத்தொண்டர் சித்திரைப் பௌர்ணமி அன்று இறைவனுக்காகப் பிள்ளைக்கறி சமைத்த நிகழ்வு காரணமாகவும், இந்திரன் மகன் சயந்தன் போரில் வெற்றி கிட்டும் பொருட்டுப் பைரவரை வணங்கினான் என்பதன் காரணமாகவும் இவ்விழா எடுப்பதாக நம்பப்படுகிறது. பைரவர் காவல் தெய்வம். ஆகையால் அவரே போருக்குச் செல்லக்கூடியவர். அக்காலத்தில் போருக்குச் செல்லக் கூடியவர்கள் (கொற்றவை வழிபாடு) பரணி நட்சத்திரத்தில்தான் செல்வார்கள். அதன் எச்சமாகவும் இவ்விழா பரணி நட்சத்திரத்தில் கொண்டாடப்படுவதாகவும் கூறுகின்றனர்.

**சுனை விழா**

சுனைவிழா தைமாதத்தில் நடைபெறுகிறது. நீர்நிலைகளை வழிபடுவது தொன்றுதொட்டு வரும் வழக்கம். ஆகையால் இச்சுனையின் நீர் சுவையாக இருப்பதாலும் இவ்விழா இவ்வூர் மக்களால் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. ஆடிப்பெருக்கு வழிபாடு போன்று இங்குச் சுனை வழிபாடு அமைந்திருக்கிறது.

### உற்சவத் திருமேனிகள்

கடவுளரை வாகனங்களில் எழுந்தருளச் செய்து உலா வருகின்ற காட்சியைப் புலவர்கள் பாடியமையைத் தனிப்பாடல்களால் அறிய முடிகின்றது. காளமேகப் புலவர் 'திருமாலைப் பருந்து எடுத்துப் போகுதுபார்' என்று பாடுவது இதற்குச் சான்றாகும். இறைவன் வாகனங்களில் எழுந்தருளி வருகின்ற காட்சியைச் சிறப்பித்துப் பாடுவது வாகனக்கவி எனப்படும். இது திருக்கோவில் திருவிழாவை ஒட்டி எழுந்த புதிய இலக்கிய வகையாகும். திருக்குற்றாலக் குறவஞ்சி போன்ற நூல்கள் சிவபெருமான் வாகனத்தில் உலா வருதலைப் பாடுகின்றன.

இக்கோவிலில் உற்சவர்களாக விநாயகர், சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, திருஞானசம்பந்தர், மாணிக்கவாசகர், அப்பர், சுந்தரர், பைரவர், நடராசர், சிவகாமி, பஞ்சமூர்த்திகள் போன்ற கடவுளர்கள் உள்ளனர்.

### வாகனங்கள்

பிரான்மலை கொடுங்குன்றநாதர் திருக்கோவிலில் கேடகம், அன்னம், கற்பகதரு, காமதேனு, பூதவாகனம், சிம்மம், யானை, பல்லக்கு, வெள்ளி, இடபவாகனம், கிளி, வெள்ளிக்கேடகம், குதிரை, நான்குதேர், ஒரு சப்பரம் போன்றவை உள்ளன.

### திருவிழா

உறவுகளைப் புதுப்பிக்கும் நிகழ்வே விழாவாகும். விழா என்னும் திறந்த வாசல் வழியே தான் நம்நாட்டு மக்களை அறிந்து கொள்ள முடியும் என்ற தாகூர் கருத்து நோக்கத்தக்கது. சங்ககாலத்திற்கு முன்பிருந்தே விழாக்களில் மக்கள் கொண்ட ஈடுபாட்டினை இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. சங்க இலக்கியங்கள் "விழா"[15] "விழவு"[16] "சாறு"[17] போன்ற சொற்களால்

விழாக்களைக் குறிக்கின்றன. பழந்தமிழகத்தில் இந்திரவிழா 28 நாட்கள் நடந்தமையைச் சிலப்பதிகாரத்தில் காணலாம். திருவிழாக்கள் மக்களின் பண்பாட்டையும் ஒற்றுமையுணர்வையும் வெளிப்படுத்துகின்றன.

**வைகாசி விசாகம்**

வைகாசி மாதம் பௌர்ணமி அன்று முருகனுக்குப் பால்குடம் எடுத்துச் சிறப்புச் செய்யப்படுகிறது. முன்பு கொண்டாடப்பட்ட ஆனி மஞ்சனம் தற்பொழுது இல்லை.

**ஆவணி - பிட்டுத் திருவிழா**

மதுரையில் நடைபெறுவது போன்று இங்கும் ஆவணி மாதம் மூல நட்சத்திரத்தன்று பிட்டுத் திருவிழா கொண்டாடப்படுகிறது. அன்று உழவாரப் பணிகள் நடைபெறுகின்றன. அன்று பிரசாதமாகப் பிட்டு அனைவருக்கும் வழங்கப்படுகிறது.

மண் சுமந்து புண் சுமந்த பொன்மேனி உடைய இறைவன், உழைப்பை உலகிற்கு உணர்த்திய நாள். உழைக்காமல் கூலி மட்டும் பெறுபவர்கள், ஆண்டவனாகக் கூட இருந்தாலும் தண்டிக்கப்படுவார்கள் என்று உழைப்பின் மேன்மையை உணர்த்திட விழாவாகக் கொண்டாடப்படுகிறது.

**விநாயகர் சதுர்த்தி**

ஆவணி மாதம் சதுர்த்தியன்று விநாயகருக்குச் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது. அன்று இரவு இறைவன் வீதிகளில் எழுந்தருளுவார்.

**புரட்டாசி - பத்துநாள் கொலு**

நவராத்திரி விழா துர்க்கை, லெட்சுமி, சரசுவதி ஆகிய தெய்வங்களை முன்னிலைப்படுத்திச் செய்யும் வழிபாடு கொலுவாக நிகழ்த்தப் பெறுகிறது.

**மாத விழாக்கள்**

கார்த்திகை தினத்தன்று மலை மீது தீபம் ஏற்றும் நிகழ்ச்சி முருகப்பெருமானுக்காகக் கொண்டாடப்படுகிறது.

மார்கழி மாதம் நடராசருக்குச் சிறப்பு வழிபாடு நடத்தப் பெறுகிறது. நடராசர் சிவகாமி அம்மையுடன் வீதிகளில் எழுந்தருளுவார். பௌர்ணமி தினத்தன்று தைப்பூச விழா சிறப்பு வழிபாட்டுடன் நடைபெறும். விநாயகர், முருகன் இருவரும் கேடகத்தில் எழுந்தருள்வர். மாசிமாதம் சிவராத்திரி விழாவாக இக்கோவிலில் கொண்டாடப்படுகிறது.

சித்திரை மாதம் நடைபெறும் விழா தொடர்ந்து பத்து நாட்கள் நடைபெறும். முதலில் கொடியேற்றமும், பின் சம்பந்தருக்கு ஞானப்பால் வழங்கிய திருநாள் நினைவாகத் திருமுலைப்பால் விழாவாக நடைபெறுகிறது. தொடர்ந்து பத்து நாட்களும் இறைவனும் இறைவியும் வீதி உலா வந்து பக்தர்களுக்குக் காட்சியளிக்கிறார்கள்.

இதில், பாரி விழா, ஏழாம் நாள் சங்கத்தமிழ் விழாவாக, 1954ஆம் ஆண்டு முதல் ஆதீனக் கர்த்தாக்களால் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது.

காலையில் பாரியின் சிலையைத் தேரில் எழுந்தருளச் செய்து மேளதாளங்களுடன் மலைக்குச் சென்று வேட்டையாடுதல் நிகழும். இவ்வேட்டை முடிந்து வரும் பொழுது ஔவை நுழைவாயிலில் பாரி முல்லைக்குத் தேரீந்த நிகழ்ச்சி நடக்கும். அதன்பின் கவியரங்கம், பட்டிமண்டபம் நடைபெறும். இவ்விழாவில் பாரியாக ஒருவரை நியமித்து கலைஞர்களுக்குப் பரிசுகள் வழங்குவர். முதன் முதலில் நடைபெற்ற

விழாவில் பாரியாக அழகப்பச் செட்டியார் இருந்தார். மு.கருணாநிதி, இரா.நெடுஞ்செழியன் முதலான பெருமக்கள் பாரியாக இருந்து பெருமை சேர்த்துள்ளனர்.

**திருத்தளிநாதர் கோவில் (திருப்புத்தூர்)**

சிவாலயங்களில் ஆறுகாலப் பூசைகள் நடைபெறும். ஆனால் இக்கோவிலில் காமிக ஆகம அடிப்படையில் ஐந்து காலப் பூசைகள் முறையே திருவனந்தல், காலசந்தி, உச்சிக்காலம், சாயரட்சை, அர்த்தசாமம் ஆகியவை நடைபெறுகின்றன. காலை, உச்சிக்காலம், சாயரட்சை ஆகிய மூன்று நேரங்களில் புளியோதரையும், அர்த்தசாம பூசையின் போது சம்பா சாதமும் படைக்கப்படுகின்றன.

**நாள் வழிபாடு**

நாள் வழிபாட்டினை 'நித்திய பூசை' எனவும் அழைப்பர். திருவனந்தல் காலை 6 மணிக்கும், காலசந்தி காலை 9 மணிக்கும், உச்சிக்காலம் பகல் 12 மணிக்கும், சாயரட்சை மாலை 6 மணிக்கும், அர்த்தசாமம் இரவு 8.30 மணிக்கும் நடைபெறுகிறது. பைரவரிடமிருந்து திறவுகோலைப் பெற்று இறைவன், இறைவியரின் கருவறை வாசல்களைத் திறந்து அவர்களுக்கு வழிபாடு செய்வர். அதன் பின்பு பள்ளியறையைத் திறந்து இறைவனையும், இறைவியையும் பல்லக்கில் ஏற்றி மூலத்தானத்தில் நிறுத்தி நீராட்டி வழிபாடு செய்வர். இதன் பின்பு விநாயகரையும், முருகனையும், தேவியையும் திருமஞ்சன நீரால் நீராட்டித் திருவனந்தல் பூசையை முடிப்பர்.

**காலசந்தி**

இதைக் காலைப் பூசை எனவும் அழைக்கப்படும். முதலில் சூரிய பூசையும், பின் கணேசரது பூசையும், துவார பாலகர் பூசையும் நிகழும். பின்

மூல லிங்கத்திற்கும், பரிவார தெய்வங்கள் அனைத்திற்கும் பூசை விரிவாக நிகழ்த்தப் பெறும். அடுத்து ஆவாகனம், அபிசேகம், அலங்காரம், தீபாராதனை, அர்ச்சனை போன்ற வழிபாட்டு நிகழ்வுகள் நிகழும்.

**உச்சிக்காலம்**

இப்பூசை நிகழும் காலம் நண்பகலாகும். விநாயகரை வணங்கி, பின் துவார பாலகர்களை வணங்குவர். மூலவர்க்குப் பூசைகள் நடைபெறுகின்றன.

**சாயரட்சை**

இப்பூசையைச் சாயங்காலப் பூசை என்றும், பிரதோச காலப்பூசை வழங்கப்பெறும். இப்பூசையின் போது, விநாயகரையும், நடராசரையும், மூலவரையும், பின் சிவனின் ஏனைய மூர்த்தி உருவங்களையும், அம்மையையும் உரியவாறு பூசித்தல் இப்பூசையின் முக்கிய அம்சமாகும். இப்பூசையின் போது அலங்காரம், அபிசேகம் நிகழ்த்தப் பெறுகிறது.

**அர்த்தசாமம்**

இது இரவுப் பூசையாகும். துவார பாலகர்களுக்குப் பூசை செய்வதில்லை. வாசனை கலந்த எண்ணெய் முதலிய அபிசேகப் பொருட்களால் லிங்கத்திற்கு அபிசேகம் செய்து பூமாலை முதலியவற்றால் அலங்கரித்து, பள்ளியறைக்குச் சிவிகையில் உள்ள ஊஞ்சலில் வைத்துக் கொண்டு செல்கின்றனர். அங்குப் பட்டுமெத்தை, தலையணையுடன் கூடிய நுண்ணிய வேலைப்பாடு அமைந்த பொற்கட்டிலின் மீது இருக்கச் செய்வர். பால், பாயாசம், வடை முதலியவற்றை நிவேதனமாகப் படைக்கின்றனர். இறைவனைப் பள்ளி கொண்டு அருளும்படி வேண்டிப் பாடல்களைப் பாடச் செய்து தாழ்ப்பாள் இடுவர். இதன்பின் சண்டேசுவரர்க்குப் பூசை நடைபெறும். இது முடிந்ததும் பைரவரிடம் திறவுகோலை ஒப்படைக்கின்றனர்.

**சிறப்பு வழிபாடுகள்**

சிறப்பு வழிபாடுகள் மாதந்தோறும் சிறப்பு நாட்களில் நடைபெறுகின்றன. தமிழ் வருடப்பிறப்பு, மாதத்தின் முதல் வெள்ளிக்கிழமையன்று முருகப் பெருமானுக்குப் பால்குடம், சயந்தன் பூசை, பிரதோசம், சித்ரா பௌர்ணமி பூசை, கார்த்திகை, சதுர்த்தி, வைகாசித் திருவிழா ஆரம்பம் என்று சித்திரை மாதத்தில் சிறப்புப் பூசைகள் நடைபெறுகின்றன.

வைகாசி மாதம் சோமப் பிரதோசம், தேர்த்திருவிழா, தெப்பத் திருவிழா, சங்கரகர சதுர்த்தி, கார்த்திகை சிறப்புப் பூசைகள் நடைபெறும்.

ஆனி மாதம் திருமஞ்சனம், ஆடி மாதங்களில் விளக்குப் பூசை, சனிப் பிரதோசம் போன்றவை நிகழும். ஆவணி மாதத்தில் விநாயகர் சதுர்த்தி மற்றும் பிரதோச தினங்களில் சிறப்புப் பூசைகள் நடைபெறுகின்றன.

புரட்டாசி மாதம் நவராத்திரி விழாப் பூசைகள் சிறப்பாக நடைபெறும். ஆயுத பூசை, சரசுவதி பூசை, விசயதசமி அன்று அம்மன் குதிரை வாகனத்தில் அமர்ந்து அம்பு எய்தல் போன்ற சமயங்களில் சிறப்புப் பூசைகள் நடைபெறுகின்றன.

கார்த்திகை மாதம் யோக பைரவருக்குச் சம்பக சஷ்டி உற்சவம், தினந்தோறும் அஷ்டபைரவர் ஹோமம், கார்த்திகை தீபம், பௌர்ணமி பூசை போன்ற நாட்களில் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன. "சம்பகாசுரனை பைரவர் அடக்கி ஒடுக்கிய நாளான கார்த்திகை மாதம் சஷ்டி திதி பைரவரின் வெற்றி நாளாக சம்பக சஷ்டி என்ற பெயரிலும், குமார சஷ்டி என்ற பெயரிலும் ஒவ்வொரு ஆண்டும் வெகு சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது. கார்த்திகை மாத வளர்பிறை பிரதமைதிதி முதல் (அமாவாசைக்கு மறுநாள்)

சஷ்டிதிதி வரை ஆறுநாட்களும் அஷ்டபைரவர் யாகமும், யாகத்தை தொடர்ந்து அபிசேகமும் செய்யப்பட்டு வருகின்றன."[18]

மார்கழி மாதம் ஆருத்ரா தரிசனம், பௌர்ணமி பூசை, சனிப் பிரதோசம், சதுர்த்தி, மகாசிவராத்திரி என வரும் நாட்களில் சிறப்புப் பூசைகள் நிகழ்த்துகின்றனர்.

தை மாதம் தைப்பூசம், பொங்கல் விழா நாட்களில் சிறப்புப் பூசைகள் நடைபெறுகின்றன. மாசி மாதம் மாசிமகம் வருகின்ற நாளில் முருகனுக்குச் சிறப்பு அபிசேகம் நடைபெறுகிறது.

பங்குனி மாதம் பங்குனி உத்திரத்தன்று சிறப்புப் பூசைகள் நடைபெறுகின்றன. மாதந்தோறும் வருகின்ற சதுர்த்தி, பிரதோசம் போன்ற நாட்களில் சிறப்பு வழிபாடுகள் நடந்துவருகின்றன.

**திருநாகேசுவரர்க்குச் சிறப்பு வழிபாடு**

நாககுற்றம் (நாகதோசம்) நீங்கி, திருமணம் நடைபெறவும், குழந்தைப்பேறு கிடைக்கவும், பால் அபிசேகம் செய்து நெய் தீபம் ஏற்றி வழிபாடு நிகழ்த்துகின்றனர். ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமைகளிலும் ராகுகாலச் சிறப்பு வழிபாடுகள் நடந்து வருகின்றன. விஷ்ணுதுர்க்கைக்கும் ராகுகாலச் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன.

**திருவிழாக்கள் (வைகாசி விசாகப் பெருவிழா)**

திருத்தளிநாதர் கோவிலில் பல்வேறு வகையான விழாக்கள் நடைபெறுகின்றன. வைகாசி விசாகப் பெருவிழா 10 நாட்கள் நடைபெறுகின்றன. ஒவ்வொரு நாளும் இறைவனும் இறைவியும் வாகனத்தில் உலா வருகின்றனர்.

இவ்விழா வைகாசி விசாக நட்சத்திரத்தில் தொடங்குகிறது. விழா தொடங்குவதற்கு முன்னதாக மோதுகட்டுதல், வாஸ்து சாந்தி ஆகியவை நடைபெறும். பத்துநாள் வழாவில் பூமாரியம்மன் கோவில் பட்டர் செண்டை அடித்துக் கொண்டு வருவார். பத்து நாட்கள் காலையும், மாலையும் அட்டதிக் பாலகர்களுக்கு மட்டும் இவ்வாறு பேரிகை கொட்டி வருகின்றார்கள்.

**கொடியேற்றம்**

. கோவில் விழாக் காலங்களில் விழாவினைக் குறிக்கும் பொருட்டு, கொடியை உயர்த்துவதற்காகவும், கொடிமரம் பயன்படுகிறது. கொடிக்கம்பத்தில் காளை வாகனத்தில் இடபக்கொடி ஏற்றப்படுகிறது.

பத்துநாட்கள் திருவிழாவில், முதல்நாள் காலையில் இடப லக்கனத்தில் இடபக் கொடியேற்றுவர். அன்று இரவு இறைவனும், இறைவியும் கேடக வாகனத்தில் வீதி உலா வருகின்றனர்.

இரண்டாம் நாள் தீபாராதனை நடைபெறுகிறது. அன்று இறைவனும், இறைவியும் வெள்ளிக் கேடகத்தில் திருவீதி உலா வருகின்றனர். மூன்றாம் நாள் இறைவன் பூத வாகனத்திலும், அம்மன் அன்ன வாகனத்திலும் வருகின்றனர்.

நான்காம் நாள் மந்திர நீர் முழுக்காட்டும், மாலையில் தீபாராதனையும் நடைபெறுகிறது. அன்றும் வெள்ளிக் கேடகத்தில் திருவீதி உலா நடைபெறுகிறது. நான்காம் நாள் விழா, குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீன மண்டகப்படியாக நடைபெறுகிறது.

ஐந்தாம்நாள் அம்மன் தவத்திற்கு எழுந்தருளல் செய்கிறார். அன்று திருக்கல்யாணம் நடைபெறுகிறது. அன்று இரவு இறைவனும் இறைவியும் முறையே யானையிலும், பூப்பல்லக்கிலும் திருவீதி உலா வருகின்றனர்.

ஆறாம்நாள் விழாவின் போது வெள்ளி இடப வாகனத்தில் வீதி உலா நடைபெறும். ஏழாம் நாள் இறைவன் கைலாச வாகனத்திலும், அம்மன் சிம்ம வாகனத்திலும் உலா வருவர்.

ஏழாம் நாள் நடராசப் பெருமான் திருவீதி உலா வருகிறார். காலையில் கேடக வாகனத்திலும், இரவில் குதிரை வாகனத்திலும் எழுந்தருள்கின்றனர்.

ஒன்பதாம் நாள் தேர்த்திருவிழாவாகும். இறைவனும் இறைவியும் திருத்தேரில் உலா வருகின்றனர். பெரிய தேரில் இறைவனும், சிறிய தேரில் அம்மனும், அதற்குச் சிறிய தேரில் விநாயகரும் உலா வருகின்றனர். யானை (சிவகாமி) அலங்கரிக்கப்பட்டுத் தேருக்கு முன்னே வருகின்றது.

பத்தாம் நாள் சீதளிக்குளத்தில் தீர்த்தம் வழங்குதலும், இரவில் தெப்பமும் நடைபெறுகிறது. தெப்பத்தில் சோமாஸ்கந்தர், அம்மன், பிள்ளையார் ஆகியோர் பவனி வருகின்றனர். இறைவனைப் பூமியில் தரிசிக்க முடியாது என்பதினால், மீன்களின் வேண்டுகோளை அடுத்து, நீரில் இறைவன் எழுந்தருளுவதே தெப்பம் என்கின்றனர்.

**சயந்தன் திருவிழா**

இந்திரன் புதல்வன் சயந்தன் இங்கு வந்து சாபவிமோச்சனம் பெற்றதாகப் புராணங்கள் குறிப்பிடுகின்றன. சயந்தனை ஆடல்பாடல்களுக்குத் தெய்வமாகத் தமிழர் பண்டைக் காலத்தில் கொண்டிருந்தனர் என்ற மயிலை சீனி. வேங்கடசாமியின் கூற்று நோக்கத்தக்கது. ஆடல்பாடல்களின்

தெய்வமாகிய சயந்தகுமாரனுக்குத் தலைக்கோல் என்னும் கோலைப் போற்றினார்கள். சயந்தன் ஒவ்வொரு சித்திரை முதல் வெள்ளிக்கிழமையன்று இக்கோவிலுள்ள பைரவரை வணங்குவதாக நம்பப்படுகிறது. சித்திரை மாதம் முதல் வெள்ளிக் கிழமையன்று பைரவருக்கு சயந்தன் பூசை செய்யும் திருவிழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

அந்நாளில் பைரவர் சந்நிதியில் யாகம் வளர்த்து, அரசு, ஆல், பூவரசு, நாயுருவி, வன்னி, மா, அருகு, பலா ஆகிய இலைகளைக் கொண்டு வேள்வி நடைபெறுகிறது. பைரவர் உற்சவமூர்த்தியாகக் குதிரை வாகனத்தில் புறப்படுவார். அன்று ஒருநாள் மட்டுமே பைரவர் புறப்பாடு நிகழும். பைரவருக்கு அன்று சிறப்புப் பூசைகள் நடைபெறுகின்றன. பைரவருக்குப் புனுகு உகந்தது. வாசனைத் திரவியங்கள் பூசிக் கொண்டு பைரவர் சந்நிதிக்கு அருகில் யாரும் செல்வதில்லை.

**பிற திருவிழாக்கள்**

இக்கோவிலில் விநாயகர் சதுர்த்தி விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. மோதகம், நாவற்பழம் ஆகியன கொண்டு படையல் நடைபெறுகிறது.

புரட்டாசி நவராத்திரியில் அம்மனுக்கு இலட்சார்ச்சனை நடைபெறுகிறது. ஒன்பது நாளும் அம்மனைப் பல்வேறு விதமாக அலங்காரங்கள் செய்து பூசிக்கின்றனர். விசயதசமியன்று பாலசுப்பிரமணியர் குதிரை வாகனத்தில் வந்து அம்பு போடுகிறார்.

தீபாவளி அன்று அனைத்துக் கடவுளர்களுக்கும் தைலம் சார்த்திப் புத்தாடை அணிவிக்கப்படுகிறது. கார்த்திகைத் தீபத்தன்று சொக்கப்பனை

கொளுத்துதல் நடைபெறுகிறது. அன்று சந்திரசேகரர் எழுந்தருளுகிறார். மார்கழித் திருவாதிரையன்று நடராசருக்குச் சிறப்புப் பூசைகள் நடைபெறுகின்றன. அன்று மாணிக்கவாசகருக்குப் பரிவட்டம் கட்டுகிறார்கள். கேடகத்தில் அம்மனும் நடராசரும் திருவீதி உலா வருகின்றனர்.

தைமாதம் பொங்கல் விழாவின் போது கோவில் பணியாளர்களுக்கு ஆதீனத்தின் சார்பாகப் பொங்கல் பானை வழங்கப்படுகிறது. சிவராத்திரியன்று இரவு முழுவதும் பூசைகள் நடைபெறுகின்றன.

**திருத்தளிநாதர் கோவிலில் நடந்த முக்கிய நிகழ்வுகள்**

ஆய்வாளர் கள ஆய்வின் போது கோவிலில் நடந்த முக்கிய நிகழ்வுகள் பட்டியலிடப்படுகின்றன.

2013 செப்டம்பர் மற்றும் நவம்பர் மாதங்களில், இக்கோவிலில் சனி பிரதோச விழாக்கள் நடைபெற்றன. அதனை முன்னிட்டு அன்று மாலை 5 மணிக்குப் புனிதநீர் நிரப்பப்பட்ட கலசங்களில் வெண்பட்டுச் சுற்றப்பட்டு, பூக்களால் அலங்காரம் செய்து யாக பூசை வேள்வி நடைபெற்றது. தொடர்ந்து நந்தீஸ்வரருக்குப் பால், தயிர், பன்னீர், மஞ்சள், திருமஞ்சனம், விபூதி, சொர்ண அபிசேகம் மற்றும் யாக பூசையில் வைக்கப்பட்ட கலசங்களில் உள்ள புனித நீரால் நீராட்டு நடைபெற்றது. சிறப்பு தீபாராதனையும் நடைபெற்றது.

பின்பு நந்தீசுவரர்க்குப் பூக்களால் அலங்காரம் செய்யப்பட்டது. சிவனுக்கும் நீராட்டு, தீப ஆராதனைகள் நடந்தன. உற்சவர் அலங்கரிக்கப்பட்ட காளை வாகனப் பல்லக்கில், கோவிலின் உள் சுற்றில் மும்முறை வலம் வந்தார். அந்நிகழ்வில் ஆதீனக் கர்த்தாவும் கலந்து கொண்டார். 14.12.2013

அன்று நடைபெற்ற சனி மகா பிரதோசத்தன்று இறைவனும் இறைவியும் வெள்ளி காளை வாகனத்தில் வலம் வந்தனர்.

9.5.2014 அன்று சீதளி மேல்கரை சிவகாம சுந்தரி உடனாய ஆதித் திருத்தளிநாதர் கோவிலில், பரிவார மூர்த்திகள் பிரதிட்டை பூசை நடைபெற்றது. பரிவார மூர்த்திகளான விநாயகர், தட்சிணாமூர்த்தி, லிங்கேசுவரர், முருகன், வள்ளி, தெய்வானை, பிரம்மா, சண்டிகேசுவரர், துர்க்கை, ஆஞ்சநேயர், நவக்கிரகம், லட்சுமி, வில்வலிங்கம் ஆகிய கடவுள்களுக்கு பிரதிட்டை பூசை நடந்தது. இதனைத் தொடர்ந்து முதல், இரண்டாம் கால யாகசாலை பூசைகளும் நடந்தன. அச்சமயம் ஆதீன குருமுதல்வர் பொன்னம்பல அடிகளார் தலைமையில் சிறப்பு மகா அபிசேகம் நடைபெற்றது.

ஜுலை மாதம் சீதளிக் குளத்தில் முன்னோர்களுக்குத் தர்ப்பணம் செய்யும் நிகழ்ச்சி நடைபெற்றது. 26.7.2014 அன்று ஆடி அமாவாசை தினத்தன்று முன்னோர்களை நினைத்தும், பசுக்களுக்குத் தானம் செய்தும், சூரியனை வழிபட்டும் தர்ப்பணம் செய்தனர்.

29.10.2014 அன்று கந்தசஷ்டியை முன்னிட்டு கோவில் அருகே உள்ள சீரணி அரங்க மைதானம் முன்பு முருகப்பெருமான் சூரனை வதம் செய்யும் நிகழ்ச்சி நடைபெற்றது. இறைவன் திருவீதி உலா வந்தார். இந்நிகழ்வைத் திருப்பத்தூர் திருமுருகன் பேரவையினர் செய்திருந்தனர்.

17.11.2014 திங்கட்கிழமை சங்காபிசேக விழா நடைபெற்றது. கார்த்திகைத் திங்கள் முதல்நாள் சிவனுக்கு 108 சங்குகளில் பால் நிரப்பப்பட்டு நெற்குவியல்களில் சிவலிங்க வடிவில் அடுக்கப்பட்டுச் சிறப்புத்

தீபாராதனை காட்டப்பட்டது. அதனையடுத்து, ருத்ரஹோமம் நடத்தப்பட்டது. பின்னர் சிவலிங்க வடிவில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த 108 சங்குகளிலிருந்து மூலவரான திருத்தளிநாதருக்கு அஷ்டோத்ர சங்காபிசேகம் நடைபெற்றது. தொடர்ந்து சிறப்பு தீபாராதனை காட்டப்பட்டது. இந்நிகழ்ச்சி குன்றக்குடி ஆதீனம் சார்பாக நடைபெற்றது.

திருத்தளிநாதர் கோவிலில் யோக பைரவருக்குச் சம்பக சஷ்டி விழா 22.11.2014 அன்று தொடங்கியது. தொடர்ந்து 27.11.2014 வரை நடந்தது. இவ்விழா, முதல் நாள் காலை 9 மணிக்கு யாக வேள்வியுடன் தொடங்கியது. முதலில் விக்னேசுவர பூசையும், தொடர்ந்து புண்ணிய யாக பாஜனமும், 108 யாகஜாம ஹோமமும் அஷ்டபைரவ யாகமும் நடைபெற்றன. காலை 11.30 மணிக்குப் பூர்ணாகுதியும் பின்னர் மூலவரான யோக பைரவருக்குப் பால், தயிர், திருமஞ்சனம், இளநீர், சந்தனம், விபூதி, பன்னீர், பழங்களால் அபிசேகம் நடத்தபட்டுத் தீபாராதனை காட்டப்பட்டது. ஒரு மணிக்கு யோக பைரவர் வெள்ளிக் கவசத்தில் விபூதி அலங்காரத்தில் பக்தர்களுக்கு அருள்பாலித்தார். மாலை 5 மணிக்கு மீண்டும் விக்னேசுவர பூசையுடன் யாகவேள்வி தொடங்கியது. சந்தனக்காப்பு அலங்காரத்தில் யோக பைரவர் காட்சியளித்தார். இந்நிகழ்சியினைக் குன்றக்குடி ஆதீன மடமும், திருக்கோவில் சம்பக சஷ்டி குழுவினரும் செய்திருந்தனர்.

தினமும் ஆறுவேளையும் பதிகம் பாட ஓதுவார் ஒருவர் உள்ளார். காலையில் திருப்பள்ளியெழுச்சியும், பிறகு தேவாரம், அபிராமி அந்தாதி போன்ற பாடல்களைப் பாடுகிறார். மாலை வேளைகளில் பதிவு செய்யப்பட்ட தேவாரம், பக்திப் பாடல்கள் ஒலிபரப்பப்படுகின்றன.

ஆறுவேளையும் மேளம், நாதசுரம் வாசித்தல் நடைபெறுகிறது. யோக பைரவர் என்பதினால் தவம் கலையக் கூடாது என்பதற்காக அர்த்தசாமத்தில் பைரவருக்கு மேளம் கிடையாது.

**திருக்கோளக்குடி**

இத்திருக்கோவிலில் முறையே பொய்யா மொழியீசர் - மரகதவல்லி, சிவதருமபுரீசர் - சிவகாமவல்லி, ககோளபுரீசர் - ஆத்மநாயகி முதலான கடவுளர்களுக்கு நாள் வழிபாடும், சிறப்பு வழிபாடும் நிகழ்த்தப் பெறுகின்றன.

நாள் வழிபாடாக காலசந்தி, உச்சிக்காலம், சாயரட்சை, அர்த்தசாமம் என நான்கு காலப் பூசைகள் நடைபெறுகின்றன. சிறப்பு நாட்களில் ஆறுகாலப் பூசை நிகழ்வதும் உண்டு. இக்கோவிலில் கார்த்திகைத் தினத்தன்று மலை உச்சியில் உள்ள தூபியில் தீபம் ஏற்றுகின்றனர். கோவிலின் முன் சொக்கப்பன் கொளுத்துவர். இத்திருத்தலம் சிவாலயமாக இருந்தாலும், கார்த்திகைத் தினத்தன்று முருகனுக்குச் சிறப்பு வழிபாடு நிகழ்த்தப் பெறுகிறது.

ஏனைய கோவில்களைப் போன்றே இங்கும் பத்து நாட்கள் திருவிழா நடைபெறுகிறது. 9ஆம் நாள் தேர்த்திருவிழாவாகும். பௌர்ணமி தினத்தன்று கிரிவலம் (2கி.மீ.) வருகின்றனர். முதல் நாள் விழா கொடியேற்றத்துடன் தொடங்குகிறது. இரண்டாம் நாள் மயில் வாகனத்தில் சுப்ரமணியர் வள்ளி, தெய்வானையுடன் அமர்ந்த நிலையில் வீதி உலா வருகிறார். மூன்றாம் நாளன்று சிவபெருமானும் அம்பாளும் வெள்ளி வாகனத்தில் வீதி உலா வருகின்றனர். பத்து நாட்களும் இறைவன் வீதி உலா வந்து பக்தர்களுக்கு அருள் பாலிக்கிறார்.

நான்காம் நாள் விழா குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்திற்குரிய விழாவாகும். அன்று சிறப்புப் பூசைகள் நடைபெறுகின்றன. அன்று சப்பரத்தில் இறைவன் உலா வருகிறார். இந்நாளில் அடிகளாருக்குக் காவியில் பரிவட்டம் கட்டப்படுகிறது.

பத்தாம் நாள் தீர்த்தவாரி நடைபெறும். இங்குச் சுவையான சுனை இருப்பதால் தீர்த்தவாரி சிறப்பாக நடைபெறுகிறது. இங்குள்ள சுனைகளைச் சுற்றி இறைவன் ஊர்வலமாக வருகிறார்.

திருமஞ்சன நீராட்டு விழா ஆனி மாதம் நடைபெறுகிறது. மற்ற கோவில்களில் மார்கழி மாதம் திருவாதிரை நட்சத்திரத்தில் நடைபெறும் திருமஞ்சன நீராட்டு இக்கோவிலில் ஆனிமாதம் கேட்டை நட்சத்திரத்தில் நடைபெறுகிறது.

முன்பு வழிபாட்டின் போது மேளம், நாதசுரம், சங்கு, சேகண்டி வாசிக்கப் பெற்றன. தற்போது கோவிலில் வருமானம் குறைவின் காரணமாக இவை தவிர்க்கப்பட்டுள்ளன. வேதம் ஓதுவார், தேவாரம் பாடுவோர் தற்போது இல்லை.

சிறப்பு நாட்களில் ஆறுகாலப் பூசை நடைபெறும். இக்கோவிலில் முதலில் விநாயகருக்குப் பூசைகள் செய்யப்படுவதில்லை. இறைவன் இறைவியர்க்கே எப்போதும் முதல் பூசை நடைபெறுகிறது. பழமையான இக்குடைவரைக் கோவில் பூசை மரபையே இது காட்டுகிறது.

நான்கு காலப் பூசையிலும் தினப்படி சுத்த அன்னமே நைவேத்தியமாகப் படைக்கப்படுகிறது. சிறப்பு நாட்களில் மட்டும் சர்க்கரைப் பொங்கல், கலவைச் சாதம் ஆகியவை நைவேத்தியமாகப் படைக்கப்படுகின்றன.

**திருவிழாக்கள் (திருக்கார்த்திகை)**

கார்த்திகை மாதத்தில் வரும் பௌர்ணமி தினத்தன்று திருக்கார்த்திகைத் திருவிழா நடைபெறுகிறது. அன்று மலை உச்சியில் தீபம் ஏற்றுகின்றனர். கோவில் முன்பு சொக்கப்பனை கொளுத்துகின்றனர்.

**திருமஞ்சனத் திருநாள்**

திருக்கோளக்குடியில் நடைபெறும் தலையாய திருவிழாக்களில் ஆனிமாதம் கேட்டை நட்சத்திரத்தில் நடைபெறும் திருவிழாவே மிகச் சிறப்புடையது. இது மன்னர்களின் காலந்தொட்டு நடைபெறுவதாகக் கூறுப்படுகிறது. ஏனைய கோவில்களைப் போன்றே இங்கும் பத்து நாள் விழாவின் போது கொடியேற்றத்துடன் நடைபெறுகிறது.

திருமஞ்சனத் திருநாள் அல்லது ஊடல் உற்சவம் என்று இது அழைக்கப் பெறுகிறது. காலையில் இறைவனுக்கும் இறைவிக்கும் மஞ்சன நீராட்டு நிகழ்த்தப் பெறும். அப்பொழுது நடராசர், சிவகாமி அம்மன், மாணிக்கவாசகர் எழுந்தருளுவர்.

நடராசர், சிவகாமி அம்மனை விட்டுத் தனியாக எழுந்தருளியதுதான் ஊடல் உற்சவம் எனக் கூறப்பெறுகிறது. ஆனித் திருமஞ்சன நீராட்டு எனப்படும் இவ்ஊடல் உற்சவம் பெரும்பான்மையான கோவில்களில் மார்கழி மாதம் திருவாதிரை நட்சத்திரத்தில் நடைபெறும். திருக்கோளக்குடியில் ஆனி மாதம் கேட்டை நட்சத்திரத்தில் நடைபெறுகிறது. அதன் சிறப்புக் காரணம் அறியப்பெறவில்லை.

பத்தாம் நாள் விழாவாகத் தீர்த்தவாரி நடைபெறுகிறது. இங்குச் சங்கு, சக்கரச் சுனைகளைச் சுற்றி இறைவனை உலாவரச் செய்வர். பத்து நாள்

விழாவில் நான்காம் நாள் விழா ஆதீனக் கர்த்தாவின் தலைமையில் நடைபெறுகிறது. பத்து நாள் விழாவின் செலவுகளும் ஆதீன மடத்திலிருந்தே செய்யப்படுகிறது. தேர் செப்பனிடப்படாமல் இருப்பதால் தேர்த் திருவிழா தற்போது நடைபெறவில்லை.

திருவிழாவின் போது கடவுளர்களை வீதி உலா வரச்செய்கின்றனர். முதல்நாள் கேடகத்திலும், இரண்டாம் நாள் மயில், காளை வாகனத்திலும் வீதி உலா வருகின்றனர். மூன்றாம் நாள் காளை வாகனத்திலும், நான்காம் நாள் சப்பரத்திலும் வருகின்றனர். ஐந்தாம் நாள் பூப்பல்லக்கிலும், ஆறாம் நாள் அன்ன வாகனத்திலும், ஏழாம் நாள் ரிசப வாகனத்திலும் வீதி உலா நடைபெறுகிறது. எட்டாம் நாள் பூப்பல்லக்கிலும், ஒன்பதாம் நாள் தேரிலும் எழுந்தருள்வர். பத்தாம் நாள் கேடகத்திலும் வீதி உலா நிகழ்ச்சி நிகழ்த்தப் பெறுகிறது.

**தேனாட்சியம்மன் கோவில்**

சிறுதெய்வக் கோவிலாக இருந்து பெருந்தெய்வ நிலைக்கு உயர்ந்துள்ள இக்கோவிலில் ஆகம முறைப்படி வழிபாடுகள் செய்யப்படுகின்றன. இக்கோவிலில் காலசந்தி, உச்சிக்காலம், சாயரட்சை, அர்த்தசாமம் என நான்கு காலப் பூசைகள் நிகழ்த்தப் பெறுகின்றன.

மாத விழாக்களின் போது சிறப்புப் பூசைகளும் நடைபெறுகின்றன. தைமாதம் பொங்கல் விழா சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. அன்று கோவிலின் முன்பாகப் பொங்கல் வைத்துப் பூசை நடைபெறும். மறுநாள் மாட்டுப் பொங்கலின் போதும் சிறப்புப் பூசைகள் நடைபெறும். அன்று அவ்வூரில் மஞ்சுவிரட்டு நிகழ்வு நடைபெறும். தமிழ்நாட்டில் நடைபெறும்

மஞ்சுவிரட்டு நிகழ்ச்சிகளில் சிறாவயல் மஞ்சுவிரட்டு (ஏறுதழுவுதல்) முதன்மை பெறுகிறது.

மாசிமாதம் சிவராத்திரி விழா இங்குக் கொண்டாடப்படுகிறது. இந்நாளில் தேனாட்சியம்மனுக்கு அதிகளவில் தேனை அபிசேகம் செய்து வழிபடுவர். அம்மனுக்குப் புத்தாடை அணிவித்துத் தீபதூப ஆராதனை நிகழ்த்தி அப்பம், வடை, பாயாசம் செய்து படையல் இடுவர்.

சித்திரைமாத பௌர்ணமி தினத்தன்று அம்மனுக்குச் சிறப்பு அலங்காரப் பூசைகள் நடைபெறும். அன்று காலையில் பால்குடம் எடுத்து வருகின்றனர். மாலையில் பூச்சொரிதல் நடைபெறுகிறது. இரவு அம்மன் வீதிஉலா வருகிறார்.

புரட்டாசி மாதத்தில் நவராத்திரி விழா நடைபெறுகிறது. இந்நாளில் அம்மனுக்குச் சிறப்பு வழிபாடு நிகழ்த்தப் பெறுகிறது. அம்மனுக்குச் சந்தனக்காப்பு சாத்தப்படுகிறது. பின்பு தீபதூப ஆராதனை நிகழ்த்தி நைவேத்தியமாக அப்பம், வடை படைக்கப்படுகிறது.

ஐப்பசி மாதம் தீபாவளி தினத்தன்று அம்மனுக்குச் சிறப்புப் பூசைகள் நடைபெறுகின்றன. அம்மனுக்குப் பால், தயிர், இளநீர், சந்தனம், விபூதி, பஞ்சாமிர்தம், பன்னீர், திருமஞ்சனப் பொடி முதலிவைகளால் அபிசேகம் நடைபெறுகிறது. பின்பு புத்தாடை அணிவித்து, தீபதூப ஆராதனைகள் செய்து, நைவேத்தியமாகப் பொங்கல், வடை, அப்பம் முதலியன படைக்கப்படுகிறது.

கார்த்திகைத் தீபத்தன்று மற்ற கோவில்களில் நடைபெறுவது போன்று இங்கும் சிறப்புப் பூசைகள் நடைபெறுகின்றன. அன்று கடலைப்பருப்பு, கொழுக்கட்டை முதலியன படைக்கப்படுகின்றன.

பெருந்தெய்வ மரபில் உள்ள நைமித்திக பூசை தேனாட்சியம்மன் கோவிலிலும் நடைபெறுகிறது.

பத்துநாட்கள் நடைபெற்ற விழாக்கள் தற்போது ஒரு நாள் விழாவுடன் நிறைவு பெறுகிறது. இக்கோவிலக்கென்று இரண்டு தேர்கள் இருந்த போதிலும். தேர்த்திருவிழா தற்போது நடைபெறுவதில்லை.

**குன்றக்குடி சண்முகநாதன் திருக்கோவில்**

'திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளும், குன்றம் எறிந்த குமரவேளும் தலைச் சங்கமிருந்த தலைமைப் புலவர்கள்' என்று இறையனார் அகப்பொருள் உரை கூறும். முருகன் என்பது தமிழ்ச்சொல். அது இளமையும் இளமைத் தெய்வக் கோலத்தின் எழில் நலத்தையும் உணர்த்துவது. முருகன் வழிபாட்டைக் கூறுவது 'குமார தந்திரம்' என்ற ஓர் உபாகமம் ஆகும். நாள்தோறும் குமாரதந்திர முறைப்படி சண்முகநாதனுக்கு ஆறுகாலப் பூசைகள் நடைபெறுகின்றன.

**திருவிழாக்கள்**

சித்திரை மாதம் முதல் நாளன்று சண்முகநாதனுக்குப் பால் அபிசேகம் நடைபெறுகிறது. இதனைப் பால்பெருக்கு என்கின்றனர். அன்று காலையில் ஆதீன மடத்தில் இருக்கும் காளத்திநாதர் சந்நிதியில் பால்குடங்களை வைத்து வழிபாடு நடத்துகின்றனர். பின்பு அப்பால்குடங்களை எடுத்து மலைமேல் இருக்கும் இறைவனுக்கு அபிசேகம் செய்கின்றனர். அன்று சண்முகநாதனுக்குச் சிறப்பு அபிசேக, ஆராதனை நடைபெறுகிறது. இந்நிகழ்வு முன்பு கிடையாது. 45ஆம் பட்டம் ஆதீனக் கர்த்தா இந்நிகழ்வை ஏற்படுத்தியதாகக் கூறுகின்றனர்.

முருகனுக்கு விழாவெடுத்தல் நிகழ்வு பழமை வாய்ந்ததாகும். மணிமேகலையும், சுதமதியும் மலர்வனம் செல்லும் பொழுது புகார் நகர வீதியில் உள்ளோரின் செயல்களை விளக்கும் போது,

‘ஆலமர் செல்வன் மகன் விழாக் கால்கோள்

காண்மினோ வென்று கண்டு நிற்குநரும்’

என்று மணிமேலை கூறுகிறது. ஆலின் கீழமர்ந்த சிவபெருமான் மைந்தனாகிய முருகவேளின் விழா தொடங்கப் பெற்றதனைக் காண்பீராக என்று கூறுகிறது. சிவபெருமானின் மைந்தனாகிய முருகப் பெருமானுக்கு ஊர்தோறும் திருவிழா நிகழ்த்தும் வழக்கமும் முருகப் பெருமான் திருவிழா நாட்களில் தேரிலும் யானையிலும் எழுந்தருளும் காட்சியும் மேற்காட்டிய தொடரால் அறிய முடிகிறது.

சித்திரை மாதம் கார்த்திகைத் தினத்தன்று உற்சவமூர்த்தி வெள்ளி மயில்வாகனத்தில் வீதி உலா வருகிறார். அம்மாதம் சஷ்டி நாளில் இறைவனுக்குச் சிறப்புப் பூசைகள் நடைபெறுகின்றன.

வைகாசி மாதம் விசாகத் தினத்தன்று விசாக விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. அன்று காலையில் சண்முகநாதன் திருமடத்திற்கு எழுந்தருள்கின்றார். திருமடத்து நுழைவு வாயிலில் சீர்வரிசைகளுடன் ஆதீன முதல்வர் வரவேற்கிறார். அதன்பின் இறைவனைக் கொலுமண்டபத்தில் எழுந்தருளச் செய்கின்றனர். இம்மண்டபத்தில் இறைவனுக்கு அபிசேகம், தீப ஆராதனை நடைபெறுகிறது. அன்று தெற்குரத வீதியில் சமய இலக்கிய விழாவும், இசைக் கச்சேரியும் நடைபெறுகின்றன. அன்று இரவு இறைவன் வெள்ளி ரதத்தில் வீதி உலா வருகின்றார்.

11.6.2014 அன்று குன்றக்குடி சண்முகநாதன் கோவிலில் வைகாசி விசாகத் திருநாள் கொண்டாடப்பட்டது. அன்று காலை 7 மணிக்கு மலையிலிருந்து சண்முகநாதன் வள்ளி தெய்வானையுடன் கோவிலின் கீழ் வாசலுக்கு வெட்டிவேர் அணிந்து வந்தார். ஆதீன குருமுதல்வர் சீர்வரிசையுடன் மடத்திற்கு அழைத்துச் சென்றார். அங்குப் பழங்கள், மலர்களால் அலங்கரிக்கப்பட்ட கொலு மண்டப நீராழியில் சிறப்பு அலங்காரத்தில் இறைவன் அருள்பாலித்தார். 11 மணிக்குச் சந்தன அபிசேகம் நடைபெற்றது. இரவு 9 மணிக்கு வெள்ளி வாகனத்தில் இறைவன் வீதி உலா நடந்தது. அதைத் தொடர்ந்து இறைவன் மலைக்குச் சென்றார்.

ஆனி, ஆடி மாதங்களிலும் இறைவனை வீதிகளில் வலம்வரச் செய்கின்றனர். ஆடிக் கிருத்திகை அன்று திருப்படிப்பூசை நடைபெறுகிறது. அன்று மாலை பக்தர்கள் திருப்புகழ் முதலிய பாசுரங்களைப் பாடிக் கொண்டு, ஒவ்வொரு படியிலும் தீபம் ஏற்றுகின்றனர். அன்று இறைவனுக்குச் சிறப்பு அபிசேக, அலங்கார வழிபாடு நடைபெறுகிறது. இப்படிப்பூசை நிகழ்வும் 45ஆம் பட்டம் ஆதீன அடிகளாரால் நடைமுறைப்படுத்தப்பட்டதாகும். அன்று இரவு இறைவன் வெள்ளி மயில் வாகனத்தில் எழுந்தருள்கின்றார்.

ஆவணி மாதம் பிட்டுத் திருவிழா நடைபெறுகிறது. அன்று உழவாரப் பணிகள் மேற்கொள்ளப்படுகின்றன. 45ஆம் பட்டம் ஆதீன முதல்வர் மேற்கொண்ட நிகழ்வுகளில் இப்பிட்டுத் திருவிழாவும் ஒன்றாகக் கருதப்பெறுகிறது. அன்று இறைவனுக்குச் சிறப்பு அபிசேக, அலங்காரப் பூசைகள் நடைபெறுகின்றன.

ஐப்பசி மாதம் நடைபெறும் விழாக்களில் கந்தசஷ்டி விழா மிகவும் சிறப்பு வாய்ந்தது. ஆறுநாட்களும் இலட்சார்ச்சனை சிறப்பாக நடைபெறுகிறது.

ஐந்து மற்றும் ஆறாம் நாட்களில் இறைவன் வெள்ளிரதத்தில் எழுந்தருள்கிறார். சஷ்டியன்று சூரசம்மாரம் நடைபெறுகிறது. ஏழாம் நாளில் தெய்வானையுடன் திருக்கல்யாணம் நடைபெறுகிறது. இரவு தங்கரதத்தில் எழுந்தருள்கிறார்.

29.10.2014 அன்று குன்றக்குடி சண்முகநாதன் திருக்கோவிலில் கந்தசஷ்டி விழா நடைபெற்றது. அன்று சூரசம்மாரம் நடைபெற்றது. மலையில் இருந்து வேல் இறங்கும் நிகழ்ச்சியும், மாலையில் சண்முகநாதப் பெருமான் அன்னை சக்தியிடம் வேல் வாங்கும் நிகழ்ச்சியும் நடைபெற்றது. அதன்பின் வெள்ளிச் சப்பரத்தில் மயில் வாகனத்தில் வள்ளி-தெய்வானையுடன் வீதி உலா வந்தார். மாலை 6 மணிக்கு சந்நிதி முன்பாக சூரனை வதம் செய்யும் நிகழ்ச்சி நடைபெற்றது. பின்னர் மலைக்குச் சென்ற சண்முகநாதனுக்குப் பால், இளநீர், திரவியம் உள்பட பல்வேறு அபிசேகங்கள் நடைபெற்றன. இந்நிகழ்ச்சியினை ஆதீன குருமுதல்வர் பொன்னம்பல அடிகளார் தலைமையேற்று நிகழ்த்தினார்.

கார்த்திகை முதல் திங்கட்கிழமையன்று இறைவன் வெள்ளிக் கேடகத்தில் எழுந்தருள்கிறார். கடைசி திங்களன்று 1008 சங்காபிசேகம் நடைபெறுகின்றது. திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோவிலில் 108 சங்காபிசேகம் நடைபெறும். இது ஆதீனத்தால் நிகழ்த்தப்பெறும். மற்ற திங்கட்கிழமைகளில் சிறப்புப் பூசைகள் நடைபெறும். திருக்கார்த்திகையன்று இறைவன் கீழவீதியில் உள்ள கார்த்திகை மண்டபத்திற்கு எழுந்தருளி, மலைதீபம் காட்டி வெள்ளி மயில் வாகனத்தில் திருவீதி உலா வருகிறார்.

மார்கழி மாதம் கார்த்திகை நாளில் இறைவன் வெள்ளி மயில் வாகனத்தில் வீதிஉலா வருகிறார். திருவாதிரை பத்து நாட்களும் அதிகாலையில் பெண்கள் பாவை நோன்பு மேற்கொள்கின்றனர்.

குன்றக்குடி சண்முகநாதன் திருக்கோவிலில் தைமாதம் தைப்பூசத் திருவிழா பத்து நாட்கள் நடைபெறுகிறது. முதல் நாள் விழா கொடியேற்றத்துடன் தொடங்குகிறது. முதல் திருநாள் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீன மண்டகப்படியாகும்.

இரண்டாம் நாள் இறைவன் இரவு வெள்ளிக் கேடகத்தில் எழுந்தருளுகின்றார். மூன்று, நான்கு, ஐந்தாம் நாட்களிலும் வெள்ளிக் கேடத்திலேயே வீதி உலா வருகிறார். ஏழாம் நாள் தங்கரதத்தில் இறைவன் எழுந்தருள்கின்றார். எட்டாம் நாளில் வெள்ளி ரதத்தில் இறைவன் காட்சியளிக்கிறார்.

ஒன்பதாம் நாள் தேர்த்திருவிழாவாகும். ஊர் மக்கள் அனைவரும் சேர்ந்து தேர்வடம் பிடிக்கின்றனர். அன்றிரவு இறைவன் வெள்ளிக் கேடகத்தில் வீதி உலா வருகிறார்.

பத்தாம் நாள் தீர்த்தவாரி நடைபெறுகிறது. இறைவன் வையாபுரிக்கரைக்கு வெள்ளிக் கேடகத்தில் எழுந்தருளி, அங்குள்ள மண்டபத்தில் தங்கித் தீர்த்தம் வழங்குகின்றார். இதற்கு மயில் தீர்த்தம் என்று பெயர் வழங்கப் பெறுகிறது. அன்று பிற்பகல் அங்கிருந்து எழுந்தருளித் தேனாற்றங் கரைக்குச் சென்று தேனாற்றுத் தீர்த்தம் வழங்கிப் பழனியாயி ஊருணிக் கரைக்கு எழுந்தருள்கின்றார். அன்று இரவும் வெள்ளிக் கேடகத்தில் வீதி உலா நடைபெறுகிறது.

மாசிமாதம் கார்த்திகைத் திங்களில் இறைவன் வெள்ளி மயில் வாகனத்தில் வீதி உலா வந்து காட்சியளிக்கிறார்.

பங்குனி உத்திரப் பெருவிழா சிறப்பாக நடைபெறுகிறது. பங்குனி உத்திர விழாவிற்குப் பங்குனிக் கார்த்திகை நாளில் கொடியேற்றம் நிகழ்கிறது. முதல்நாள் வெள்ளிக் கேடகத்தில் எழுந்தருள்கின்றார். பங்குனித் திருவிழா பத்து நாட்கள் நடைபெறுகிறது. ஒவ்வொரு நாளும் இறைவன் வீதி உலா வருகிறார்.

ஐந்தாம் நாள் இறைவன் பூப்பல்லக்கில் எழுந்தருள்கின்றார். ஆறாம் நாள் பச்சைப்பட்டு உடுத்தி ருத்திராட்சக் கேடகத்தில் பவனி வருகிறார். ஏழாம் நாள் வெட்டிவேர் சாத்தி, தங்கரதத்தில் உலா வருகிறார். எட்டாம் நாள் வடக்கு வையாபுரியில் தெப்பத்தில் எழுந்தருளி அருட்காட்சி வழங்குகிறார்.

பங்குனித் தேர்த்திருவிழாவின்போது ஆதீன மகா சந்நிதானம் தொடங்கி வைக்கிறார். தேரில் எழுந்தருளியுள்ள இறைவனுக்குத் தீபாராதனை நடைபெறுகிறது. அதன்பின் காளாஞ்சி, விபூதி வழங்கப்படுகிறது. இறைவன் தேர் விட்டிறங்கி இரவு வெள்ளிக் கேடகத்தில் எழுந்தருள்கின்றார்.

பத்தாம் நாள் உத்திரத்திருநாளாகும். இன்று அக்கினிக் காவடிகள், சர்ப்பக் காவடிகள், சேவற் காவடிகள், மச்சக் காவடிகள், பறவைக் காவடிகள், பால்காவடிகள், மயில் காவடிகள் எனப் பலவகையான காவடிகள் ஆயிரக் கணக்கில் வருகின்றன. நண்பகலில் உத்திரத் தீர்த்த விழா நிகழ்கிறது. அன்றிரவு இறைவன் மயிலாடும் பாறைக்கு எழுந்தருள்கின்றார்.

**முருக வழிபாட்டில் நாட்டுப்புற மரபுகள்**

முருக வழிபாட்டில் நாட்டுப்புற மரபுகள் மிகுதியாகத் தென்படுகின்றன. முருகக் கடவுளைத் தமிழ் மண்ணில் தோன்றிய இறையாகக் கருதுவதால் மண்ணின் மரபுகளாகப் பல மரபுகள் முருக வழிபாட்டில் காணக் கிடக்கின்றன.

தொல்காப்பியர் குறிஞ்சிநிலத் தெய்வமாகச் சேயோனைக் குறிப்பிடுவர். சேயோன் எனப்பெறும் குறிஞ்சிநிலத் தெய்வம் தமிழக மண்ணில் உருவான தெய்வம் என்பது பெறப்படுகிறது.

தமிழ் மண்ணுக்கே உரிய வெறியாடலில் வேலன் களம் அமைத்தலைச் சங்கப் பாடல்கள் சுட்டுகின்றன.

முருகன்-வள்ளியினைச் சிற்றூர் மக்கள் வள்ளி திருமணம் எனப் பெயரில் வள்ளிக் கூத்தின் வாயிலாக மட்டுமே அறிவர். வள்ளி என்ற பெயருடைய குறமகளை வேலன் வேட வடிவிலும், விருத்தன் (வயோதிகன்) வேடத்திலும் கவர்ந்து திருமணம் புரிந்து கொண்ட கதை கர்ண பரம்பரைக் கதைகளில் ஒன்றாகும்.

குறத்தியாகிய நாட்டுப்புறப் பெண்ணை வேலவன் மணந்ததாக வருவதால் நாட்டுப்புற மரபுகளை அடியொற்றிய கதையே முருகன் திருமணத்தில் அடித்தளமாகிறது. எனவே, தமிழ்மண் தந்த குறிஞ்சிக் கடவுளான முருகன், குறிஞ்சிவாழ் குறவர் குலத்தில், தமிழ் அகத்திணை மரபுப்படி, வள்ளியை மணப்பதாக வரும் பகுதி புராண, இதிகாசங்கள் சுட்டாத, பண்டை இலக்கியங்களும், நாட்டுப்புறக் கதைகளும் சுட்டுகின்ற பகுதி என்பது பெறப்படுகிறது.

இன்றைக்குப் புகழ்பெற்ற நாட்டுப்புறக் கலைவடிவமாகக் கருதப்படுவது காவடி ஆட்டம். மலை மேல் உறைகின்ற முருகனை ஏத்தும் பக்தர்கள் தம் தோள் மீது காத்தண்டு தாங்கிப் படையல் பொருட்களைச் சுமந்து சென்ற நிலை, காலப்போக்கில் கலைவடிவம் பெற்று ஓர் ஆட்டமாக உருவெடுத்தது.

மலை மேல் ஏறுங்கால் கைகளால் பொருள்களைத் தூக்கிக் கொண்டு செல்வதைவிடத் தோளில் சுமந்து செல்வது எளிது. இரு தோள்களிலும் தண்டு படருங்கால் சுமை தெரியாது. எனவே மலையின் உச்சியிலிருக்கும் முருகனுக்கான பலிப் பொருட்களை இவ்வாறு மரத்தண்டின் இருபுறமும் தொங்கவிட்டபடி, அத்தண்டைத் தோள்களில் ஏந்தி மலையேறினர்.

நெடுந்தொலைவு, பளு இரண்டையும் மறக்க வேண்டி, பாடல்களைப் பாடிய வண்ணம் காவடி சுமந்தனர். மலைமீது ஏறுவார் குன்றின் உச்சியில் உள்ள குமரனை ஏத்துவதாகப் பாடல்களைப் பாடினர். இது பின்னர் காவடிச்சிந்து என்றாயிற்று. தொழிலாகத் தொடங்கிய காவடிச் சுமப்பு சடங்காக மாறி வழிபாடாக உருமாறியது. காவடியின் வடிவங்களும் மாற்றம் பெற்றன. காவடி முருக வழிபாட்டின் ஒரு பகுதியாக அமைந்துள்ளது.

மக்கள் மன்றில் முருகன், அவனுடைய தோழர்கள் என்பவர்களாக ஒரு சாரார் அமர்ந்திருப்பர். நேர் எதிரில் பெரிய அளவில் சூரன் உரு அமைக்கப்பட்டிருக்கும். தலையை மட்டும் மாற்றி மாற்றியமைத்து மூன்று அரக்கர்களை முருகன் துண்டாடுவதாக நிகழும் கலை நிகழ்வு சூரசம்மாரம் எனப்படும். நாட்டுப்புற மரபுகளை உள்வாங்கிய வழிபாட்டுப் பகுதியாகச் சூரசம்மார நிகழ்வைக் கருத வேண்டியுள்ளது. சூரன் வேற்றுருக் கொண்டபோது அதனை அறிந்த முருகன் அலைகளையே அரங்கமாகக் கொண்டு துடி கொட்டியாடியது துடிக்கூத்து எனப்படும்.

அம்மன் ஆலயங்களில் நிகழும் தீமித்தல் வழிபாடு குறிக்கத்தக்கது. கலப்புகள் என்பது வழிபாட்டில் தவிர்க்க இயலாதது. அதனுள் ஒன்றாக அக்கினிக் காவடியைச் சுட்டலாம். மறுதலையாகப் பால் காவடி என்பதும் முருகன் வழிபாட்டின் மரபாயிற்று.

தமிழரிடையே காணப்பெறும் தொன்மையான வழிபாட்டில் முருக வழிபாடும் ஒன்று. வேலன் வெறியாட்டு, முருகன் கோவில்களுக்கே உரிய காவடி இன்று நாட்டுப்புறக் கலைவடிவில் இறைவனை ஏத்துவதாக உருமாறியுள்ளது.

**தொகுப்புரை**

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்திற்கு உட்பட்ட கோவில்களில் காமிக, காரண ஆகமங்களின் வழி பூசைகள் நடைபெறுகின்றன. குன்றக்குடி கோவிலில் திருவனந்தல், விளாப்பூசை, காலசந்தி, உச்சிக்காலம், சாயரட்சை, அர்த்தசாமம் என்ற ஆறுகாலப் பூசைகளும், திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோவிலில் ஐந்து காலப்பூசைகளும் நடைபெறுகின்றன.

திருக்கோளக்குடி மற்றும் தேனாட்சியம்மன் கோவில்களில் நாள் வழிபாடாக காலசந்தி, உச்சிக்காலம், சாயரட்சை, அர்த்தசாமம் என நான்கு காலப் பூசைகள் நடைபெறுகின்றன.

பிரான்மலைக் கோவிலில் கொடுங்குன்றநாதருக்கு ஆறுகாலப் பூசைகளும், மங்கைபாகருக்கு நான்கு காலப் பூசைகளும் நடைபெறுகின்றன.

மங்கைபாகர் உடனாய தேனம்மைக்கு நீரால் அபிசேகமும் செய்வதில்லை; தீபம் காட்டப்படுவதில்லை. கடவுளர்களின் பாதத்தின் கீழுள்ள லிங்கத்திற்குத் தான் நீரால் அபிசேகம் நிகழ்த்தப்படுகிறது. அதற்குப் பதிலாக சாம்பிராணித் தைலம், புனுகு போன்ற தைலங்களால் அபிசேகம் நடைபெறுகின்றன.

திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோவிலிலும், பிரான்மலை கொடுங்குன்றநாதர் கோவிலிலும் சித்திரை மாதம் ஜெயந்தன் பூசை விழாவும்,

ஆவணி மாதம் பிட்டுத் திருவிழாவும், தைமாதம் சுனை விழாவும் கொண்டாடப்படுகின்றன.

சிறப்புப் பூசைகள் மற்றும் நவராத்திரி, சிவராத்திரி, பொங்கல் விழா போன்ற விழாக்கள் ஐந்து கோவில்களிலும் நடைபெறுகின்றன.

இறைவன், இறைவி வீதி உலா வருகின்ற நிகழ்ச்சிகள் நடக்கின்றன. ஐந்து கோவில்களிலும் செப்புத் திருமேனிகளாக உற்சவ மூர்த்திகள் இருக்கின்றன.

வைகாசி விசாகம், கந்தசஷ்டி, தைப்பூசம் போன்ற விழாக்கள் குன்றக்குடி சண்முகநாதன் கோவிலிலும், திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோவிலிலும் சிறப்பாக நடைபெறுகின்றன. இந்த இரண்டு கோவில்களில் மட்டுமே யானைகள் உள்ளன.

முல்லைக்குத் தேரீந்த பாரி விழா, பிரான்மலை கொடுங்குன்றீசர் கோவிலில் மட்டுமே தமிழ் இலக்கிய விழாவாகக் கொண்டாடப்படுகிறது.

திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோவிலிலும், பிரான்மலை கொடுங்குன்றநாதர் கோவிலிலும் பைரவருக்குச் சிறப்புப் பூசைகள் நடைபெறுகின்றன.

திருக்கோளக்குடி, தேனாட்சியம்மன் கோவில்கள் (வருவாய் குறைவின் காரணமாக) தவிர்த்த ஏனைய கோவில்களில் பத்து நாட்கள் விழா கொண்டாடப்படுகிறது. இந்த இரண்டு கோவில்களிலும் தேர்கள் ஓடா நிலையில் உள்ளன.

குன்றக்குடி சண்முகநாதன் கோவிலில் கார்த்திகை கடைசித் திங்களன்று 1008 சங்காபிசேகம் நடைபெறுகின்றது. திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோவிலில் 108 சங்காபிசேகம் நடைபெறுகின்றது.

ஆனித் திருமஞ்சன நீராட்டு எனப்படும் ஊடல் உற்சவம் பெரும்பான்மையான கோவில்களில் மார்கழி மாதம் திருவாதிரை நட்சத்திரத்தில் நடைபெறும். திருக்கோளக்குடியில் ஆனி மாதம் கேட்டை நட்சத்திரத்தில் நடைபெறுகிறது. அதன் சிறப்புக் காரணம் அறியப்பெறவில்லை.

ஐந்து கோவில்களின் சிறப்புப் பூசைகளில் குன்றக்குடி ஆதீன குருமுதல்வர் கலந்து கொண்டு சிறப்பிக்கின்றார். இவர்களுக்கென்று தனி மண்டகப்படி ஐந்து கோவில்களிலும் இருக்கின்றன.

ஐந்து கோவில்களிலும் முருகனுக்கென்று சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன.

ஐந்து கோவில்களிலும் புரட்டாசி மாதம் நவராத்திரி விழாப் பூசைகள் சிறப்பாக நடைபெறுகின்றன. ஆயுத பூசை, சரசுவதி பூசை, விசயதசமி, அம்பு எய்தல் போன்ற சமயங்களில் சிறப்புப் பூசைகள் நடைபெறுகின்றன.

குன்றக்குடி சண்முகநாதன் கோவிலில் மட்டுமே தைப்பூசத்தன்று காவடி எடுக்கப்படுகிறது.

## சான்றெண் விளக்கம்

1. அ.அறிவுநம்பி, பல்துறைத் தமிழ், (க.வெள்ளைவாரணன். தமிழிலக்கிய வரலாறு. ? தொல்காப்பியம், பக்.114-115) ப.32.
2. முனைவர் து. தியாகராஜன், சிறுதெய்வ வழிபாட்டில் நாட்டுப்புறக்கூறுகள் ப. 1.
3. மா. இராசமாணிக்கம், வழிபாடு, ப. 62.
4. வ.சு. செங்கல்வராய பிள்ளை, திருவாசக ஒளிநெறிக் கட்டுரை, ப. 310.
5. தா.ம.வெள்ளைவாரணம், திருமுறைகளில் வழிபாட்டியல், திருக்கோவில் கருத்தரங்கம் ஆய்வுக்கோவை, ப.142.
6. க.மோகன், பொன்னான அடிகளார், ப.88.
7. மேலது, ப.76.
8. தா.ம.வெள்ளைவாரணம், திருமுறைகளில் வழிபாட்டியல், திருக்கோவில் கருத்தரங்கம் ஆய்வுக்கோவை, ப.142.
9. க.மோகன், பொன்னான அடிகளார், ப.88.
10. கோ.மு.முத்துசாமிபிள்ளை, கோயிற் களஞ்சியம், பக்.146?147.
11. நாராயணசுவாமி, சிவாலயத் திருமேனிகள், ப.432.
12. மேலது, ப.433.
13. மேலது, ப.433.
14. மேலது, ப.442.
15. கலி.83:14-15.
16. அகம்.1:115.
17. குறுந். 41:1-2.
18. கா.மாரிமுத்து (தொ.ஆ), திருப்புத்தூர் அருள்மிகு ஸ்ரீதிருத்தளிநாதர் ஆலயத் திருத்தல வரலாறு, ப.25.

குறிப்பு: தகவலாளிகள் அளித்த பேட்டிகள் (பின்னிணைப்பில் காண்க).

## இயல் - 5

## திருமடத்தின் நிருவாகம்

திருக்கோவில்களின் வளர்ச்சியில் அதன் நிருவாகம் முதன்மை பெறுகிறது. பல கோவில்கள் சிதலமடைந்து இருப்பதற்கு, அதன் நிருவாகயின்மை நிலைமையே காரணமாகும். பால் நினைந்தூட்டும் தாயினைப் போல, நிருவாகம் எப்போதும் விழிப்புடன் செயல்படுதல் வேண்டும். நிருவாகம் என்பது வெறும் பிரச்சாரம் அல்ல பதவிகளை வகிப்போர் கூறுகிற நல்ல யோசனைகள் சமுதாயத்திற்குத் தேவை. அதே சமயம் அதை நிறைவேற்றும் பெரிய பொறுப்புகளில் உள்ளவர்கள், அந்தக் கருத்தை உள்வாங்கி, அதற்கான நிர்வாகச் சுமையை ஏற்று நிறைவேற்றினால்தான், அது கடைசி நபர் வரை சென்றடையும். அவ்வகையில் ஐந்து கோவில்களை நிருவகிக்கும் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்தின் நிருவாகம் பற்றி விளக்குவதாக இவ்வியல் அமைகிறது.

### ஆதீனத் தோற்ற வளர்ச்சி

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத் திருமடம் தெய்வசிகாமணி சிவாச்சாரியாரால் கி.பி.1310ஆம் ஆண்டு நிறுவப்பட்டது. அதன்பின் 45 ஆதீனக்கர்த்தாக்கள் இம்மடத்தை ஆட்சி செய்துள்ளனர். தற்போது 46ஆம் ஆதீனத் தலைவராகப் பொன்னம்பல அடிகளார் உள்ளார். குன்றக்குடி உட்பட ஐந்து கோவில்கள் அவரின் நேரடி நிருவாகத்தின் கீழ் உள்ளன. இக்கோவில்கள் அனைத்தும் இந்து அறநிலையத் துறையினரின் தணிக்கைக்கு உட்பட்டதாகும்.

திருவண்ணாமலையில் திருமடம் ஆரம்பித்து நடைபெற்றுக் கொண்டிருந்த காலத்தில் 17ஆவது குருமூர்த்தி நாகலிங்க தேசிகர், திருத்தலப்

பயணமாக இராமநாதபுரம் மாவட்டம் திருச்சுழியலுக்கு வந்திருந்தார். அப்போது இராமநாதபுரம் மன்னர் சேதுபதி தேசிகரைச் சந்தித்து, இப்பகுதியில் தங்கி இறைப்பணி ஆற்ற வேண்டுமாறு கேட்டுக் கொண்டார். அதன் பயனாகப் பிரான்மலையில் திருமடம் உருவாயிற்று. "பாண்டிய நாட்டில் தேவார பாடல் பெற்ற 16 கோவில்களில் சேதுநாட்டைச் சேர்ந்த திருச்சுழியல், திருவாடானை, காளையார்கோவில், திருப்புத்தூர், திருக்கொடுங்குன்றம், இராமேசுவரம் ஆகிய திருக்கோவில்களும் சிறப்புடன் இயங்குவதற்கான ஏற்பாடுகளையும் இந்த மன்னர்களே செய்துள்ளனர்"(1) என்ற கருத்து, சேதுபதி மன்னர்கள் இறைப் பணி ஆற்றியதை உறுதிப்படுத்துகிறது. பிரான்மலையில் இருந்த திருமடம் சிறிது காலத்திற்குப் பிறகு, 31ஆம் பட்ட ஆதீனத் தலைவரின் காலத்திலிருந்து தற்போது வரை குன்றக்குடியில் இயங்கி வருகிறது.

**நிருவாகம் - மேலாண்மை**

Administration என்பதை நிருவாகம் என்றும், Management என்பதை மேலாண்மை என்றும் குறிப்பிடுகிறார்கள். இரண்டுக்கும் இடையே சில அடிப்படை வேறுபாடுகள் உள்ளன. Administriation எனும் போது, நிறுவனத்தின் உரிமையாளர்கள், பணியாளர்கள் அல்லது பங்குதாரர்களைக் குறிக்கிறது. அதாவது முதலீடு செய்து லாபங்களை எடுத்துக் கொள்வது நிருவாகம். திட்டமிடுதல், கட்டுப்படுத்துதல், வரவு செலவு திட்ட அறிக்கை நிர்ணயித்தல், ஊழியர்களின் நலனைப் பாதுகாத்தல் ஆகியவை நிருவாகத்தைச் சார்ந்தவை.

மேலாண்மைப் பிரிவில் உள்ளவர்கள் தங்கள் திறமைகளை நிறுவன முன்னேற்றத்திற்குப் பயன்படுத்துபவர்கள். அதற்காக ஊதியம் பெறுவார்கள். பிற ஊழியர்களை ஊக்கப்படுத்துதல், நிருவாகம் எதிர்பார்க்கும்

விளைவுகளைக் கொண்டு வருவதற்கும் இவர்கள் முயல வேண்டும். சுருக்கமாக மேலாண்மை என்பது நிருவாகத்தின் நேரடிக் கட்டுப்பாட்டில் உள்ளது. ஒரு நிறுவனத்தின் குறிக்கோள்களையும் கொள்கைகளையும் வரையறுப்பது Administriation. அவற்றை நடைமுறைப் படுத்துவது Management ஆகும்."(2)

**ஆதீன முதல்வரின் நிருவாகம்**

நிருவாக இயலின் முதல் உச்சரிப்பே மனிதன்தான் (Man is the first syllable in management) என்பது நிருவாக இயல் கோட்பாட்டின் அடிப்படைக் கருத்தாகும். அந்த வகையில் நிருவாகத்திற்கான நிருவாகியின் தேர்வு சிறப்பாக அமைய வேண்டும். அவ்வகையில் இம்மடத்தினையும், அதற்குட்பட்ட அனைத்துக் கோவில்களையும் பொன்னம்பல அடிகளார் சிறந்த முறையில் நிருவாகம் செய்து வருகிறார்.

திட்டமிடுதல் என்பது மேலாண்மையின் முதற் கோட்பாடாகும். அவ்வகையில் நிருவாகத் தலைமையும், அதன் பணியாளர்களும் திட்டமிடுதலோடு செய்து வருகின்றனர். அவர்களின் திட்டமிடுதலுக்கு உதாரணமாக ஐந்து கோவில்கள் புனரமைக்கப்பட்டு வருதலைக் கூறலாம். ஒரே நேரத்தில் அனைத்துக் கோவில்களுக்கும் குடமுழுக்கு நடத்தாமல், ஒவ்வொரு கோவிலாகத் திட்டமிட்டு, குடமுழுக்கு நடத்தி வருகிறார்கள். அண்மையில் 19.3.2014 அன்று குன்றக்குடி சண்முகநாதப் பெருமான் திருக்கோவிலக்குக் குடமுழுக்கு நடத்தியது குறிப்பிடத்தக்கது.

நிருவாகத் தலைமைக்குக் கலந்தாய்வு (Counsiling Method) முறை இன்றியமையாத ஒன்றாகும். திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோவிலின் தெப்பக்குளமான சீதளிக்குளத்தைச் சீரமைப்பதற்கு, அடிகளார்

பொதுப்பணித்துறை பொறியாளர்களுடனும், ஊர் மக்களுடனும் கலந்தாலோசித்து செப்பனிட்டதை ஆய்வாளர் உடனிருந்து கவனித்தது குறிப்பிடத்தக்கதாகும். திருப்பத்தூர் திருத்தளிநாதர் கோவிலக்கு ரூ.25 இலட்சம் செலவில் நிலையான மரத்தெப்பம் வடிவமைக்கப்பட்டது. ஆதீன முதல்வர் கார்காத்த வெள்ளாளர் உறவின்முறை சார்ந்த மண்டகப்படியார்களுடன் கலந்தாலோசித்து, ரூ.25 இலட்சம் செலவில் மரத்தெப்பம் உருவாக்கப்பட்டது.

தமிழ்நாட்டில் நெல்லை, மதுரை, சிவகங்கை, தஞ்சை மாவட்டங்களில் மூன்று புண்ணிய விடுதிகளும், இரண்டு பாலர் பள்ளிகளும், இரண்டு தொடக்கப் பள்ளிகளும், ஆறு இடைநிலைப் பள்ளிகளும், ஐந்து உயர்நிலைப் பள்ளிகளும், திருநெல்வேலி மாவட்டத்தில் பாபநாசத்தில் திருவள்ளுவர் கலைக் கல்லூரியும் இந்த ஆதீன நிருவாகத்தின் கீழ் இயங்கி வருகின்றன.

**சொத்துக்கள்**

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீன குருமுதல்வர்கள் சிறப்பாக நிருவாகம் நடத்தினாலும், 45ஆவது குருமுதல்வர் தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் (தவத்திரு குன்றக்குடி அடிகளார்) காலத்தில் கோவில்களும், மடத்தின் சொத்துக்களும் குறிப்பிடத்தக்க வகையில் வளர்ச்சி அடைந்துள்ளன. அவர் பொறுப்புக்கு வருவதற்கு முன்னர் 45 கிராமங்களும் அவற்றில் ஒன்னேகால் இலட்சத்துக்கும் மேற்பட்ட ஏக்கர் நிலங்கள் இருந்தன. அப்போது குன்றக்குடி சண்முகநாதப் பெருமான் திருக்கோவிலின் மொத்த வருமானம் ரூ.1,39,000 இருந்தது. ஜமீன் இனாம் ஒழிப்புக் காலத்திற்குப் பின்னர் இத்திருக்கோவிலக்கு ஓ.சிறுவயல், நேமம், குன்றக்குடி, அரிபுரம், பலவான்குடி, சாலி, கே.ஆத்தங்குடி ஆகிய

கிராமங்களில் இருந்து நன்செய் ஏக்கர் 57, 86 சென்ட்டும், புன்செய் ஏக்கர் 209, 58 சென்ட்டும் மீதமிருந்தன. அவரின் சீரிய முயற்சியின் விளைவாக பயன்தரு மரங்கள் அபிவிருத்தித் திட்டத்தின் வாயிலாகச் சொத்துக்கள் மடத்திற்குச் சேர்ந்தன.

**செலவினங்கள்**

கோவிலக்கென பல செலவினங்கள் உள்ளன. அவற்றில் ஒரு வருடம் முழுமைக்கும் ஆகும் செலவாக, தினப்பூசைச் செலவுகளும் திருவிழாவின் போது செலவிடப்படும் செலவினங்களும் கோவில்களையே சேரும். கால்நடை பராமரிப்பு, வாகனங்கள் பாரமரிப்பு, தளவாடங்கள் பராமரிப்பு, பாத்திரங்கள் பராமரிப்புச் செலவினங்களும் இதில் அடங்கும்.

கோவில் பணியாளர்களுக்கு மாதந்தோறும் ஊதியம் வழங்குவதற்கு அதிகம் செலவு செய்யப்படுகிறது. குருக்கள், செயலர், வயிராவி, பரிசாரகர், பிராமணப்பிள்ளை, திருமுறை ஓதுவார், மெய்க்காவல், பரிவட்டம், நந்தவனம், கைவிளக்கு, திருச்சன்னம், மணி அடித்தல், திருவலகு, வேளார், பாத்திரம் விளக்குபவர், மேளம் அடிப்பவர், தோட்டக்காரர், யானைப்பாகன் ஆகியோர் பணிபுரிகின்றனர். இவர்களில் குருக்கள், வயிராவி, கைவிளக்கு, ஓதுவார், வேளார் ஆகியோர்க்கு நிலங்கள் மானியங்களாகக் கொடுக்கப் பெற்றுள்ளன.

**குத்தகைச் சாகுபடி நிலங்கள்**

திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோவிலின் நிலங்கள் குத்தகைக்கு விடப்பட்டுள்ளன. அதில் நஞ்சை நிலங்கள் 62 ஏக்கர், 95 சென்ட். புஞ்சை நிலங்கள் 20 ஏக்கர், 07 சென்ட். சி.ஆர் மனை 20 ஏக்கர், 95 சென்ட். குத்தகைக்காரர்களின் எண்ணிக்கை மொத்தம் 141 ஆகும்.

இத்திருமடத்தின் வளர்ச்சிக்காகப் பிரான்மலைப் பகுதியில் மாணிக்கவல்லி, அபிராமவல்லி, சுவர்ண வல்லி, அமிர்தவல்லி, மரகதவல்லி என்னும் ஐந்து தோப்புகள் வாங்கப்பட்டுள்ளன. அதிலிருந்தும் வருவாய் கிடைக்கின்றன.

திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோவிலில் சுவாமி தேர், அம்மன் தேர், விநாயகர் தேர், சகடை, கைலாச வாகனம், பூத வாகனம், சிம்ம வாகனம், யானை வாகனம், அன்னவாகனம், குதிரைவாகனம், சிறிய குதிரை வாகனம், மூசிகவாகனம், நடராசர் வாகனம், அம்மன் கேடகம், சுப்பிரமணியர் கேடகம், விநாயகர் கேடகம், சண்டிகேசுவரர் கேடகம், அம்மன் பல்லக்கு, அம்மன் ஊஞ்சல், டோலி அம்மன் பல்லக்கு, பள்ளியறைப் பல்லக்கு, ரிசப வாகனம், விநாயகர் சிவிகைப் பல்லக்கு, பிரதோச ரிசப வாகனம், ஆயக்கால் ஆகியவையும் கோவிலின் சொத்துக்களாக உள்ளன.

**திருக்கொடுங்குன்றம்**

இக்கோவிலின் செயலாளர் (பேஷ்கார்) கோவிலின் மேலாண்மை பொறுப்பு வகிக்கிறார். தினந்தோறும் பூசைகள் நடைபெறவும், தேவையான பொருட்களைச் சேகரித்து வைத்துக் கொள்வதும் மணிக்காரரின் பணியாகும். கோவிலின் தங்க நகைகள், வெள்ளிப் பொருட்கள் ஆகியவை மணியக்காரரின் பொறுப்பில் விடப்பட்டுள்ளது. சீட்டு மணியக்காரர் விழாக் காலங்களில் அர்ச்சனைச் சீட்டு விற்பனை செய்து, அதிலிருந்து கிடைக்கும் வருவாய்க்குப் பொறுப்பாவார்.

பூசை வேளைகளில் பட்டருக்கு உதவி புரிபவர் பரிசாரகர் என்பவராவர். பூசைக்குத் தேவையான தண்ணீர், திருமஞ்சனத்திற்கு வேண்டிய பொருட்கள் அனைத்தும் சேகரித்துத தருகின்ற பணியினைச் செய்கின்றார்.

மடப்பள்ளியின் பொறுப்பாளர் சுயம்பாகம். இவரே நைவேத்தியத்திற்கு வேண்டிய அனைத்து ஏற்பாடுகளையும் கவனிப்பார்.

கோவில் நந்தவனத்தைப் பராமரிப்பதற்கென்றே பணியாளர்கள் இருக்கின்றனர். நந்நவனத்தில் பூக்கும் மலர்களைப் பறித்துப் பூசைக்குத் தருவது இவர்களின் பணியாகும். இது தவிர்த்து, உழவாரப் பணி மேற்கொள்பவர்களும் இருக்கின்றனர். கோயிலைச் சுத்தமாக வைத்திருக்க வேண்டிய பொறுப்பு இவர்களைச் சேரும்.

இக்கோவிலின் பட்டர்களைச் சிவாச்சாரியார்கள் என்று அழைக்கின்றனர். முத்துப்பட்டர் பரம்பரை, சிதம்பரப்பட்டர் பரம்பரை, அமிர்தகந்தப்புர சுந்தரம்பாள் பரம்பரை, கல்யாண சுந்தரக் குருக்கள் பரம்பரை ஆகிய நான்கு குடும்பத்தினர் பரம்பரையாக இக்கோவிலில் மாதந்தோறும் சுழற்சி முறையில் பூசை செய்து வருகின்றனர்.

கொடுங்குன்றம் கோவிலக்குச் சொத்துக்கள் மிகுதியாக உள்ளன. அவை நிலங்கள், தோப்புகள், தென்னை மரங்கள், கட்டிடங்கள் போன்றவையாகும். இவற்றிலிருந்து கிடைக்கும் வருவாய் ஆதீனத்திற்குச் சொந்தமானது. பிரான்மலை, வையாபுரிப்பட்டி, மேட்டுப்பட்டி, பொன்னடப்பட்டி, சிறு மருதூர் போன்ற ஊர்களில் இக்கோவில் நிலங்கள் உள்ளன. அவை குத்தகைக்கு விடப்பட்டுள்ளன.

பட்டர், ஓதுவார், கணக்குப்பிள்ளை, வைராவி, தொழிலாளி (சிற்பம். தச்சு வேலை செய்பவர்), காவலர் முதலியவர்களுக்கு நிலங்கள் வழங்கப்பட்டுள்ளன.

இக்கோவிலில் உள்ள கடவுளர்களுக்குத் தங்க நகைகளும், வெள்ளி நகைகளும் உள்ளன. நகைகள் பெரும்பாலும் கருவூலத்தில் இருக்கும். விழாக் காலங்களில் அவை பெறப்பட்டு கடவுளர்களுக்கு அணிவிக்கப் பெறும்.

**திருக்கோளக்குடி**

திருக்கோளக்குடி கோவிலில் குருக்கள், செயலாளர், மணியம், வைராவி, ஓதுவார், மெய்க்காவல், மணியம், வண்ணான், ஆசாரி, கொல்லன், நாவிதன், வாத்தியக்காரர்கள், பரிசாரகர், பணிப்பெண் ஆகியோர் இக்கோவிலில் பணியாற்றுகின்றனர்.

திருக்கோளக்குடியில் இரண்டு சிவாச்சாரியார்கள் சுழற்சி முறையில் பணியாற்றுகின்றனர். பிற கோவில்களில் உள்ள பணியாளர்களைப் போன்றே இங்கும் பணியாளர்கள் இருக்கின்றனர். சிவாச்சாரியார்களுக்கு நிலங்கள் மானியமாக வழங்கப்பட்டுள்ளன. உழவாரப் பணிகள் செய்வதற்கென்று பணியாட்கள் இருக்கின்றனர்.

திருக்கோளக்குடி, மின்னக்குடி, ஆத்திரம்பட்டி, ஊசாடிப்பட்டி, மந்திப்பட்டி, தேவியாங்குளம், கொட்டிக்காடு, மிதிலைப்பட்டி ஆகிய ஊர்களில் இக்கோவிலக்கான நிலங்கள் குத்தகை விடப்பட்டுள்ளன. குத்தகை நிலங்களிலிருந்து வருவாய் கிடைக்கிறது. நிலங்கள் தவிர, சத்திரம், காலியிடம், பிற கட்டிடங்கள் போன்ற சொத்துக்கள் இக்கோவிலக்குக் கிடையாது.

இக்கோவிலில் உண்டியல் கிடையாது. திருவிழாவின் போது மட்டும் உண்டியல் வைக்க வேண்டும். கோவிலின் நகைகள் ஆதீனப் பொறுப்பில்

உள்ளன. விழாக்காலங்களில் பாதுகாப்பு கருதி அவை வெளியில் எடுக்கப்படுவதில்லை.

இக்கோவிலில் உள்ள மரக்கால் இராமலிங்க மரக்கால் என்று அழைக்கப்படுகிறது. இம்மரக்கால் பக்கா நான்குபடி கொண்டது. இதனைக் கொண்டு கோவிலக்கு வரும் நெல் அளக்கப்படுகிறது. விளைச்சல் அதிகம் உள்ள காலத்தில் இதன் பயன்பாடு அதிகமாக இருந்திருக்கலாம் என அறியப்பெறுகிறது.

**தேனாட்சியம்மன் கோவில்**

தேனாட்சியம்மன் கோவில் மருதுபாண்டியர் காலத்தில் சீரும் சிறப்பும் பெற்றிருந்தது. கோவில் மேல்நிலையாக்கம் பெற்றதிலிருந்து கோவிலில் சிவாச்சாரியார்கள் பூசனை செய்கின்றனர். அதற்கு முன் கிராமப் பூசாரிகள் வழிபாடு நடத்தினர். இக்கோவிலம் இந்து அறநிலையத் துறையினரின் கட்டுப்பாட்டில் உள்ளது. நிலங்கள், உண்டியல், அர்ச்சனைச் சீட்டு போன்ற வகைகளில் வருமானம் வருகிறது. வருமானம் குறைவாகவே கிடைக்கின்றது. பணியாளர் ஊதியம், தினப்பூசை, திருவிழா போன்றவற்றிற்கு வருமானங்கள் செலவு செய்யப்படுகின்றன. இக்கோவிலக்குச் சொந்தமான நிலங்கள் குத்தகைக்கு விடப்பட்டுள்ளன.

**வரவு செலவு அறிக்கை**

ஒரு சிறந்த நிருவாகி என்பவர் அந்நிறுவனத்தின் வரவு செலவுப் பயனைப் பட்டியலிட்டுக் காட்டல் (Balance Sheet) என்பது ஓர் இன்றியமையாத மேலாண்மைப் பண்பாகும். குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம் ஐந்து கோவில்களின் கணக்குகளை இந்து அறநிலையத் துறையினரிடம்

சமர்ப்பிக்கின்றனர். அவர்கள் அளித்த வரவு செலவு திட்ட அறிக்கையின் ஒரு

சான்று பின்வருமாறு:

(வரவினப் பட்டியல் ரொக்கம் - 01.07.2013 முதல் 30.06.2014 வரை)

| | | |
|---|---|---|
| 1. நன்செய் ரொக்கம் | - | 22,930.00 |
| 2. புன்செய் ரொக்கம் | - | 15,340.00 |
| 3. தோப்பு குத்தகை (பயன்தரு மரங்கள்) | - | 36,371.00 |
| 4. பண்ணை தென்னை | - | 5,74,033.00 |
| 5. நெல் விற்பனை முந்திரி கொட்டை விற்பனை | - | 94,290.00 |
| 6. நெல்லுக்குப் பதில் ரொக்கம் | - | 0.00 |
| 7. பழுப்பு மட்டை குத்தகை | - | 23,000.00 |
| 8. உள்துறை குத்தகை | - | 1,15,300.00 |
| 9. மீன்பாசி உரிமை | - | 0.00 |
| 10. மர வரி | - | 0.00 |
| 11. கட்டிட வாடகை | - | 3,50,610.00 |
| 12. காலிமனை வாடகை | - | 3,48,736.00 |
| 13. தற்காலிக கடை வாடகை - மகமை | - | 1,92,873.00 |
| 14. உபயங்கள் (காணிக்கை) | - | 57,938.50 |
| 15. உண்டியல் திறப்பு | - | 56,63,793.00 |
| 16. பணவிடைத்தாள் வரவு (M.O.காணிக்கை) | - | 13,543.00 |
| 17. கழிப்பறை கட்டணம் | - | 18,000.00 |
| 18. செல்லாத நாணயங்கள் அயல்நாட்டு நோட்டுகள் மாற்றியது) | - | 0.00 |
| 19. உபய கால்நடை விற்பனை | - | 0.00 |
| 20. திருவீதிஉலா கட்டணம் | - | 0.00 |

21. சிட்டு விற்பனை - 0.00

22. கல்யாணம் - 46,909.00

23. காதுகுத்து 5,010.00

24. அபிசேகம் - 53,063.00

25. அர்ச்சனை - 2,76,719.00

26. காவடி தொட்டி - 8,159.00

27. முடி காணிக்கை - 70,517.00

28. மாவிளக்கு - 2137.00

29. பிள்ளை மாற்று - 62,930.00

30. உபய சண்முகா அர்ச்சனை - 1,11,515.00

31. மயில் மண்டபம் - 4,41,718.00

32. மண்டகப்படி காணிக்கை - 0.00

33. திருக்கல்யாண மொய் 0.00

34. திருக்கோளக்குடி திருப்பாறை காணிக்கை - 0.00

35. தங்கம், வெள்ளி அங்கி சாத்துப்படி - 0.00

36. மாலை, சந்தனம் - 0.00

37. தஸ்திக் அலவன்ஸ் - 0.00

38. அரசு உதவித் தொகை - 0.00

39. முதலீடு வட்டி - 5,64,844.35

40. வங்கி வட்டி - 63,050.00

41. பிரசாதம் விற்பனை - 1,88,700.00

42. பஞ்சாமிர்தம் விற்பனை - 79,480.00

43. நெய் தீபம் விற்பனை - 3,74,800.00

44. காலண்டர் விற்பனை - 61,200.00

| | | |
|---|---|---|
| 45. புத்தகங்கள் விற்பனை | - | 19,115.00 |
| 46. படங்கள் விற்பனை | - | 89,910.00 |
| 47. வெள்ளி உருப்படிகள் விற்பனை | - | 20,995.00 |
| 48. பொரி விற்பனை | - | 8,500.00 |
| 49. வழக்கு செலவு திரும்ப வரவு | - | 0.00 |
| 50. டிகிரி தொகை வரவு | - | 0.00 |
| 51. ரெக்கார்டு கட்டணம் | - | 22,300.00 |
| 52. ஆதாய வரவு | - | 120.50 |
| 53. செலவுக்கு வரவு | - | 4,81,759.50 |
| 54. வருமான வரி பிடித்தம் திரும்ப வரவு | - | 2,846.00 |
| 55. திருப்பணி | - | 8,77,072.00 |
| 56. மரங்கள் விற்பனை | - | 2,400.00 |
| 57. கால்நடை விற்பனை | - | 0.00 |
| 58. தணிக்கைத் தடை வசூல் | - | 6,156.40 |
| 59. யானை பராமரிப்பு உண்டியல் | - | 1,56,907.00 |
| 60. முதலீடு ரொக்கமாக்கியது | - | 66,38,114.17 |
| 61. கடன் திரும்ப வரவு | - | 15,100.00 |
| 62. முன்பணம் ஈடு செய்தது | - | 18,91,149.00 |
| 63. நிரந்தர முன்பணம் ஈடு செய்தது | - | 79,900.00 |
| 64. ரெக்கவரி பற்றுக்கு வரவு | - | 1009.00 |
| 65. குத்தகை வைப்புத் தொகை (உள்துறை) | - | 36,000.00 |
| 66. வாடகை வைப்புத் தொகை | - | 5000.00 |
| 67. பிணை வைப்புத் தொகை | - | 1840.00 |
| 68. நாவிதர் கூலி | - | 40,360.70 |

69. சேமநல் நிதி பங்கு - சந்தா - 40,360.70

70. அமானம் - 1331.00

71. கடன் வரவு - 45,000.00

72. கொடுபட வேண்டிய பாக்கி - 0.00

73. இதர வைப்புத் தொகை - 1,81,160.00

74. வறட்சி நிவாரண நிதி - 0.00

மொத்த வரவு - 2,04,64,471.16

**ஆரம்ப இருப்பு**

ரொக்கம் - 35,762.60

வங்கி - 28,20,228.64

மொத்தம் - 28,55,991.24

ஆக மொத்தம் வரவு - 2,33,20,462.40

01.07.2013 முதல் 30.06.2014 வரை வரவு 2,33,20,462.40 ஆகும்.

(செலவினப் பட்டியல் ரொக்கம் - 01.07.2013 முதல் 30.06.2014 வரை)

1. நிர்வாக சிப்பந்தி சம்பளம் - 6,41,480.00

2. வசூல் சிப்பந்தி சம்பளம் - 3,51,000.00

3. உள்துறை சிப்பந்தி சம்பளம் - 13,78,315.00

4. இதர ஈட்டுப்படிகள் - 34,163.00

5. வருங்கால வைப்பு நிதி - 956.00

6. மானிய சிப்பந்திகள் திருக்கை வழக்கம் - 0.00

7. மானிய சிப்பந்திகள் மருக்கை வழக்கம் - 750.00

8. பரம்பரை அறங்காவலர் மரியாதை செலவு - 0.00

9. நிர்வாக சிப்பந்தி பயணப்படி - 42,540.00

10. வசூல் சிப்பந்தி பயணப்படி - 60,930.50

11 உள்துறை சிப்பந்தி பயணப்படி - 849.00

12. பரம்பரை அறங்காவலர் புலன் தணிக்கை செலவு 11,418.00

13. நிலவரி - 370.00

14. நகர்மன்ற ஊராட்சி மன்ற கட்டிட வரி - 10,229.00

15. மரவரி - 3,898.00

16. சகாய தொகை மற்றும் தணிக்கைக் கட்டணம் 11,00,000.00

17. பரிசீலனை கட்டணம் - 0.00

18. ஆணையர் பொது நல நிதி - 0.00

19. பயிர் பாதுகாப்பு பிரிமியம் - 0.00

20. அரசுக்கு செலுத்த வேண்டிய இதர செலவு - 0.00

21. மின்சார செலவு - 0.00

22. மின் கட்டணம் - 3,15,226.00

23. மின்சாதனம் கொள்முதல் (ம) இதர செலவுகள் 37,993.00

24. தொலைபேசி கட்டணம் - 1,452.00

25. தபால் - 30.00

26. அச்சிடுதல் - 10,300.00

27. எழுதுபொருள் - 28,892.00

28. புத்தகம் பருவ வெளியீடுகள் - 4,370.00

29. வழக்கு செலவு - 0.00

30. வசூல் சம்பந்தமான செலவு - 76,349.00

31. தேங்காய் வெட்டு செலவு - 1,58,056.00

32. பரம்பரை அறங்காவலர் விருப்ப நிதி - 400.00

33. தல விளம்பரம் - 0.00

34. தல அபிவிருத்தி - 0.00

35. வரவுக்கு செலவு - 9,28,842.00

36. பூசை படித்தரம் ரொக்க செலவு - 4,13,081.00

37. நெல் தானியம் கொள்முதல் - 0.00

38. சிறப்பு வழிபாடு அன்பர்கள் உபசரிப்பு - 8,123.00

39. பரிவட்டம் கொள்முதல் - 0.00

40. உள்துறை செலவு - 0.00

41. திருவிழா ரொக்க செலவு - 9,42,361.00

42. நெல், அரிசி முதலியன - 0.00

43. உபய சண்முகா (ம) சகஸ்ரநாம அர்ச்சனை - 1,04,735.00

44. தோப்பு பராமரிப்பு - 3,93,319.00

45. நிலச்சீர்திருத்தம்-சொத்து பராமரிப்பு - 8,383.00

46. பராமரிப்பு சிப்பந்தி சம்பளம் 7,39,874.00

47. பண்ணை சாகுபடி - 0.00

48. உர அபிவிருத்தி - 0.00

49. நீர்பாசன மராமத்து - 0.00

50 நில அளவை மற்றும் ஆவணங்கள் - 0.00

51. திருக்கோவில் மராமத்து தூய்மை - 2,52,625.00

52. கட்டிடங்கள் பராமரிப்பு - 12,970.00

53. வாகனங்கள் பராமரிப்பு - 64,088.00

54. இயந்திரங்கள் பராமரிப்பு - 0.00

55. பாத்திரங்கள் பழுது நீக்கல் - 0.00

56. தளவாடங்கள் பராமரிப்பு - 28,313.00

57. கால்நடைகள் பராமரிப்பு - 1,43,265.00

| | | |
|---|---|---|
| 58. சமய பிரச்சாரம் | - | 7,000.00 |
| 59. சமய சம்பந்தமான கல்வி | - | 0.00 |
| 60. யாத்ரீகர் நலம், சுகாதாரம் | - | 1,35,656.00 |
| 61. யானை நலத்திட்ட செலவு | - | 3,06,326.00 |
| 62. தளவாடங்கள் கொள்முதல் | - | 1,22,583.00 |
| 63. வருமான வரி பிடித்தம் | - | 11,199.12 |
| 64. திருப்பணி | - | 16,01,614.00 |
| 65. வழிபாட்டுச் செலவு | | 0.00 |
| 66. சிலைகள் பராமரிப்பு | - | 7,280.00 |
| 67. கட்டிடங்கள் கட்டுதல் | - | 1,00,991.00 |
| 68. பலவகை செலவுகள் | - | 37,719.00 |
| 69. முதலீடு செய்தது | - | 69,56,078.38 |
| 70. மின் வைப்புத் தொகை | | 0.00 |
| 71. கடன் கொடுத்தது | - | 13,000.00 |
| 72. முன்பணம் | | 17,51,365.00 |
| 73. நிரந்தர முன்பணம் | - | 79,900.00 |
| 74. ரெக்கவரி பற்று | - | 1,157.00 |
| 75. குத்தகை வைப்புத் தொகை | - | 12,300.00 |
| 76. வாடகை வைப்புத் தொகை | - | 0.00 |
| 77. இதர வைப்புத் தொகை | - | 3,57,264.00 |
| 78. பிணை வைப்புத் தொகை | - | 0.00 |
| 79. நாவிதர் கூலி வழங்கியது | - | 32,013.00 |
| 80. சேமநல நிதி தொகை வழங்கியது | - | 1,444.00 |
| 81. அடமானம் | - | 4,472.00 |

| | | |
|---|---|---|
| 82. கடன் திரும்ப கொடுத்தது | - | 45,000.00 |
| 83. கொடுபட வேண்டிய பாக்கி | - | 0.00 |
| 84. பலவகை செலவு | | 0.00 |
| | | ................ |
| மொத்த செலவு | | 1,98,94,307.00 |
| | | ................ |

**முடிவிருப்பு**

| | | |
|---|---|---|
| ரொக்கம் | 1,37,225.00 | |
| வங்கி | 32,81,929.90 | |
| | ............ ... | |
| | 34,26,155.00 | |
| | ................ | |
| ஆக மொத்தம் செலவு | | ரூ. 2,33,20,462.40 |

## தொகுப்புரை

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீன நிருவாகத்தின் கீழுள்ள ஐந்து கோவில்களும் இந்துசமய அறநிலையத்துறையின் கட்டுப்பாட்டில் உள்ளன.

குத்தகைக்கு விடப்பட்ட நிலங்களின் மூலமாகவும், கட்டடங்கள் வழியாகவும், தோப்புகள் குத்தகைக்கு விடுவதன் வழியாகவும் வருவாய் கிடைக்கின்றன. தினப்பூசைகள், மாத, வருட விழாக்கள், கால்நடை பராமரிப்பு, வாகனங்கள் பராமரிப்பு, தளவாடங்கள் பராமரிப்பு, பாத்திரங்கள் பராமரிப்பு போன்றவற்றிற்குச் செலவு செய்யப்படுகின்றன. இதில் பணியாளர்களின் ஊதியத்திற்கு அதிகமாகச் செலவு செய்யப்படுகின்றன.

பொங்கல் பண்டிகையின் போது, பணியாளர்களுக்கு சிறப்பூதியம் வழங்குவதோடு, பொங்கல் பானை, பச்சரிசி, வெல்லம், கரும்பு போன்றவை பணியாளர்களுக்கு ஆதீனத்தின் சார்பாக வழங்கப்படுகிறது. இவ்வகையான செலவினங்களும் மேற்கொள்ளப்படுகின்றன.

நீண்ட நாள் பணியாற்றும் பணியாளர்களுக்குக் கடனுதவியும் ஆதீன மடத்தின் சார்பாக வழங்கப்படுகின்றன.

அனைத்து கோவில்களிலும் விரும்பும் பக்தர்களுக்கு, இலவசமாக முடி காணிக்கை செலுத்துவதற்கு வசதிகள் செய்யப்பட்டுள்ளன. அதற்காக தனியாக நாவிதர் நியமிக்கப்பட்டுள்ளார். அவருக்கான ஊதியம் திருமடத்தின் வழியாக வழங்கப்படுகிறது. காணிக்கையாகப் பெறப்படும் முடி விற்பனை செய்யப்பட்டு, அதன் மூலம் வருவாய் கிடைக்கின்றது.

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம் ஐந்து கோவில்களின் கணக்குகளை இந்து அறநிலையத் துறையினரிடம் சமர்ப்பிப்பதிலிருந்து அவர்களின் நேர்மையான, ஒளிவு மறைவற்ற வரவு செலவுகள் தெரியவருகின்றன.

## சான்றெண் விளக்கம்

1. எஸ்.எம்.கமால், சேதுபதி மன்னர்கள் கல்வெட்டுக்கள், ப. 13.
2. ஜி.எஸ். சுப்ரமணியன், (சிறப்புக் கட்டுரை) தி இந்து நாளிதழ், நாள்:17.11.2014.

## முடிவுரை

மன்னர்களின் இறைப்பணிக்குப் பிறகு, அப்பொறுப்பினை மடாலயங்கள் சிறப்புடன் செய்து வருகின்றன. சேதுபதி மன்னர்களின் ஆணைக்கிணங்க, குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம் இப்பகுதியில் திருமடத்தை நிறுவி, கோவில்களின் நிருவாகத்தைக் கவனித்து வருகின்றது. திருவண்ணாமலையின் கிளை மடமாகப் பிரான்மலையில் அமைந்த இவ்வாதீனத்தை 31ஆம் பட்டம் மருதநாயக தேசிக குருமூர்த்தி காலத்தில் குன்றக்குடியில் அமைத்தனர்.

ஆதி சைவ மரபில் வந்தவர்களே இம்மடத்தின் தலைமைப் பொறுப்பு வகிக்கின்றனர். இத்திருமடத்தில் இதுகாறும் நாற்பத்தைந்து குருமுதல்வர்கள் இருந்து ஆன்மீக, சமூக, இலக்கியப் பணிகள் ஆற்றியுள்ளனர். தற்போது 46ஆவது ஆதீன குருமுதல்வராகத் தவத்திரு பொன்னம்பல அடிகளார் சிறப்பாக நிருவகித்து வருகிறார்.

இம்மடத்தின் தலைவர்கள், உலகின் பல்வேறு நாடுகளுக்கும் சென்று, சைவ சமயம் மட்டுமல்லாது தமிழ்மொழியின் பெருமையினை உலகறியச் செய்து, தமிழ்ப்பண்பாடு, கலாச்சாரம் போன்றவற்றைப் பரப்பி வருவதை அறிய முடிகிறது.

இம்மடத்தின் தலைவர்கள் சமயப் பணியோடு, இலக்கியப் பணியினையும் செய்து வருகின்றனர். பொன்னம்பல அடிகளார் இதுவரை நான்கு நூல்களைப் படைத்துள்ளார். அவை, 'காற்றில் வந்த கருத்து மழை', 'உயிர்நாரில் தொடுத்த மாலை', 'நாள் ஒரு நயம்', 'தமிழ்ப் பண்பாடு' போன்றவையாகும். தெய்வசிகாமணி நான்மணிமாலை, ஞானவந்தாதி, சிற்குருமாலை போன்ற நூல்கள் இம்மடத்திலிருந்து வெளிவந்தவையாகும்.

யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர். மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம், உ.வே.சாமிநாதையர், தண்டபாணி தேசிகர், மு.கதிரேசஞ்செட்டியார். கா.வெள்ளைவாரணர், கி.வா.ஜகந்நாதன், பெரும்புலவர் நடேச முதலியார், அ.ச.ஞானசம்பந்தன் போன்றோர் இம்மடத்திற்கு வந்தவர்களின் முக்கியமானவர்கள்.

கட்சி வேறுபாடற்ற பொதுத்தன்மையுடன் எல்லாக் கட்சித் தலைவர்களும் இங்கு வருகை தந்துள்ளார்கள். முன்னாள் தமிழக முதல்வர்கள் அண்ணாதுரை (1956, 1962), மு.கருணாநிதி (பாரி விழாவிற்கு வருகை, 1969) ஆச்சாரிய வினோபாபாவே (1956), இராசாசி (1957), ஈ.வே.ராமசாமி பெரியார், நம்பூதிரிபாட், பி.ராமமூர்த்தி, ப.ஜீவானந்தம், பாரதிதாசன், ப.கக்கன் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர்.

இம்மடத்தில் ஆதீனப் புலவர்களாக இருந்து அணி செய்தவர்களில், வெண்பாப்புலிக் கவிராயர், வீரபத்திரக் கவிராயர், கணேச பண்டிதர் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர். தற்போது ஆதீனப் புலவராக மரு.பரமகுரு உள்ளார். அவர் குன்றக்குடித் திருக்கயிலாயப் பரம்பரைத் திருவண்ணாமலை ஆதீன வரலாற்று நூலினை 1990இல் வெளியிட்டார். இந்நூல் ஆதீன அடியார்களின் வரிசையையும், அவர்கள் ஆற்றிய சமய, சமுதாயத் தமிழ்ப்பணிகள் பற்றியும், ஆதீனச் சிறப்புகள் பற்றியும், வரலாற்றுச் சான்றுடன் அறிந்து கொள்வதற்கு உதவியாக அமைந்துள்ளது. ‘பறம்புமலை திருக்கொடுங்குன்றம்’, ‘அடிகளார் உறவுப்பாலம்’, ‘குன்றக்குடித் தலவரலாறு’, ‘முருகன் தமிழ்மாலை’, ‘மனச்சுவடு(கவிதை)’ போன்ற நூல்களையும் வெளியிட்டுள்ளார்.

இத்திருமடம் ஆன்மிகப் பணியுடன், கல்வி, சமுதாயப் பணி ஆகியவற்றை மேற்கொள்கிறது. இம்மடத்தின் வழியாக அருள்நெறித் திருப்பணி மன்றம் ஏற்படுத்தப்பட்டுள்ளது. இந்த மன்றம் கல்விப் பணியை முதன்மை நோக்கமாகக் கொண்ட அமைப்பாகும். ஒரு முதல்தரக் கல்லூரியையும், இரண்டு மேல்நிலைப் பள்ளிகளையும், நான்கு உயர்நிலைப் பள்ளிகளையும், நான்கு நடுநிலைப் பள்ளிகளையும், மூன்று தொடக்கப் பள்ளிகளையும், இரண்டு பாலர் பள்ளிகளையும் உருவாக்கி நடத்தி வருகின்றது.

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம் ஐந்து கோவில்களை நிருவகிக்கின்றது. பிரான்மலை கொடுங்குன்றநாதர் கோவில், திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோவில், திருக்கோளக்குடி ககோளபுரீசுவரர் கோவில், குன்றக்குடி சண்முகநாதர் கோவில், சிறாவயல் தேனாட்சியம்மன் கோவில் ஆகியவையாகும்.

இவ்வாதீனத்திற்கு உட்பட்ட குடைவரைகளில் சிற்பக் கலையின் வளர்ச்சியில், சிவனே முழுமுதற் கடவுளராக விளங்குகிறார். கால வளர்ச்சியில் மலை மீது முருகன் கோவில்கள் எழுப்பப்பட்டுள்ளன. குடைவரைகளில் தாய்ப் பாறையிலேயே மூலத்தெய்வங்களின் உருவங்கள் செதுக்கப்பட்டிருப்பது சிறப்பிற்குரியதாகும்.

இக்குடைவரைக் கோவில்களில் காணப்படும் சிற்பங்கள், அவற்றின் அமைப்பு ஆகியவை பாண்டியர் கால சிற்பங்களாகவே காணப்படுகின்றன. பிற்கால வளர்ச்சியின் பயனாக, இக்குடைவரைகளில் விநாயகர் புடைப்புச் சிற்பங்கள் அதிகளவில் காணப்படுகின்றன.

திருக்கோளக்குடியில் கருவறைக்கு வடக்கில் ஓர் இலிங்கமும், அதனை அடுத்து சப்தமாதர்களின் சிற்பங்களும் காணப்படுகின்றன. இவர்களுடன் இடபவாகனர் போன்று அமைப்புடைய சிற்பமும் காணப்படுகிறது. காளையுடன் இவர் காணப்படினும், ஆலமர் செல்வரின் ஜடாபாரத்தைப் பெற்றுள்ளபடியால் இவர் ஆலமர் செல்வராக இருத்தல் கூடும் என்பதை ஆய்வின் வழி அறியலாகிறது.

திருக்கோளக்குடியில் அகத்தியர் - புலத்தியர் (சித்தர்கள்) சிலைகள் வேறு எங்கும் காணாத வடிவத்தில் இருக்கின்றன. திருக்கோளக்குடி மற்றும் குன்றக்குடிக் குடைவரைக் கோவில்களின் அமைப்பு பல்லவப் பேரரசன் மகேந்திரவர்மன் பாணியில் உள்ளது. இருப்பினும் அவனது வழித்தோன்றல் இராசசிம்மன் பாணியில் உள்ளது போன்றே இங்கும் சுதைச் சிற்பங்களுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. எனவே இதன் காலம் எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்ததாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

சோதிடக் கலை மக்களின் நம்பிக்கையோடு கலந்ததனால், ஓவியர்களும் ஆடு முதலான பன்னிரண்டு ராசிகளையும், விண்மீன்களையும் சுவர் ஓவியங்களாக வரைந்துள்ளனர்.

குன்றக்குடி கோவிலின் உள்ளே, அஷ்டதிக் பாலகர்கள் தங்கள் வாகனங்களுடன் இருப்பது போன்ற சிலைகள் சதுரவடிவில் மேற்கூரையில் அழகுற செதுக்கப்பட்டுள்ளன.

திருக்கோவில் அமைப்பு, சிற்ப வேலைப்பாடு, ஓவியச் சிறப்பு, சிவாகம நெறியில் செய்யும் பூசை முறைகள், ஆலய வழிபாட்டின் தத்துவம் ஆகியவை நேர்த்தியான முறையில் அமைந்துள்ளன.

சங்ககாலத்தில் காணப்பட்ட சுதைச் சிற்பங்களைப் போன்று, மூன்று குடைவரை கோவில்களிலும் காணப்படுகின்றன. கோவில்களில் திருப்பணிகள் செய்யும் பொழுது பழமையான ஓவியங்கள் அழிக்கப்பட்டுள்ளன.

அக்காலத்தில் ஐந்து கோவில்களும் கலை வளர்க்கும் இடமாகவும், ஓதுவிக்கும் கல்விச் சாலைகளாகவும், கலைகள் பயிற்றுவிக்கும் பாடசாலைகளாகவும் விளங்கியமை அறியப் பெறுகிறது. பொதுமக்கள் தங்கள் பிரச்சினைகளை ஆராய்கின்ற பொது மன்றங்களாகவும், நிலங்களைக் கோவிலக்கு வாங்கி, விற்கும் ஆவணப் பதிவகமாகவும் திகழ்ந்துள்ளன.

ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த திருப்பத்தூர் திருத்தளிநாதர் திருக்கோவில் சம்பந்தர், திருநாவுக்கரசர், அருணகிரிநாதர் ஆகியோரால் பாடப்பெற்ற திருத்தலமாகும். இத்தலத்தில் 10ஆம் நூற்றாண்டைச் சார்ந்த செப்புத் திருமேனிகளும் இருக்கின்றன. இது கோவிலின் வளர்ச்சி நிலையைக் காட்டுகிறது. அண்மையில், முருகன் சந்நிதியைத் தொடர்ந்து, 63 நாயன்மார்களும், 27 நட்சத்திரத்திற்குரிய நாயகர்களும் சிலை வடிவில் வைக்கப்பட்டுள்ளனர்.

இக்கோவில் காமிக ஆகமத்தின் அடிப்படையில் அமைக்கப் பெற்றதாகும். இக்கோவில் கருவறை, அர்த்தமண்டபம், மகா மண்டபம், முன் மண்டபம் ஆகியவற்றுடன் தட்சிணாமூர்த்தி, மகாகணபதி, வர்ணலிங்கம், மகாலட்சுமி, அகத்தியலிங்கம், கொன்றை நாராயணப் பெருமாள், சண்டிகேசுவரர், துர்க்கை ஆகிய சந்நிதிகள் முதல்சுற்றில் காணப்படுகின்றன. இரண்டாம் சுற்றில் ஆறுமுகன், 63 நாயன்மார்கள், வன்னிமரத்து விநாயகர், திருநாகேசுவரர், பைரவர், ஆடல்வல்லான் சந்நிதிகள் உள்ளன. மூன்றாம் சுற்றில் அம்மன் சந்நிதி உள்ளது.

சேஷ்டாதேவி, அவரின் மகன், மகள் ஆகிய மூன்று உருவங்களையும் ஒரே கல்லில் செதுக்கியுள்ளமை கலைவடிவின் நேர்த்தியாகும்.

சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரும் நின்ற கோலத்தில் உள்ளனர். ஏனைய கோவில்களில் காணப்பெறாத நிலையில் மாணிக்கவாசகர் அபய, வரத முத்திரைகளைக் குறிக்கும் கரங்களுடனும் காட்சியளிக்கிறார்.

ஆடல்வல்லான் சந்நிதி ஆண்டவன் ஆடிய சிற்சபையாக விளங்குகிறது ஆடல் வல்லான் சந்நிதிக்கு முன்புள்ள காளிங்கராயன் மண்டபத்தில் அழகிய சிற்ப வேலைப்பாடுடைய ஐந்து இசைத் தூண்கள் அமைந்துள்ளன. இத்தூண்கள் விசயநகர மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் ஏற்பட்டதாகும்.

இத்திருத்தலத்தில் இருக்கும் யோக பைரவர், காலபைரவர் என்று அறியப்பெறுகிறார். மூல விக்கிரகங்களைப் போன்றே செப்புத் திருமேனிகளும் அமைதல் உண்டு. யோக பைரவரைப் போன்று செப்புத் திருமேனி அமைக்கவில்லை. மாறாக, யோக நிலையில் இல்லாமல் நிர்வாண நிலையில் செப்புத் திருமேனி உள்ளது.

இந்திரனின் மகன் ஜெயந்தன் சாப விமோசனம் பெற பைரவரை நோக்கித் தவம் இருந்ததாக நம்பப்படுகிறது. அதன் நினைவாக ஒவ்வொரு சித்திரை மாத முதல் வெள்ளிக்கிழமையன்று ஜெயந்தன் பூசை நடைபெறுவது இக்கோவிலின் சிறப்பம்சமாகும்.

திருத்தளிநாதர், ஆதித்திருத்தளிநாதர் என்று இரண்டு கோவில்கள் இருக்கின்றன. ஆதித்திருத்தளிநாதர் மேற்குத் திருத்தளிநாதர் என்றும் அழைக்கப்பெறுகிறார். முதலில் ஒரு கோவிலாகவும், வளர்ச்சியடைந்த

நிலையில் இரண்டாவது கோவில் ஏற்படுத்தப்பட்டிருக்கலாம் என அறியப்பெறுகிறது.

இத்திருத்தலத்திற்கு அருகில் சீதளி என்ற தெப்பக்குளம் ஒன்று இருக்கிறது. இங்குப் பத்தாம் நாள் விழாவாகத் தெப்பத்திருவிழா நடைபெறுகிறது.

சிவகாமி அம்மனுக்கென்று தனியாகக் கோவில் கிழக்கு நோக்கியவாறு உள்ளது. அம்மன் நின்ற கோலத்தில் இரண்டு கரங்களுடன் காட்சியளிக்கிறாள். அம்மன் கோவிலின் கோபுரம் மூன்று மாடங்களுடன் ஐந்து கலசங்களுடன் காணப்படுகின்றன.

தேனாட்சியம்மன் சிறுதெய்வ வழிபாட்டு மரபில் இருந்தாலும் மகிசாசுரமர்தினி என்கிற புராணத் தாக்கம் பெற்றுப் பெருந்தெய்வ மரபுகளைக் கொண்டுள்ளது. ஆகம விதிகளின்படி கோவில் அமைப்பு இல்லாவிட்டாலும் பெருந்தெய்வ மரபிற்குரிய சில உறுப்புக்களைக் கொண்டுள்ளது. முன்பு இக்கோவிலில் பலியிடுதல் இருந்துள்ளது. தற்போது கிடையாது.

தேனாட்சியம்மனுக்குரிய உற்சவத் திருமேனி உள்ளது. நின்ற கோலத்தில் உள்ள அம்மன் வலக்கையில் சூலாயுதத்தையும், இடக்கையில் (தட்டுப்போன்று) ஆயுதத்தையும் ஏந்திய நிலை காணப்படுகிறது. தலையில் அக்கினி மகுடம் உள்ளது. பெரிய நாச்சியம்மனின் உற்சவத் திருமேனியும் காணப்படுகிறது.

அம்மனுக்கு நேர் எதிராகத் தெற்கு நோக்கியவாறு இடைச்சியம்மன் மூன்றடி உயரமுடைய மேடையில் நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறாள்.

மகா மண்டபத்தின் மேற்கு மூலையில் கிழக்கு நோக்கியவாறு கணபதி, விசுவநாதர்-விசாலாட்சி, சுப்பிரமணியர், சனீசுவரன் ஆகியோரது சிற்பங்கள் உள்ளன.

மண்டபத்தின் தூண் ஒன்றில் நின்ற அழகுடன் செதுக்கப்பட்டிருந்த மின்னஞ் செட்டியார் சிலை உடைபட்டு இரண்டு பாதங்கள் மட்டுமே இப்போது உள்ளன. பாதங்களில் நரம்பு வெளியில் தெரிவது உயிரோட்டமாக உள்ளது.

தேனாட்சியம்மன் கோவிலில் ஒரு வெள்ளைக்காரர் சாய்வு நாற்காலியில் அமர்ந்து நூல் படிப்பது போன்ற சிற்பம் காணப்படுகிறது. வெங்கலப்ப நாயக்கர், தம்மிரு மனைவியருடன் சதாசேவை சிற்பமாக உள்ளார். அச்சிலைகளுக்கு மேலே உள்ள தூணில் ஒரு கிளி பழம் தின்னும் நிலையில் இருப்பது சிற்பக் கலை நயத்திற்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

ஆதீனத்திற்கு உட்பட்ட கோவில்களில் காமிக, காரண ஆகமங்களின் வழி பூசைகள் நடைபெறுகின்றன. குன்றக்குடி கோவிலில் திருவனந்தல், விளாப்பூசை, காலசந்தி, உச்சிக்காலம், சாயரட்சை, அர்த்தசாமம் என்ற ஆறுகாலப் பூசைகளும், திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோவிலில் ஐந்து காலப்பூசைகளும் நடைபெறுகின்றன. திருக்கோளக்குடி மற்றும் தேனாட்சியம்மன் கோவில்களில் நாள் வழிபாடாக காலசந்தி, உச்சிக்காலம், சாயரட்சை, அர்த்தசாமம் என நான்கு காலப் பூசைகள் நடைபெறுகின்றன.

பிரான்மலைக் கோவிலில் கொடுங்குன்றநாதருக்கு ஆறுகாலப் பூசைகளும், மங்கைபாகருக்கு நான்கு காலப் பூசைகளும் நடைபெறுகின்றன.

மங்கைபாகர் உடனாய தேனம்மைக்கு நீரால் அபிசேகமும் செய்வதில்லை தீபம் காட்டப்படுவதில்லை. கடவுளர்களின் பாதத்தின் கீழுள்ள லிங்கத்திற்குத்தான் நீரால் அபிசேகம் நிகழ்த்தப்படுகிறது. அதற்குப் பதிலாக சாம்பிராணி தைலம், புனுகு போன்ற தைலங்களால் அபிசேகம் நடைபெறுகின்றன.

திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோவிலிலும், பிரான்மலை கொடுங்குன்றநாதர் கோவிலிலும் சித்திரை மாதம் ஜெயந்தன் பூசை விழாவும், ஆவணி மாதம் பிட்டுத் திருவிழாவும், தைமாதம் சுனை விழாவும் கொண்டாடப்படுகிறது.

சிறப்புப் பூசைகள் மற்றும் நவராத்திரி, சிவராத்திரி, பொங்கல் விழா போன்ற விழாக்கள் ஐந்து கோவில்களிலும் நடைபெறுகின்றன.

வைகாசி விசாகம், கந்தசஷ்டி, தைப்பூசம் போன்ற விழாக்கள் குன்றக்குடி சண்முகநாதன் கோவிலிலும், திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோவிலிலும் சிறப்பாக நடைபெறுகின்றன. இந்த இரண்டு கோவிலில் மட்டுமே யானைகள் உள்ளன.

முல்லைக்குத் தேரீந்த பாரி விழா, பிரான்மலை கொடுங்குன்றீசர் கோவிலில் மட்டுமே தமிழ் இலக்கிய விழாவாகக் கொண்டாடப்படுகிறது.

திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோவிலிலும், பிரான்மலை கொடுங்குன்றநாதர் கோவிலிலும் பைரவருக்குச் சிறப்புப் பூசைகள் நடைபெறுகின்றன.

திருக்கோளக்குடி, தேனாட்சியம்மன் கோவில்கள் (வருவாய் குறைவின் காரணமாக) தவிர்த்த ஏனைய கோவில்களில் பத்து நாட்கள் விழா கொண்டாடப்படுகிறது. இந்த இரண்டு கோவில்களிலும் தேர்கள் ஓடா நிலையில் உள்ளன.

குன்றக்குடி சண்முகநாதன் கோவிலில் கார்த்திகை கடைசி திங்களன்று 1008 சங்காபிசேகம் நடைபெறுகின்றது. திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோவிலில் 108 சங்காபிசேகம் நடைபெறுகின்றது.

ஆனித் திருமஞ்சன நீராட்டு எனப்படும் ஊடல் உற்சவம் பெரும்பான்மையான கோவில்களில் மார்கழி மாதம் திருவாதிரை நட்சத்திரத்தில் நடைபெறும். திருக்கோளக்குடியில் ஆனி மாதம் கேட்டை நட்சத்திரத்தில் நடைபெறுகிறது. அதன் சிறப்புக் காரணம் அறியப்பெறவில்லை.

ஐந்து கோவில்களிலும் புரட்டாசி மாதம் நவராத்திரி விழாப் பூசைகள் சிறப்பாக நடைபெறுகின்றன. ஆயுத பூசை, சரசுவதி பூசை, விசயதசமி, அம்பு எய்தல் போன்ற சமயங்களில் சிறப்புப் பூசைகள் நடைபெறுகின்றன. குன்றக்குடி சண்முகநாதன் கோவிலில் மட்டுமே தைப்பூசத்தன்று காவடி எடுக்கப்படுகிறது.

குன்றக்குடி உட்பட ஐந்து கோவில்களும் பொன்னம்பல அடிகளாரின் நேரடி நிருவாகத்தின் கீழ் உள்ளன. இவை அனைத்தும் இந்து அறநிலையத் துறையினரின் தணிக்கைக்கு உட்பட்டதாகும்.

நிலங்களின் மூலமாகவும், கட்டடங்கள் வழியாகவும், தோப்புகள் குத்தகைக்கு விடுவதன் வழியாகவும் வருவாய் கிடைக்கின்றது. தினப்பூசைகள், மாத, வருட விழாக்கள், கால்நடை பராமரிப்பு, வாகனங்கள் பாரமரிப்பு,

தளவாடங்கள் பராமரிப்பு, பாத்திரங்கள் பராமரிப்பு ஆகியவை முக்கியமான செலவினங்கள் ஆகும்.

அனைத்து கோவில்களிலும் விரும்பும் பக்தர்களுக்கு, இலவசமாக முடி காணிக்கை செலுத்துவதற்கு வசதிகள் செய்யப்பட்டுள்ளன. அதற்காக, தனியாக நாவிதர் நியமிக்கப்பட்டுள்ளார். அவருக்கான ஊதியம் திருமடத்தின் வழியாக வழங்கப்படுகிறது.

காணிக்கையாகப் பெறப்படும் முடி விற்பனை செய்யப்பட்டு, அதன் மூலம் வருவாய் கிடைக்கின்றது.

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம் ஐந்து கோவில்களின் கணக்குகளை இந்து அறநிலையத் துறையினரிடம் சமர்ப்பிப்பதிலிருந்து அவர்களின் நேர்மையான, ஒளிவு மறைவற்ற வரவு செலவுகள் உறுதிப்படுத்துகின்றன.

திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோவிலிலுள்ள பைரவரின் தோற்றங்களை ஆராயுங்கால், இங்குள்ள யோக பைரவருக்கும் ஏனைய பைரவருக்கும் உள்ள அடையாளங்கள் வேறுபடுகின்றன. எனவே, தனித்து ஆய்வதற்கானக் கூறுகள் உள்ளன.

இத்திருத்தலங்களின் கலைச் செறிவு நிறைந்த கட்டுமானக் கலை, ஏனைய மேல்நாட்டுக் கலைகளுடன் ஒப்பிட்டு மேலாய்வு செய்வதற்கு இவ்வாய்வு வழிகாட்டுகிறது.

## துணைநூற் பட்டியல்


1. அண்ணாமலை, பழ., — செட்டிநாட்டு ஊரும் பேரும், எம்.எம். முத்தையா ரிசர்ச் பவுண்டேசன், சென்னை-1, 1986.

2. அருணகிரிநாதர், — திருப்புகழ், வானதி பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 1986.

3. அருணாசலம், ப., — இந்து சமயம், மலாயாப் பல்கலைக்கழகம், இந்து சமய மன்றம், காஞ்சிபுரம்.

4. கதிரேசன், க. — அருள்திரு குமாரசாமி தம்பிரான் தெய்வசிகாமணி நான்மணிமாலை.

5. கணபதி ஐயர், ச.கு., — விழாவும் பூசையும், நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா, புதுடெல்லி, 1967.

6. கணபதி ஸ்தபதி, வை., — திருக்கோயிற் சமயம் வாஸ்து சமயம், திருக்கோவில் சமயம், கலை, சமுதாய ஆய்வுக் கருத்தரங்கு, தவத்திரு குன்றக்குடி அடிகளார்(ப.உ.), குன்றக்குடி.

7. மேலது — சிற்பச் செந்நூல், தொழிற்துறை இயக்ககம், சென்னை.

8. கமலையா, க.சி., — தமிழகக் கலை வரலாறு, மணிவாசகர் பதிப்பகம், 55, லிங்கத் தெரு, சென்னை - 1, 1988.

9. காளிதாசு, இராசு., — சிந்தைக்கினிய சிற்பக்கலை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

10. குன்றக்குடி அடிகளார், — நமது நிலையில் சமயம் சமுதாயம், சென்னைப் பல்கலைக்கழக வெளியீடு, சென்னை - 1975.

11. கைலாசநாத குருக்கள். கா., சைவத்திருக்கோவில் நெறி. கலா நிலையம், கொழும்பு, 1963.

12. சாமி. பி.எல்., தமிழிலக்கியத்தில் தாய்த் தெய்வ வழிபாடு. நியூ செஞ்சுரி புக் ஹவுஸ். சென்னை. 1975.

13. சீனிவாசன். பி.ஆர்., நாம் வணங்கும் தெய்வங்கள். இளங்கோ பதிப்பகம், சென்னை, 1959.

14. சுந்தர சுவாமிகள் சமயமும், சமுதாயமும், அருள்மாலை (மணிவிழாமலர்), கம்பன் மணிமண்டபம் வீதி. காரைக்குடி-2, 1989.

15. சுப்பிரமணிய குருக்கள், வி.எஸ்., ஆகமும் ஆலய வழிபாடும். வானதி பதிப்பகம், சென்னை.

16. சுவர்ணகாளீஸ்வரன். சு., குன்றக்குடி - திருக்கைலாய பரம்பரை திருவண்ணாமலை ஆதீன வரலாறு. ஆதீன சீடர்கள், சங்க வெளியீடு.

17. சோமசுந்தர தம்பிரான் சுவாமிகள் (ப.ஆ.), திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச் செய்த தேவார திருப்பதிகங்கள் (முதல் திருமுறை), ஞானசம்பந்தர் பிரஸ், தருமபுரம், 1953.

18. மேலது. திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச் செய்த தேவார திருப்பதிகங்கள் (ஆறாம் திருமுறை). ஞானசம்பந்தர் பிரஸ், தருமபுரம். 1953.

19. சோமலெ, செட்டிநாடும் செந்தமிழும். பாரி நிலையம், சென்னை, 1958.

20. சோமலெ, தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும்,
நேஷனல் புக் ட்ரஸ்ட்டு,
புதுதில்லி,
1975.

21. தங்கவேலு, கோ., இந்தியக்கலை வரலாறு,
தமிழ்நாட்டு வரலாற்று வெளியீட்டகம்,
சென்னை,
1976.

22. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு,
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை,
பத்தாம் பதிப்பு, 1991.

23. துரைசாமிப்பிள்ளை, சு. ஔவை, சைவ இலக்கிய வரலாறு,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
அண்ணாமலை நகர்,
இரண்டாம் பதிப்பு 1978.

24. தர்மலிங்கம், மு., பிரதோசமும் சிவவழிபாடும்,
வானதி, ஏ., திருநாவுக்கரசு
காளியம்மை ஆச்சி மணிவிழா
வெளியீடு,
1987.

25. நாகப்பா, நாச்சியப்பன், திருக்கோவில் வழிபாடு,
மணிவாசகர் பதிப்பகம்,
55, லிங்கத் தெரு,
சென்னை-1,
1991.

26. நாராயணசுவாமி, சிவாலயத் திருமேனிகள்,
திருவாடுதுறை ஆதீனம் வெளியீடு,
1999.

27. பரமகுரு, மரு., பரம்புமலை (திருக்கொடுங்குன்றம்),
மணிவாசகர் பதிப்பம்,
55, லிங்கத் தெரு,
சென்னை-1,
1992.

28. மேலது, குன்றக்குடித் தலவரலாறு,
பிரான்மலைவகை ஐந்து கோவில்கள்
தலைமை அலுவலகம்,
குன்றக்குடி,
நான்காம் பதிப்பு 2004.

29. பாலசுப்பிரமணியன், இரா.,
நாட்டுப்புற வாழ்வியல்,
சத்யா வெளியீடு,
திருநகர்,
மதுரை,
1990.

30. பாஸ்கரத் தொண்டைமான் (தொ.மு.),
தமிழ்க் கோவில்கள் தமிழர் பண்பாடு,
பப்ளிசர்ஸ்: எஸ்.ஆர்.
சுப்பிரமணியபிள்ளை,
திருநெல்வேலி - 1,
1961.

31. பெரிய பெருமாள், குன்றக்குடி,
குன்றக்குடி ஆதீன ஐந்து கோவில்கள்,
பிற விபரம் தெரியவில்லை.

32. பொன்னம்பல அடிகளார்,
சமய வாழ்வு,
திருமாறன் நிலையம்,
7.:.8, பீட்டர்ஸ் குடியிருப்பு,
ராயப்பேட்டை,
சென்னை – 14,
1999.

33. மேலது,
காற்றில் வந்த கருத்துமழை,
திருமாறன் நிலையம்,
7.:.8, பீட்டர்ஸ் குடியிருப்பு,
ராயப்பேட்டை,
சென்னை – 14,
2005.

34. மயிலை. சீனி வேங்கடசாமி,
எழுவகைத் தாண்டவம்,
சாந்தி நிலையம்,
சென்னை - 1.

35. மனோகரன், மீ.,
மருதுபாண்டிய மன்னர்கள் (3 பாகங்கள் அடங்கியது),
அன்னம் புக்ஸ்,
2, சிவன்கோவில் தெற்குத்தெரு,
சிவகங்கை.

36. மாணிக்கம், வ.சுப. (பதி.),
தமிழியற் காட்சிகள்,
பாரி நிலையம்,
சென்னை.

37. முத்துச்சாமி, சோ.மு.,
கோயிற் களஞ்சியம் அறிமுகம்,
தஞ்சாவூர் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
1991.

38. முருகவேள், நா.ரா.,
தெய்வத் திருவுருவங்கள்,
தனிகை பதிப்பகம்,
சென்னை.

39. முருகன்.	அருள்மிகு வெட்டுடையார் காளியம்மன் திருக்கோவில், அரியாக்குறிச்சி, 1987.

40. மெய்யப்பன், ச.,	தில்லைக்கோவில், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1986.

41. மோகன், க.,	பொன்னான அடிகளார், நிதிப்பிரபா வெளியீடு, காரைக்குடி, 2008.

42. ராசவேல், சு, சோத்திரி.அ.கி.,	தமிழ்நாட்டுக் குடைவரைக் கோவில்கள், பண்பாட்டு வெளியீட்டகம், சென்னை, 2000.

43. வள்ளி சொக்கலிங்கம்,	திருப்பத்தூர், தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை-28, 1981.

44. வெள்ளைவாரணம், தா.ம.,	திருமுறைகளில் வழிபாட்டில் திருக்கோவில் கருத்தரங்கம் ஆய்வுக்கோவை, பிள்ளையார்பட்டி, 1997.

45. வேலுப்பிள்ளை.ஆ, டாக்டர்,	தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ல.கிரு'ணன், பதிப்பாளர், சென்னை – 1, முதற்பதிப்பு 1969.

46. வைத்தியலிங்கம், செ.,	தமிழகக் கவின் கலை மாட்சி, செல்லமுத்தகம், பரங்கிப்பேட்டை, 1980.

47. ஜெய செந்தில்நாதன்,	திருமுறைத் தலங்கள், ஸ்ரீ சங்கரமடம் காஞ்சிபுரம், தமிழ் நிலையம், தி. நகர், சென்னை-17, இரண்டாம் பதிப்பு.

ஆய்வேடு


48. சங்கீதா, சு.

சிவகங்கை மாவட்ட குடைவரைக் கோவில்கள் - ஓர் வரலாற்று ஆய்வு.
முதுகலைப்பட்ட ஆய்வேடு.
அழகப்பா பல்கலைக்கழகம்.
காரைக்குடி.
2014.

49. சற்குணம், இரெ.

குன்றக்குடி ஆதீனத் தமிழ்ப்பணி.
முனைவர்பட்ட ஆய்வேடு.
அழகப்பா பல்கலைக்கழகம்.
காரைக்குடி.
2005.

50. மோகன், க.

குன்றக்குடி ஆதீனம் தவத்திரு பொன்னம்பல அடிகளாரின் படைப்புகள் - ஓர் ஆய்வு.
ஆய்வியல் நிறைஞர்பட்ட ஆய்வேடு.
அழகப்பா பல்கலைக்கழகம்.
காரைக்குடி.
2006.

## பின்னிணைப்புகள்

## பேட்டி எண்: 1

| | | |
|---|---|---|
| பெயர் | : | சிதம்பரப்பட்டர் |
| தொழில் | : | அர்ச்சகர் |
| ஊர் | : | பிரான்மலை |
| வயது | : | 75 |
| நாள் | : | 20.02.2012 |
| பேட்டியாளர் | : | பா. தியாகராஜன் முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி |

1. கொடியேற்றம் எந்தத் தளத்தில் நிகழும்?

இங்கு கொடியேற்றுதல் என்பது கீழ்த்தளத்தில்தான். கொடுங்குன்றநாதர் திருக்கோவிலில் உள்ள கொடிமரத்தில் தான் கொடியேற்றம் நிகழ்த்தப்படும்.

2. எந்த நட்சத்திரத்தில் காப்புக் கட்டப்படுகிறது?

சித்திரை மாதம் மிருகசீரிட நட்சத்திரத்தில் காப்புக்கட்டிச் சித்திரை நட்சத்திரம் பௌர்ணமியோடு காப்பு அவிழ்க்கப்படுகிறது.

3. தேர் கட்டுதல் எதனால்?

எல்லாக் கோவில்களிலும் மூங்கிலில் கட்டுவது போல இக்கோவிலிலும் மூங்கிலில் தான் தேர் கட்டப்படுகிறது.

4. தேர் கட்டுதல் யார்?

தேர் கட்டுதல் என்பது நாயக்கர்களின் பணியாகும்.

5. காப்பு யார் யாருக்குக் கட்டப்பெறுகிறது?

சிதம்பரப்பட்டர் தான் கொடுங்குன்றநாதருக்குக் காப்புக் கட்டுவார். சிதம்பரப்பட்டர் தானே காப்புக் கட்டிக்கொள்வார். (மஞ்சள் காப்பு)

6. ஓதுவார் எத்தனை பேர்?

மா. சிவராமன், ரா. வடுகையா என இருவர் உள்ளனர்.

7. பிரான்மலை என்பதற்கான பெயர்க்காரணம் யாது?

திருஞானசம்பந்தர் எம்பிரானே என்று பாடியமையால் இது பிரான்மலை எனப்பட்டது.

## பேட்டி எண்: 2

| | | |
|---|---|---|
| பெயர் | : | ஆறு. சோமு |
| தொழில் | : | வசூல் மணியம் (வசூல்காரர்) |
| ஊர் | : | பிரான்மலை |
| வயது | : | 59 |
| நாள் | : | 20.05.2012 |
| பேட்டியாளர் | : | பா. தியாகராஜன்<br>முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை,<br>அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி |

1. கோவில் பணியாளர்கள் எத்தனை பேர்?

இருபத்தைந்து பணியாளர்கள் உள்ளனர்.

2. கோவில் பணியாளர்களுக்கு ஊதியம் கொடுப்பது யார்?

இவர்களுக்குரிய ஊதியத்தை ஆதீனம் தான் கொடுக்கின்றது.

3. யார் யாருக்கு மானியம் விடப்பட்டு உள்ளது?

பட்டர், ஓதுவார், கணக்கப்பிள்ளை, வைராவி, தொழிலாளி (சிற்பத் தச்சர்), காவலர் ஆகியோருக்கு மானியம் விடப்பட்டள்ளது.

4. கோவிலக்கு ஒரு மாதத்திற்கு எவ்வளவு செலவாகும்?

ஒரு மாத்திற்குரிய செலவு மொத்தம் 2400 ரூபாய் ஆகும். மின் கட்டணம் இரண்டு மாதங்களுக்கு 700 ரூபாய் ஆகும்.

5. கோவிலக்குக் கிடைக்கும் மாத வருமானம் எவ்வளவு?

கோவிலக்கு மாத வருமானம 600 ரூபாய். திருவிழாக் காலங்களில் இவற்றைவிடக் கூடுதலாக வரும்.

6. கோவிலக்குரிய சொத்துக்கள் யாவை?

நிலங்கள், தோப்பு, தென்னைமரம் போன்றவை உண்டு. நிலங்கள் பிரான்மலை, வையாபுரிப்பட்டி, மேட்டுப்பட்டி, பொன்னடைப்பட்டி, சிறுமருதூர் போன்ற ஊர்களில் உள்ளன.

7. திருப்பணி செய்தவர்கள் யார்?

அருவியூர் தெற்கு வளவு நகரத்தார்கள், அருவியூர் வடக்கு வளவு நகரத்தார்கள், மதகுப்பட்டி முத்துராஜ சமூகத்தினர், பிரான்மலை கிராமத்தார்கள் போன்றவர்கள் திருப்பணி செய்தவர்கள்.

8. திருவிழாக்களுக்கு நிருவாகம் செலவு செய்யுமா? எவ்வளவு?

திருவிழாவுக்கு நிருவாகம் செலவு செய்யும் தொகை மொத்தம் 75 ரூபாய் ஆகும்.

9. ஆபரணங்கள் எல்லா கடவுளர்க்கும் உண்டா?

ஆம், எல்லா கடவுளர்க்கும் ஆபரணங்கள் இருக்கின்றன.

## பேட்டி எண்: 3

| | | |
|---|---|---|
| பெயர் | : | கவிஞர் மரு. பரமகுரு |
| ஊர் | : | குன்றக்குடி |
| வயது | : | 70 |
| நாள் | : | 25.05.2012 |
| பேட்டியாளர் | : | பா. தியாகராஜன்<br>முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை,<br>அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி |

1. சயந்தன் என்பவன் யார்? எதனால் சயந்தன் பூசை கொண்டாடப்படுகிறது?

   சயந்தன் என்பவன் இந்திரனின் மகன். தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் இடையே போர் ஏற்பட்டது. அப்போது சயந்தன் இத்தலத்தில் உள்ள பைரவரை வணங்கினமையால் வெற்றி கிடைத்தது. அதன் விளைவாகத்தான் சயந்தன் பூசை கொண்டாடப்படுகிறது.

2. ஒரு கோவிலில் இரண்டு ஆகம மரபுகளைப் பின்பற்றலாமா?

   திருக்கொடுங்குன்றம் என்பது ஒரு தலம். ஆனால் கோவில் இரண்டு அதனால் இரண்டு வகையான ஆகமங்கள் இருக்கலாம்.

## பேட்டி எண்:: 4

பெயர் : இரா. நமச்சிவாயக் குருக்கள்
வயது : 64
தொழில் : அர்ச்சகர்
ஊர் : திருக்கோளக்குடி
நாள் : 15.06.2012

1. இங்குக் கொண்டாடப்படும் விழாக்கள் யாவை?

திருக்கோளக்குடியில் ஆனித்திருமஞ்சனத் திருநாள் மட்டும் இக்கோவிலில் கொண்டாடப்படுகிறது. வேறு ஒன்றும் இல்லை.

2. ஆனித் திருமஞ்சனம் எத்தனை நாள் திருவிழா?

திருக்கோளக்குடியில் முதலில் ஐயனார் கோவிலில் பத்து நாள் திருவிழாவும் பிறகு பிடாரி கோவிலில் பத்து நாள் திருவிழாவும் நடந்து முடிந்த பின்னரே ஆனி மாதம கேட்டை நட்சத்திரத்தில் ஆனித் திருமஞ்சனத்திருவிழா கொண்டாடப்படுகிறது. பத்து நாள் திருவிழாவானது. முதல் நாள் காப்புக்கட்டிக் கொடியேற்றுதல் தொடங்கி பத்தாம் நாள் தீர்த்தவாரி கொடியிறக்கத்துடன் முடியக் கூடியது.

3. காப்பு யார் யாருக்கு யாரால் கட்டப்பெறுகின்றது?

இதற்குப் பஞ்சமூர்த்திகளுக்கும் காப்புக்கட்டுவர். இதற்காக ஆவுடையார் கோவிலிலிருந்து சிவாச்சாரியார் வருவர் அவர்களும் காப்புக்கட்டிக் கொள்வர். இவர்களுக்குக் கட்டப்படும் காப்பு பொன்னாலானது.இக்கோவிலக்கு உரிமைப்பட்டோர் வந்து மஞ்சள் காப்புக் கட்டிக்கொள்வர்.

4. கொடியேற்றம் எப்படி நிகழும்?

மூன்று தளத்திற்கும் பொதுவாக மத்தியம் தளத்தில் அமைந்துள்ள கொடிமரத்தை ஆகமப்படி அலங்கரித்து 8 அல்லது 16 முழ புதிய வெள்ளைத் துணியில் நந்தி உருவத்தை வரைந்து அதைக் கொடியாக ஏற்றுவர். இது 'துவஜாரோகணம்' எனப்படும்.

5. திருவிழாவிற்கு அழைப்பு யார் யாருக்கு எப்படி அனுப்பப்படுகிறது?

ஐந்து கோவில்களுக்கும் 'ஸ்ரீமுகம்' மூலம் அழைப்பு அனுப்பப்படும். கோவிலக்கு உரிமையுடைய ஐந்து கிராமத்தாருக்கும் அழைப்பு (ஸ்ரீமுகம்) ஆள் மூலம் அனுப்பப்படும்.

6. ஐந்து கோவில்கள் எவை?

1. குன்றக்குடி, 2. திருப்பத்தூர், 3. பிரான்மலை, 4. தேனாச்சியம்மன், 5. திருக்கோளக்குடி.

7. திருவிழாவிற்கு மண்டகப்படி உண்டா?

முன்பு பத்துநாளும் மண்டகப்படி உண்டு. ஆனால் இப்பொழுது நிர்வாகமே அனைத்து நாள் விழாவையும் நடத்துகின்றது. நான்காம் நாள் குன்றக்குடி ஆதீன மண்டகப்படி நடைபெறும். தேர் அன்றும் சிறப்பாக நடத்த ஆதீனம் வருவார்.

8. தேர் கட்டுவது எதனால்?

பொதுவாக எல்லாக் கோவில்களிலும் தேர் கட்டும் மூங்கில்கள் கயிறு கொண்டு கட்டப்படும். ஆனால் இங்கு 'மரை' என்னும் கொடி கொண்டு கட்டப்படுகிறது. தேர் கட்டுவது வண்ணானின் பணி.

9. தேர் இழுக்கும் உரிமை யாருக்குண்டு?

முதலிடம் கோவிலக்குரிய கிராமத்தாருக்கு. பூங்குன்ற நாட்டைச் சார்ந்த 24 கிராமத்தாரும் தேரிழுப்பதற்கு வருவர். கல்வாசல் நாட்டைச் சேர்ந்த கிராமத்தாரும் சிறுபான்மை வருவதுண்டு. "அனைத்துச் சாதியினரும் தேரிழுப்பர்".

10. திருவிழாவில் தலத்தாரின் பங்கு என்ன?

திருவிழாவை ஆதினம் நடத்துகின்றது. இவர்களின் பங்கு விழாவில் கலந்து கொள்வது மட்டுமே.

## பேட்டி எண்: 5

| | | |
|---|---|---|
| பெயர் | : | சோ. சுப்பிரமணியன் |
| வயது | : | 47 |
| தொழில் | : | வசூல்மணியம் (வசூல்தாரர்) |
| ஊர் | : | பழைய திருக்கோளக்குடி |
| நாள் | : | 10.05.2012 |

1. கோவில் பணியாளர்கள் பற்றிய விபரங்கள் யாவை?

இங்குக் குருக்கள், வைராவி, மெய்க்காவல், வாத்தியக்காரர், தச்சர், கொல்லர், குடும்பர், காவல் எனப் பலர் பணிபுரிகின்றனர். இவர்களுக்கு ஊதியமில்லை. மானியமாக நிலம் விடப்பட்டுள்ளது.

2. குடும்பர் யார்? அவர்களின் வேலை என்ன?

குடும்பர் என்பவர் பள்ளர்கள். இவர்கள் கோவிலில் உள்ள புல், பூண்டுகளைச் செதுக்கக் கூடியவர்கள்.

3. இவர்கள் கோவிலக்குள் வரலாமா?

சாதி பாகுபாடின்றி அனைவரும் வரலாம்.

4. கோவிலக்குரிய சொத்துக்கள் யாவை?

கோவிலக்குச் சொந்தமாகப் பல ஊர்களில் நிலம் உண்டு. வேறு கட்டடங்கள் போன்ற சொத்துக்கள் இல்லை.

5. சுமார் எவ்வளவு நிலங்கள் உள்ளன? எந்த வகையானவை?

50 ஏக்கர் கோவிலக்குரியவை. மற்றவை தேவஸ்தானத்திற்குரியன. நஞ்சை, புஞ்சை இரண்டும் உண்டு.

6. நஞ்சையின் நடப்பு முறை என்ன?

ஒவ்வொரு வருடமும் ஒருவரே நிலத்தில் பயிரிடலாம். விளைச்சலில் சரிபாதிப் பங்கு, கோவிலக்குக் கொடுத்துவிட வேண்டும். அவ்வாறு கொடுக்கவில்லை என்றால் அடுத்த வருடம் நிலம் வேறொருவரிடம் விளைச்சலுக்கு விடப்படும்.

7. புஞ்சை நிலத்திலும் மேற்கண்ட முறையே பின்பற்றப்படுகிறதா?

இல்லை. 10 செண்ட் புஞ்சை நிலம் எனில் ஒரு செண்ட்டுக்கு ஒரு ரூபாய் வீதம் இரசீது கொடுக்கப்பட்டு அந்த விகிதத்தில் பணம் வசூலிக்கப்படும். அந்நிலத்தில் விளையும் தானியமும் ஒரு பங்காக

வசூலிக்கப்பெறும். இதில் கடலை, கத்தரி, மிளகாய், தக்காளி போன்றன பயிரிடப் பெறுகின்றன.

8. வட்டப்பாறையில் சத்தியம் பண்ணும்போது காணிக்கை செலுத்த வேண்டுமா? எவ்வளவு?

ஆம். பிரிவதற்காகச் சத்தியம் செய்யும்போது காணிக்கையாக ரூ.6.25 கட்டவேண்டும். முன்பு பிரிந்தவர்கள் மறுபடியும் சேரும்போது ரூ.12.50 கட்டவேண்டும்.

9. ஆபரணங்கள் எல்லாம் கோவிலில் இருக்கின்றனவா?

இருக்கின்றன. பாண்டியர், சோழர் காலக் காசுமாலையெல்லாம் உள்ளது. இன்றைய மதிப்புக்கு பத்து இலட்சம் பெறும்.

10. சராசரியாக ஒரு மாதத்திற்கு எவ்வளவு செலவாகும்?

| | | |
|---|---|---|
| சிப்பந்திகள் சம்பளம் | : | ரூ. 1500 |
| மின் கட்டணம் | : | ரூ. 500 |
| படித்தரச் சாமான்கள் | : | ரூ. 1000 |
| அரிசி | : | 80 கிலோ |

இவை குறைந்தபட்ச செலவுகள் ஆகும்.

## பேட்டி எண்: 6

| பேட்டியாளர் | | | பேட்டி கண்டவர் |
|---|---|---|---|
| பெயர் | : | ஆர். காளீஸ்வர குருக்கள் | பா. தியாகராஜன் |
| வயது | : | 48 | முனைவர் பட்ட ஆய்வாளர் |
| தொழில் | : | கோவிலில் பூசைசெய்பவர் | தமிழ்த்துறை |
| இடம் | : | சிராவயல் | அழகப்பா பல்கலைக்கழகம் |
| நாள் | : | 12.06.2012 | காரைக்குடி |

1. தேனாட்சியம்மன் என்ற பெயர் எப்படி வந்தது?

பலவான்குடி தேனாற்றிலிருந்து இவ்வம்மனைக் கண்டெடுத்ததால் தேனாட்சியம்மன் என்ற பெயர் வந்தது. தேன் போன்று இனிமையான கண்களை இவ்வம்மன் பெற்றிருப்பதால் தேனாட்சி என்றும் கூறுவர். தேனாற்றிலிருந்து எடுக்கப்பட்டதினால் தேனாட்சி என்று கூறுவாரும் உளர்.

2. இத்திருக்கோவில் தோன்றிய வரலாறு உங்களுக்குத் தெரியுமா?

துல்லியமாகத் தெரியாது. தேனாற்றினின்றும் எடுக்கப்பட்ட தெய்வத்தை அப்பொழுது ஆட்சி செய்துகொண்டிருந்த ராணி பூதக்கா நாச்சியிடம் ஒப்படைத்துள்ளனர். ராணி அம்மனை வடக்கு முகமாக நிறுவி வழிபட்டு வந்துள்ளாள். அதன் பின்பு மருது சகோதரர்கள் வந்ததாகக் கூறுகிறார்கள்.

3. இத்திருககோவிலில் நடந்த திருப்பணிகளைப் பற்றி விரிவாகக் கூற முடியுமா?

முதன்முதலில் மருதுபாண்டியர்கள் தாம் தேனாட்சியம்மன் கோவிலக்குத் திருப்பணிகளைச் செய்துள்ளனர். கிழக்கு முகமாக இருந்த அம்மனை வடக்கு முகமாக நிறுவி கருவறை, அர்த்தமணடபத்தை மாடக்கோவிலில் போன்று நிறுவி, வழிபாட்டை ஏற்படுத்தினார்கள். அதன் பின்பு கம்மாக்கரை அழகப்பச் செட்டியார் தேனாட்சி அம்மன் கோவிலக்குக் கிழக்குப் பகுதியில் அமைந்துள்ள திருக்குளத்தினைக் கட்டிக் கொடுத்தார்கள்.

4. குடமுழுக்கு எப்பொழுதெல்லாம் நடந்தது?

தேனாட்சியம்மன் கோவிலில் 1897-ம் ஆண்டு குடமுழுக்கு நடந்துள்ளது. அதன்பின் 1971-ம் ஆண்டும், 1987-ம் கோவில் புதுப்பிக்கப்பட்டுக் குடமுழுக்கு நடத்தப்பெற்றது.

5. தேனாட்சி அம்மனை எந்த கிராமத்து மக்களெல்லாம் வணங்குவர்?

தேனாட்சியம்மனைக் கண்டிரமாணிக்க வளநாட்டைச் சேர்ந்த 14 ½ கிராமத்து மக்கள் வழிபடுவர்.

1. கண்டிரமாணிக்கம்
2. சிராவயல்

3. பிள்ளையார்பட்டி
4. மருதங்குடி (1.்.2 கிராமம்)
5. சென்னக்குடி
6. குமாரப்பேட்டை
7. வைரம்பட்டி
8. சிறுகூடற்பட்டி
9. நாச்சியாபுரம்
10. கொரட்டி தட்டபட்டி - 1 கிராமம்
11. கீழயப்பட்டி
12. துளாவூர்
13. தெங்கரை
14. அதிகரம்
15. கிளாமடம்

6. நகரத்தார்களுக்கு இத்தெய்வம் குலதெய்வமாக இருப்பது குறித்து விளக்கமாகக் கூற இயலுமா?

நகரத்தார்களில் உள்ள பல பிரிவினர்களில் வைரவன் கோயிலைச் சார்ந்தவர்களும் ஒரு பிரிவினர். இவர்கள் தங்கள் குழந்தைகளுக்கு இத்தெய்வத்தின் பெயரினை ஒட்டித் தேனப்பன், தேனம்மை என்று பெயர் வைப்பார்கள். அவர்கள் மகன் அல்லது மகள் திருமணத்தின்போது கட்டாயம் இங்கு வந்து வழிபட்டுச் செல்வார்கள். நான் திருமணத்தின்போது மாலை கொடுத்து வருவேன்.

7. திருமேனிக் கருப்பரின் தோற்றம் குறித்துக் கதை ஏதேனும் உண்டா?

நகரத்தார்கள் வாணிகத் தொழில் காரணமாய் மலையாள நாட்டிற்குச் சென்றனர். அங்கு திருமேனிக் கருப்பர், சின்னக் கருப்பரின் சிலைகள் கிடைத்தன. அச்சிலைகளைப் பதினெட்டாம்படிக் கருப்பரின் கோவிலில் வைத்துப் பூசை செய்து விட்டுத் தங்கள் ஊரான தேனிப்பட்டிக்குச் செல்லும் வழியில் தேனாட்சியம்மன் கோவிலருகில் அச்சிலைகளை இறக்கி வைத்து இளைப்பாரியபின் அச்சிலைகளை அவ்விடத்தினின்றும் நகர்த்த முடியவில்லை. ஓர் குரல் நான் இங்கே தங்கிவிடுவதாக ஒலித்தது.

8. தேனாட்சியம்மனுக்கும் திருமேனிக் கருப்பருக்கும் பூசை செய்பவர் ஒருவரா? வேறு வேறாக இருக்கிறார்களா?

தேனாட்சியம்மனுக்கும் திருமேனிக் கருப்பருக்கும் பூசை செய்பவர்கள் வேறு வேறானவர்களாவர். தேனாட்சியம்மனுக்குப் பூசை செய்பவர் குருக்கள். திருமேனிக் கருப்பருக்குப் பூசை செய்பவர் வேளார்.

9. தேனாட்சியம்மன் நாச்சியார் குடும்பம் என்று கூறுவது எதற்காக?

1) தேனாட்சி
2) காட்டு நாச்சி
3) பெரிய நாச்சி
4) கொங்க நாச்சி

5) அழகு நாச்சி
6) வயல் நாச்சி
7) மாணிக்க நாச்சி
8) பரநாச்சியம்மன்

இவ் எண்மருக்கும் அக்கா தங்கை உறவுமுறை உண்டு என்பதால் தேனாட்சி ஒரு நாச்சியார் குடும்பத்தைச் சார்ந்தவள் எனலாம்.

## பேட்டி எண்: 7

பேட்டியாளர்

| | | |
|---|---|---|
| பெயர் | : | கா. இராமையாக் குருக்கள் |
| வயது | : | 25 |
| தொழில் | : | கோவிலில் பூசை செய்பவர் |
| இடம் | : | தேனாட்சியம்மன் கோவில் |
| நாள் | : | 01.04.2012 |

1. தேனாட்சியம்மன் வழிபாட்டு முறை ஆகமத்தைப் பின்பற்றி நடைபெறுகிறதா? அப்படியானால் எந்த ஆகமம்?

   தேனாட்சியம்மன் வழிபாட்டுமுறை காரணாகம முறைப்படியும், தேவி பிரதிஸ்டாபதி முறைப்படியும் பூசை நடைபெறுகிறது.

2. நித்திய பூசை உண்டா? அதன் விபரங்களைச் சொல்ல முடியுமா?

   நித்திய பூசைகள் உண்டு.

| | | |
|---|---|---|
| காலைச்சந்தி | : | காலை 8 மணி |
| உச்சிக்காலம் | : | பகல் 12 மணி |
| சாயரட்சை | : | மாலை 5 மணி |
| அர்த்தசாமம் | : | இரவு 8 மணி |

3. சைவப்பூசை இப்பொழுது தான் வழக்கில் உள்ளதா? முன்பிருந்தே இருக்கிறதா?

   மருதுபாண்டியர்கள் தேனாட்சியம்மன் கோவிலக்கு அருந்தொண்டுகள் ஆற்றுவதற்கு முன்பு வரை சைவப்பூசை கடைப்பிடிக்கப்படவில்லை. ஆனால், மருதிருவர் வேளாரை மாற்றிக் குருக்களே இங்கு பணிபுரிய வேண்டும் என்ற நியதி கொணர்ந்த பிறகு அன்றிலிருந்து இன்று வரையிலும் 14 தலைமுறைகளாகச் சைவப்பூசை நிகழ்த்தப் பெறுகிறது.

4. திருமேனிக்கருப்பர் வழிபாட்டில் ஆகமமுறை பின்பற்றப்படுகிறதா.

   எவ்வித ஆகம முறைகளும் பின்பற்றப்படவில்லை.

5. திருமேனிக்கருப்பருக்கு நித்திய வழிபாடு உண்டா?

நித்திய வழிபாடு உண்டு. நிகழும் ஒரு வேளை (அதாவது) உச்சிக்காலம் மட்டும் வழிபாடு நிகழ்த்தப்பட்டு சுத்தான்னம் படைக்கப்படுகிறது.

6. தேனாட்சியம்மனுக்கும், திருமேனிக்கருப்பருக்கும் உள்ள சிறப்பு வழிபாடுகளை விளக்கமாகச் சொல்லுங்கள்?

தேனாட்சி அம்மனுக்குரிய சிறப்பு வழிபாடுகளாவன:

| | | |
|---|---|---|
| 1) | சங்கராந்தி | (தை) |
| 2) | மாட்டுப்பொங்கல் | (தை) |
| 3) | சிவராத்திரி | (மாசி) |
| 4) | நவராத்திரி | (புரட்டாசி) |
| 5) | தீபாவளி | (ஐப்பசி) |
| 6) | திருக்கார்த்திகை | (கார்த்திகை) |
| 7) | மாசி பூஜை | |
| 8) | ஆடி பூஜை | |

திருமேனிக்கருப்பருக்குச் சிறப்பான வழிபாடுகள் என்று குறிப்பிட்டுச் சொல்லும்படி கிடையாது.

7. இத்திருக்கோவில்களில் என்னென்ன விழாக்கள் கொண்டாடப்படுகின்றன?

தேனாட்சியம்மன் கோவிலில் வருடாவருடம் சிறப்பாகச் சித்திரை திருவிழாவும், முப்பது வருடம் கழித்து வரும் சித்திரைத் திருவிழாவினையே (செவ்வாய்) மிகவும் சிறப்பான திருவிழா எனக் கருதிக் கொண்டாடுகின்றனர்.

திருமேனிக்கருப்பர் கோவில் திருவிழா: திருமேனிக்கருப்பருக்கு ஆண்டுக்கு ஒருமுறை ஆடி மாதம் இரண்டாவது வெள்ளிக்கிழமை ஆடிப்பூசை நடைபெறுகிறது. இப்பூசைக்கு கீழச்சிவல்பட்டி, மேலச்சிவல்பட்டி, தேனிப்பட்டி, ஓ. சிறுவயல், நாச்சியாபுரம் ஆகிய 5 ஊர் நகரத்தார்களும் கலந்துகொள்வர்.

மூன்றாண்டுகளுக்கு ஒருமுறை மாசி மாதத்தில் மேற்சுட்டிய 5 ஊர் நகரத்தார்களின் திருமணமான பெண்கள் ஒருங்கு கூடி மரக்கரிக்காய்ப் பூசை நடத்துவர். மஞ்சுவிரட்டு, சிறப்பு - கச்சைத் துண்டு, விபூதி.

8. விழாக்களில் ஊர்ப் பொதுமக்கள் எல்லோரும் கலந்துகொள்வதுண்டா? குறிப்பான இனத்தவர்கள் கலந்து கொள்வதுண்டா?

தேனாட்சியம்மன கோவில்ல் நடக்கும் திருவிழாவில் ஊர்ப் பொதுமக்கள் அனைவரும் கலந்து கொள்ளலாம். திருமேனிக் கருப்பர் கோவிலில் நடைபெறும் ஆடிப்பூசையிலும். மாசிப்பூசையிலும் நகரத்தார்கள் மட்டுமே கலந்துகொள்ள முடியும்.

9. விழாவிற்கென உரிமைப்பட்ட கிராமத்தார்கள் இருக்கிறார்களா?

இருக்கிறார்கள். பெரியதேரின் பெரியவடம் கண்டிரமாணிக்கப் நாட்டார். சின்னத்தேரின் சிறியவடம் சிராவயல் மேல்தெருவார் கிராமம் என்பவர்கள்.

## பேட்டி எண்: 8

பெயர் : எஸ். வி. பாஸ்கர் குருக்கள்
வயது : 50
ஊர் : திருப்புத்தூர்
தொழில் : குருக்கள்
நாள் : 10.05.2012

1. உங்களுக்கு ஊதியம் உண்டா?

இல்லை. நிலம் மான்யமாக விட்டுள்ளனர்.

2. கோவில் எந்த ஆகம முறைப்படி கட்டப்பட்டுள்ளது?

குாமிக ஆகம முறைப்படி கட்டப்பட்டுள்ளது.

3. திருப்பள்ளி எழுச்சி, தேவாரம், அபிராமி அந்தாதி ஆகியன ஒலிபரப்புக் கருவி மூலம் ஒலிபரப்பப்படுகின்றதா?

இல்லை. மாலை நேரத்தில் கண்ணாயிரம் என்பவர் வந்து பாடுவார். அவருக்குச் சம்பளம் உண்டு.

4. நாள்தோறும் எத்தனை காலப்பூசைகள்? அவை யாவை?

ஐந்து காலப்பூசை. திருவனந்தல், காலை சந்தி, உச்சிக்காலம், சாயரட்சை, அர்த்தசாமம். இத்துடன் விழாப்பூசை என்பதும் உண்டு. இது மூலவருக்கு மட்டுமே உரியது.

5. மோது கட்டுதல் என்றால் என்ன?

திருவிழாவிற்கு முன்பு அரிசி வைத்து புண்ணியாதானம் செய்வர். அதாவது திருவிழாவிற்கு முன் திருஷ்டி கழித்தல் போலச் செய்யப்படும் நிகழ்ச்சியே மோது கட்டுதல் எனப்படும்.

6. சங்கரஹர சதுர்த்தி என்றால் என்ன?

நந்திக்கும், சிவனுக்கும் மாலை 4 ½ மணி முதல் 6 ½ மணி அளவில் அபிடேகம் நடத்துவது.

7. சம்பக ச்டி என்றால் என்ன?

உற்சவமூர்த்திக்குச் செய்யும் அபிடேகம்.

8. முதல் திருச்சுற்றில் மேற்கு நோக்கி சூரியருக்கு அருகில் உள்ள சிற்பம் யாருடையது?

பைரவரவருடையது.

9. தேர் இருக்கிறதா? எத்தனை? யார் யாருக்கு?

மூன்று தேர்கள் உள்ளன. பெரிய தேர் மூலவருக்கும். அதைவிடச் சிறிய தேர் அம்மைக்கும், அதைவிடச் சிறிய தேர் விநாயகருக்கும் உரியதாகும்.

10. வழிபாட்டு முறையில் எந்த ஆகமம் பின்பற்றப்படுகிறது?

காமிக ஆகம முறையே பின்பற்றப்படுகிறது. சில சமயங்களில் காரணாகம முறையும் பயன்படுத்தப்படுகிறது.

11. நைவேத்திய பொருட்கள் எவை?

காலை, உச்சிக்காலம், சாயரட்சையின்போது புளியோதரையும், அர்த்த சாமத்தில் சம்பா சாதமும் படைக்கப்படுகின்றன. பைரவருக்கு வடையும் சம்பா சாதமும் படைக்கப்படும்.

12. பத்துநாள் திருவிழா உண்டா? எப்போது?

உண்டு. வைகாசி மாதம் விசாகப் பெருந்திருவிழா பத்துநாள் நடைபெறும்.

13. பத்துநாள் திருவிழாவின்போது ஏற்படும் செலவை யார ஏற்பர்?

அந்தந்த மண்டகப்படிதாரர் ஏற்றுக்கொள்வர்.

14. வேறு சிறப்பு விழா உண்டா?

பைரவருக்குரிய சயந்தன் விழா வெகுவிமரிசையாக நடைபெறும்.

15. இக்கோவில் நிர்வாகத்தைக் கவனித்து வருபவர் யார்?

இக்கோவில் ஐந்து கோவில் தேவஸ்தானத்தைச் சேர்ந்தது. குன்றக்குடி அடிகளார் தேவஸ்தானத்தின் தலைவராக இருந்து நிர்வகித்து வருகிறார்.

16. இத்திருக்கோயிலை வைரவக்கோவில் என்று மக்கள் அழைப்பது ஏன்?

திருத்தளிநாதர் என்று சொல்லுவது கடினமாக இருப்பதால், பேச்சுவழக்கில் எளிமையாக இப்படிக் கூறுகின்றனர்.

17. நீங்கள் இக்கோவிலில் பரம்பரையாகப் பணிபுரிந்து வருகின்றீர்களா?

ஆம். நான் எட்டாவது தலைமுறை.

18. இக்கோவில் எத்தனை ஆண்டுக்கு முற்பட்டது?

2000-ஆம் ஆண்டுக்கு முற்பட்டது.

19. இது பாடல் பெற்ற தலமா?

ஆம். ஞானசம்பந்தர், நாவுக்கரசர், அருணகிரிநாதர் போன்றோர் பாடியுள்ளனர்.

20. இக்கோவிலக்குச் சொந்தமாக நிலங்கள் உள்ளனவா?

ஆம். நஞ்சை, புஞ்சை ஆகிய இரு நிலங்களும் உள்ளன.



குன்றக்குடி - குடைவரைக் கோவில்




குன்றக்குடித் திருக்கோவில்




அட்டதிக் பாலகர்கள் - தங்கள் வாகனங்களுடன்




பழனியாண்டவர் சந்நிதி




மருதுபாண்டியரின் பிளவை நோய் தீர்த்த வரலாறு




மருதுபாண்டியர் சதாசேவை




திருக்கோளக்குடி




மலையில் குடைந்து அமைக்கப்பட்ட விநாயகர் (குடைவரைச் சிற்பம்)




பொய்யாமொழீசுவரர் ஆலயம்




சப்த கன்னியர்




மலை உச்சி - பழனியாண்டவர் சந்நிதி




மலை உச்சி ஸ்தூபி







பிரான்மலைக் கோவில்




பைரவர்




துவார பாலகர்




முல்லைக்குத் தேர் கொடுத்த பாரி




கோவில் கல்வெட்டு



சிறாவயல் தேனாட்சியம்மன் கோவில்




வெங்கலப்ப நாயக்கர் சதாசேவை




மின்னஞ்செட்டி காளி பாதம்




இடைச்சியம்மன்




பழம் தின்னும் கிளி - கலை அழகு



வெள்ளைக்காரதுரை நூல் படிக்கும் காட்சி



திருப்புத்தூர் ஆடல்வல்லான் திருச்சபை



தல விருட்சம் -
வால்மீகி முனிவர் தவம் செய்யும் இடம்



யோக பைரவர் சந்நிதி முகப்பு



பொள்ளாப் பிள்ளையார்



நால்வரின் சிற்பங்கள்



கோவிலின் உட்பிரகாரம்

குன்றக்குடிக் குடைவரையில் காணப்படும் புராதான சிற்பங்கள்




துர்க்கை




விஷ்ணு




வீரன் துர்க்கைக்குக் காணிக்கையாகத் தனது தலையை வெட்டிக் கொள்ளும் நவகண்டம்




திருமால் சங்கு சக்கரத்துடன் (ஒரு பாகம் ஆண் - மறு பாகம் பெண்)

